# அஞ்ஞான நிவாரணம்.

இஃது
மகா பேர்போன
ரேபேர்த்து தே நோபிலியாகிய
தத்துவ போதகரென்னும்
இயேசு சபை சுவாமியவர்களால் இயற்றப்பட்டு,

இயேசு சபைக் குருக்களிலொருவரால்.

**மரிய அருளப்பர் பார்த்து**
என்னும் நாமதேயங்கொண்டிருக்கிற
**திருச்சினாப்பள்ளி மேற்றிராணியார்**
அவர்கள் அநுமதியின்பேரில்
பிரசுரஞ் செய்யலாச்சுது.



திருச்சினாப்பள்ளி.
வி. பாக்கியம் பிள்ளை அண்டு சன்ஸ்,
சவுத் இந்தியா டைம்ஸ் அச்சுக் கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

௲௮௱௯௰௧.

# முகவுரை.

அஞ்ஞான நிவாரண மென்கிற இச்சிறு புஸ்தகத்தை உண்டாக்கினவர் ROBERT DE NOBILI, S. J. என்னும் தத்துவபோதகர் சுவாமிதானென்று வெளிப்படுத்துவது அதற்குப் போதுமான புகழ்ச்சியாகும். அதிலடங்கியிருக்கிற நல்ல படிப்பினை கிறீஸ்தவர்களுக்கும் பிடிவாதமில்லாமல் எதார்த்தமாய் உண்மையைத் தேடுகிற உலகத்தாருக்கும் பிரயோசனமாயிருக்குமென்று அதை அச்சுப் பதிப்பித்தோம். அதிலே தமிழ் நடையும், நெடும் வசனங்களும் அனேகம் வார்த்தைகளும் இக்காலத்தில் வழங்கிவருகிற தமிழ் பாஷையோடு கொஞ்சம் வேற்றுமையா யிருந்தாலும், அத்தனை கனமுள்ள ஆசிரியர் செய்ததை மாற்றக் கூடாதென்று அதைத் தத்துவபோதகர் சுவாமி தந்தபடியே பிரசுரம் பண்ணினோம். இந்தப் பிரபந்தம் உண்டான நாள் முதற்கொண்டு இந்நாள்வரைக்கும் கையெழுத்துப் பிரிதிகளாய் மாத்திரம் பரம்பினதில் அனேகம் பிழைகள் நுழைந்திருப்பது ஆச்சரியமில்லை. நமக்குக் கிடைத்த கைப்பிரிதியிலே பல பல இடங்களில் அர்த்த முதலாய்க் கண்டுபிடிக்க அரிதாய்ப் போச்சுது. இப்போதும் அதைத் திருத்திக் கொடுக்கக் கூடினமட்டும் பிரையாசப்பட்டிருந்தாலும் சுத்தமாயில்லையென்று சொல்லுகிறதற்கு நம்பிக்கை பத்தாது. ஆகையால் இதை வாசிக்கும் கல்விமான்கள் ஓரோர் பிழையிருந்தாலும் கண்டிப்பாய்ப் பாராமல் பொருத்துக்கொள்ள மன்றாடுகிறோம்.

# அஞ்ஞான நிவாரணம்.

## விவேகம்.

அக்கியான நிவாரணத்தைச் சாங்கோபாங்கமாகப் பண்ணுகிறதுக்கு ஞானப்பிரகாசத்தைத் தந்தருளுகிறவரும், சுயம்பர கர்த்தனயிருந்து மட்டில்லாத கீர்த்தி சோபனத்தினலே பிரதாபிக்கிறவரும், பூதவற்தமான பவுஷியகாலம் என்னப்பட்டயாவையும் அடக்கி அநாதியும் மட்டுக் கண்டிப்புப் பிரமாணமில்லாமல் கண்ட பிரகாரமாக அசரீரியும், ஒன்றுமில்லாதிருக்கச் செய்தே உலகமாகட்டென்கிற வார்த்தையைத் தீர்மானித்தவுடனே வஸ்துவென்னப்பட்ட யாவையும் சிஷ்டிக்கிறவரும், அளவில்லாத கிருபாகடாட்சத்தினலேயும் ஒப்பில்லாத கிரமமுள்ள விமரிசையினலேயும் சர்வத்தையும் இரட்சிக்கிறவரும், தரும இஷ்டருக்கு இஷ்டப்பரிபாலனயிருந்து தப்பில்லாத நியாயத்தின்படியே பாவ ஆத்துமாக்களுக்குத் துஷ்ட நிற்கிறகம் பண்ணுகிறவரும் அளவறுக்கப்படாத ஞானத்தினலே தம்முடைய தேவசுபாவத்தையும் அதிலே உண்டான பொருளென்னப்பட்ட யாவையும் பரிபூரணமாக அளவறுக்கிறவரும், பிரத்தியட்சமான தெரிசனத்தினலேயும் சினேகத்திலேயும் பொல்லாப்பினுடைய கலப்பில்லாமல் சம்பூரணமான பூர்த்தியை வருவிக்கிற பரமாநந்தமான மோக்ஷத்தை அநுபவிக்கிறவரும், மனேவாக்குக் கெட்டாததும் புத்திச் சன்னிதானத்தில் அடங்காததுமாயிருக்கிற சகல நன்மைச் சுபாவமும் சர்வலோகத்திலே அடங்காததும் எங்கும் வியாபித்திருக்கிறவருமான, சர்வத்துக்கும் ஆதியும் அவதியுமாயிருக்கிற ஏகபராபர வஸ்துவாகிய சர்வேசுரனுக்கு நமஸ்காரம் பூசை தோத்திரம் அர்ச்சினைக்குரிய பாடுகள் என்னப்பட்ட யாவும் உண்டாகக்கடவது.

விவேகமுற்று.

# அக்கியான நிவாரணத்தின் முதற் சல்லாபம்

விக்கிரம வருஷம் மாசிமாதம் 30௳ புதன்கிழமை சூரியன் அஸ்தமிக்கிற சமயத்திலே, அம்மாவாசை காலமாயிருந்தபடியினாலே, சூரியனோடேகூட சந்திரனும் அஸ்தமித்து, இரண்டு நாழிகைக்குப் பிற்பாடு, பிரகாசமெல்லாம் காணாதேபோனதுந் தவிர, இரத்தினங்களைவிட மிகவும் அதிசயித்திருக்கிற நட்சத்திரங்களினாலே பதித்திருக்கிற மண்டலமும், கிரகங்களுடைய மண்டலங்களும், வெகு கருப்புள்ள மேகங்களினாலே மறைந்துபோனது. இந்தத் தறுவாய்களிலே இந்தப் பிரபஞ்சத்திலே தரிசன சக்கரத்தின்மேல் எங்கும் பயங்கரமான அந்தகாரமுண்டாய், வச்சிரக் கோமேதகம் வைடூரியம் இது முதலான ஒன்பது இரத்தினங்களுக்கும் ஒளிவு பிரகாசமில்லாமல், மிகவும் அழகுள்ள வஸ்துவென்னப்பட்ட யாவும் அசிஷ்டமாய்ப் போயிற்று. மிருந்த வேடிக்கையோடே பொருந்தியிருக்கிற அபூர்வமான விருக்ஷங்களினாலே விளங்குகிற சிங்காரத் தோப்புகளுக்கும் காட்டிலிருக்கிற முண்மரங்களுக்கும் வேற்றுமை இல்லாமல் போச்சுது. இராசாக்களுடைய வெகு நேர்த்தியுள்ள அரண்மனைகள் தாரித்திரருடைய நீசமான குச்சுகளுக்குச் சமானமாச்சுது. இராசதானிப் பட்டணங்களும் பட்டிக்காடுகளும் சரி சமானமாயின. சிவப்பு, பச்சை, குங்கும இதுமுதலான நிறங்களினாலே பிரகாசிக்கிற சித்திர வேலையெல்லாம் ஒரு வர்ணமாய்ப் போச்சுது. பால், பஞ்சு, வெள்ளி, முத்துக்கள் முதலான வெண்மையைக் கொண்டிருக்கிற பொருட்களெல்லாங் கருத்துப்போச்சுது. பூமாலைகள் பாம்புபோலே காண்பிக்கிறது. பகல் நேரத்திலே காதுக்கு இன்பமான குரல்களினாலே மதுரமான இராகங்களைப் பாடுகிற பட்சிகள் மவுனமாயிருக்கிறதுந்தவிர, பயங்கரமான கூகைகளுடைய சத்தங் கேட்கப்படும். ஓநாய், சிங்கம், புலி, கடுவாய், கரடி, நரி முதலான துஷ்ட மிருகங்கள் எங்குந் திரிந்து, அகோரமாய் உறுமுகிறதுங் கூச்சமில்லாமலுந், தத்தளியாமலுஞ் சூரியனைப்பார்த்தும் அவைகள் கண் தெரியாததுகளாய்ப் போயின. ஆகாயமும், பூமியும், தண்ணீரும் ஒன்றித்திருந்ததினால், பள்ளமும் மேடும் தெரியாது. இப்

படிப்பட்ட பயங்க்ரமான இருட்டுக்குள்ளே பிராமணன், இராசா வெள்ளாளன், செட்டி ஆக இன்னுலுபேரும் அகப்பட்டார்கள். இவ்வண்ணமே தாங்கள் பிறந்த பட்டணத்தை விட்டுப், பிராமண சன்னியாசியாராயிருக்கிற சத்தியபோதகர் அண்டைக்குப் போகத்தக்கதாக உத்தியோகமாயிருந்து, வியர்த்தமாய் மரத்தினுடைய நிழலிலே காலம் போக்கடித்ததினுலே, காரணக் குருவாயிருக்கிற சன்னியாசியாருடைய மடத்துக்கு வந்துசேரமாட்டாதேபோனுர்கள். இந்தப் பிரகாரம் அந்த இராத்திரி யெல்லாம் பயந்து நடுநடுங்கின துக்குப் பிற்பாடு, இந்த அந்தகாரமெல்லாம் நீங்கச் சூரியன் உதயமாச்சுது. ஆனபடியினுலே முன் சொல்லப்பட்ட நாலுவழிப்போக்கரும் மிகவுஞ் சந்தோஷப்பட்டு, ஒரு சாமபரியந்தம் நடந்து, மடத்துக்குப் போய்ச் சேர்ந்து, சாஷ்டாங்கமாக விழுந்து, செய்யத்தக்க ஆசாரமெல்லாஞ் செய்தபிற்பாடு, அவர்களுக்குள் ஒருத்தன் சுவாமியைப் பார்த்து விண்ணப்பம் பண்ணினதாவது: பராபர வஸ்துவினுடைய கிரணயத்தையும் காரணக்குருவாயிருக்கிற தேவரீர், அவருடைய ஞான உபதேசத்தையும் யெல்லாருக்கும் போதிக்கிறீரென்று அநேகம் பேர்கள் எங்களுக்குச் சொன்னதினுலே, அப்படிப்பட்ட கடவுளுடைய ஞான உபதேசத்தைக் கேட்கத்தக்கதாகவும் உம்முடைய அண்டைக்கு வந்தோமென்றுர்கள்.

அந்தத் தருவாயிலே சத்திய போதகர் தம்முடைய அண்டைக்கு வந்த சனங்களைப்பார்த்துத் திருவுளம்பற்றினதாவது: மட்டில்லாத நன்மைகளுடைய கீர்த்தி உற்பனத்தினுலே மிகவும் பிரதாபிக்கிற பராபர வஸ்துவினுடைய மகிமையை அறிகிறதுக்கு, உங்களுக்கு எப்படி மனது வந்ததென்று, மறையாமல் வெளியாய்ச் சொல்லுங்கோளென்று அருளிச்செய்தார். அப்போது இராசாவானவர் எழுந்து: சுவாமீ, தேவரீருடைய சமுகத்திலே பொய்சொல்லவொண்ணுதென்கிறதினுலே, சுபாவமாய் என்னுடைய அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகிறேன். அதெப்படியென்றுல், அவ்வண்ணமே அடியேன் கலியாணம்பண்ணி இருபது வருஷமாச்சுது; இந்த இருபது வருஷ தேசகாலத்துக்குள்ளே எனக்குப் பிள்ளை இல்லாததினுலே, அந்தந்தத் தேவாலயங்களுக்குப் போய், வியர்த்தமான பிறகு, இந்த வார்த்தைக் கேட்டேன். இப்படியே துக்கசாகரத்திலே

ழுழ்கியிருக்கிற அடியேனுக்கு அநேகம் பேர்கள் புத்திசொன்ன தாவது: பராபரவஸ்துவினுடைய ஞான உபதேசத்தைக் கேட்டால், சர்வத்துக்கும் வல்ல பராபரவஸ்துவானவர் தம்முடைய அளவில் லாத பலத்தினாலேயும், தயவினாலேயும், புத்திரசந்தானங்களைக் கட் டளையிடுவாரென்றார்கள். இது நிமித்தமாகவும்முடைய திருப் பாதத்திலே விழுந்தேனென்றார். செட்டியோவென்றால், அடி யேன் வெகு நாளாய் வியாதியாயிருக்கிற படியால், பேர்போன வயித்தியரை அழைப்பித்து, வெகு ரொக்கங்களை அவர்களுக்குக் கொடுத்து, அவர்களுடைய மருந்து சாப்பிட்டுச் சற்றாகிலுங் குண மாகாமல், தினந்தினம் வியாதி அதிகமாய் வர்த்திக்கிறதினாலே, மனு ஷருடைய கையிலே தீராத வியாதி நீங்கிப்போகத்தக்கதாக, பரா பர வஸ்துவானவர் மாத்திரம் ஆரோக்கியம் வருத்திவிப்பாரென்று அடியேன் கேட்டதினாலே, ஞானவுபதேசத்தைக் கேட்கத்தக்கதா க, உம்முடைய சமுகத்துக்கு வந்திருக்கிறேனென்றான்.

வெள்ளாளனோவென்றால்: அடியேன் வால வயது துவக்கிப் பசாசினாலே வாதிக்கப்பட்டு, வாயினாலேயும், மூக்கினாலேயும் உதி ரம் பிறப்பட்டு, எண்ணிக்கைக்குள்ளடங்காத கஸ்தி நோவுகளை அனுபவிக்கிறேன்; இப்படிப்பட்ட பசாசை ஓட்டிவிடத்தக்கதாக, சர்வேசுரனுடைய ஞான உபதேசத்தைக் கேட்க வருகிறேனென்று வெளியாகச்சொன்னான்.

கடைசியிலே பிராமணனெழுந்து; இந்தச் சீமையில் உண்டா ன வேதப் புராணங்களை வாசித்ததுக்குப் பிற்பாடு, இந்தப் பிரபந் தங்களிலுண்டான விசேஷங்களின் பேரில் தியானம் பண்ணிப், பத் தும் பத்தாய் ஆராய்ந்து பார்த்து, பரிசோதித்ததுக்குப் பிற்பாடு, பி ரமா, விஷ்ணு, ருத்திரனல்லாமல், பராபரவஸ்துவானவர் ஒருத்த ர் இருக்கிறாரென்றும், அவர் மாத்திரம் மோட்சத்தைத் தந்தருளுகிற துக்கு வல்லவராயிருக்கிறாரென்றும் நிச்சயம்பண்ணிக், கரையேறத் தக்கதாக மிகவும் அபேக்ஷிக்கிற நான், இப்படிப்பட்ட கடவுளுடைய சுபாவத்தையும், மகிமையையும், அவர் கற்பித்தருளிய கற்பனைகளை யும் அறியத்தக்கதாகத், தேவரீருடைய பாதத்திலே வந்து சேர்ந்தே னென்றான். போன இராத்திரி நானும் என்னோடேகூட வந்தவர்க ளும் பயங்கரமான இருட்டுக்குள்ளே அகப்பட்டு, பள்ளங்களிலே விழுகிறதுக்குப் பயந்து, இந்தப் பிரபஞ்சத்திலே உண்டான வஸ்

துக்களுக்குள்ளே ஒருபொருளையானாலும் தெரியாமையாயிருக்கச்செய்தே, மிகுந்த பிரகாசத்தோடே விளங்குகிற சூரியனானது தன்னுடைய ஒளியினாலேயும், கதிர்களினாலேயும், முன்சொல்லப்பட்ட அந்தகாரமெல்லாம் நீக்கித்தள்ளினாப்போலே, பரஞ்சோதியாகிற பராபரவஸ்துவினுடைய மகிமையைப் போதிக்கிற தேவரீர், எங்களுடைய மனதுக்குள்ளேயும், புத்திக்குள்ளேயும் உண்டான அக்கியானத்தை நிவாரணம் பண்ணுவீரென்று கெட்டியான நம்பிக்கையாயிருக்கிறோமென்று விண்ணப்பம் பண்ணினார்கள்.

அத்தறுவாயிலே இந்நாலுபேருக்குண்டான கருத்துகளைக் கண்ட சத்தியபோதகர் அவர்களைப்பார்த்து, திருவுளம்பற்றினதாவது: அளவில்லாதநன்மைச் சுபாவமாயிருக்கிற பராபரவஸ்துவை அறியாதவர்களே அகோரமான அந்தகாரத்துக்குள்ளே கிடக்கிறார்களென்று சத்திய விசேஷமாகும். அவ்வண்ணமே எல்லாத்துக்கும் ஆதிகாரணமாயிருக்கிற கடவுளுடைய நிரணயத்தையும், மோசம் போகவுமாட்டாத ஞாபகனாகிற சத்திய சுரூபியாயிருக்கிற சர்வேசுரன் அருளிச்செய்த தப்பில்லாத வேதக்கிரமத்தையுஞ், சகலமான அபேக்ஷைகளைப் பரிபூரணமாகப் பூரிக்கிற பரமானந்தமாகிற மோட்சத்தையும், அற்ப நன்மையின் கலப்பில்லாமல் சகலமான பொல்லாப்புகளையும், அளவில்லாத வாதைகளையும் கொண்டிருக்கிற நரகத்திலே விழுகிறதுக்குக் காரணமாயிருக்கிற பாவங்களுடைய அளவில்லாத பொல்லாப்புகளையும், பராபரவஸ்துவினுடைய இஷ்டப்பிரசாதங்களின் நிமித்தியமாக வருகிற மெய்யான தரும சரித்திரங்களினுடைய விலைமதியாத பிரயோசனத்தையும், இஷ்டப்பரிபாலருமாய், துஷ்ட நிக்கிறகம் பண்ணுகிறவருமாயிருக்கிற கடவுளுடைய தப்பில்லாத நீதியையும், அளவறுக்கப்படாத கிருபாகடாட்சத்தையும், சர்வத்துக்கும் வல்ல பெலத்தையும், அளவறுக்கப்படாத ஒப்பில்லாத ஞானத்தையும், இதுமுதலான எண்ணிக்கைக்குள்ளடங்காத நன்மைகளையுஞ், சுபாவமான புத்திச் சன்னிதானத்திலே அடங்காததுமாய், மனோவாக்குக்கெட்டாததுமாயிருக்கிற பரம இரகசியங்களை அறியாதவர்கள் முழுதும் அக்கியான அந்தகாரத்துக்குள்ளே அகப்பட்டு, வௌவாலைப்போலே இருட்டுக்குள்ளே திரிகிறார்களென்பது சத்தியமாகும். ஆனபடியினாலே இப்படிப்பட்ட அக்கியானம் நீங்கிப்போகத்தக்கதாக, மட்டில்லாத

கிருபாகடாட்சத்தைக் கொண்டிருக்கிற கடவுளுடைய விசேஷமான ஞானப்பிரகாசம் வேண்டியிருக்கிறபடியினாலே, சூரியனுடைய் பிரகாசத்தைக்கொண்டு சூரியனைப் பார்க்கிறாப்போலே, பரஞ்சோதியாகிற கடவுளுடைய சுபாவத்தையும், அளவறுக்கப்படாத நன்மைகளையும் எவ்வளவாகிலும் கண்டுபிடிக்கிறதுக்குப், பராபரவஸ்துவானர் தாமே அனந்த தயையோடே உங்களுடைய ஆத்துமங்களுக்கு விசேஷமான தெளிவுள்ள ஞானத்தைப் பிரகாசிப்பிக்கவேணுமென்று அறிவீர்களாக. ஆனால் அஸ்திவாரத்திலே தானே உங்களுக்கு மோசம் வராதபடிக்கு, நல்ல கருத்தோடே பராபர வஸ்துவினுடைய பிரதாபத்தை அறிகிறதற்கு ஞான உபதேசத்தைக் கேட்கவேணுமொழிய மற்றப்படியல்ல. அவ்வண்ணமே ஆரோக்கியம், புத்திரசந்தானம், திரவியங்கள் முதலான அழிந்துபோகிற பிரயோசனத்தைப் பார்த்துத், திரவியமான உபதேசத்தைக்கேட்க ஆசையுள்ளவன், இப்படிப்பட்ட அநித்திய நன்மைகளை அநேக விசை அநுபவியாமலிருக்கிறதும்தவிர, சகலமான ஆசையையும் பூரிக்கிற பரமாநந்தமாகிற மோட்சத்தை விசாரியாமலிருக்கிறதினாலே, கனமான மோசம் அவனுக்குவந்ததென்று அநுபவசித்தியினாலே கண்டுபிடிக்கிறோம். அதேதென்றால், சகலமான வியாதிகளையும், நீக்கிப்போடுகிற சஞ்சீவியாகிற உத்தமமான அவுழ்தத்தைச் சட்டைபண்ணாமல், சேற்றிலே கிடக்கிற அசுத்தமான தண்ணீரைக் குடிக்கிறவனும், விலைமதியாத இரத்தினத்தை மணலுங்கட்டிக்காக கொடுக்கிறவனும், மிகுந்த பிரகாசத்தைக்கொண்டிருக்கிற சூரியனைப் பாராமல், மின் மினிப் பூச்சியை மிகுந்த பிரயாசத்தோடே தேடுகிறவனும், தங்களுடைய மதிப்பிருங்கிஷத்தைக் காண்பிக்கிறாப்போலே, சகலமான பொல்லாப்புக்களையும் நீக்கித்தள்ளுகிறதுமாய், ஆத்தும வியாதிகளாகிற பாவங்களைத் தள்ளுகிறதுமாய், ஒப்பில்லாத பிரகாசத்தைப் பிரகாசிக்கிறதுமாய், மனுஷருடைய அபேக்ஷையென்னப்பட்ட யாவையும் சாங்கோபாங்கமாக பூரிக்கிறதுக்குக் காரணமுமாயிருக்கிற ஞான உபதேசத்தை, அழிந்துபோகிற பிரயோசனத்தைப் பார்த்துக் கேட்கிறவர்களும், தங்களுடைய புத்திக் குறைச்சலைப் பிரசித்தமாய் ஒப்பிக்கிறார்களென்று அங்கீகரிக்கத்தக்க சத்தியமாகும். ஆனால் நீங்கள் பராபர வஸ்துவினுடைய அளவறுக்கப்படாத நன்மைகளையும், பாவங்களைத் தள்ளுகிற உச்சிதமான உபாயங்களையும், கட

வுள் அருளிச்செய்த கற்பனைகளையும், மோட்ச இராச்சியத்துக்குப் போகிற இராசபாதையையும் படிப்பிக்கிற ஞான உபதேசத்தைக் கேட்கிறதிலே நித்திய நன்மைகளை அநுபவிக்கத்தக்கதாக, பரிபூர ண இஷ்டமாயிருந்து திரவியம், வெகுமானம், ஆரோக்கியம், வாழ் வு இது முதலான அநித்திய நன்மைகளை அநுபவிக்கத்தக்கதாக ஆ சையாயிருக்க வேண்டாம். இப்படிப்பட்ட மட்டில்லாத பிரயோ சனமுள்ள சத்தியத்தை நீங்கள் கேட்டதுக்குப் பிற்பாடு, அதுக்கு முந்தி அபேக்ஷித்த கொஞ்சமான நன்மைகளைச் சட்டைபண்ணு மற், பராபர வஸ்துவினுடைய பிரத்தியட்சமான தெரிசனத்தினு லே வருகிற பரமாநந்தமாகிற மோட்சத்தை அநுபவிக்கத்தக்கதாக ப் பிரயாசப்படுவீர்களாக.

அதெப்படியென்றால், பூர்வகாலத்திலே வியாதிக்காரன் ஒரு வன் காட்டுக்குப் போய், மருந்துகளையும், சில செடிகளையும் வெட்டு கிறபோது, தேவாதீனமாய் விலைமதியாத இரத்தினங்களினாலேயும், திரவியங்களினாலேயும் நிறைந்திருக்கிற பொக்கிஷத்தைக் கண்டெடு த்தான். தேடின மருந்துகளை மறந்துபோய், தான் கண்ட புதைய லைப் பதனமாய் வைக்கத்தக்கதாக மிகவும் விதனப்பட்டான். அத் தன்மைபோலே நீங்கள் மருந்துகளையும், அழிந்துபோகிற நன்மை களையும் தேடிக்கொண்டு, ஞான உபதேசத்தைக் கேட்கவந்தீர்கள். ஆனால் இப்படிப்பட்ட திவ்வியமான உபதேசத்தினுடைய பிலத்தி னாலே அளவில்லாத சஞ்சயமாகிற மோட்சமென்று கண்டு, கொ சஞ் நன்மைகளை அபேட்சிக்கிற உத்தியோகத்தை விட்டுக், குறை யற்ற பாக்கியமாகிற மோட்ச பரமானந்தத்தை அநுபவிக்கத்தக்க தாக ஆசையாயிருப்பீர்களாக. இந்தப்பிரகாரமாகப் புத்திர சந்தா னத்தின்பேரில் ஆசையாயிருந்து, உபதேசம் கேட்கவந்தவன், ஞா னபுத்திர சந்தானமாகிற மெய்யான தரும புண்ணியங்களின் நிமி த்தமாக, சம்பாவனையைத் தந்தருளுகிற கடவுளானவர் அளவில் லாத பாக்கியத்தைக் கொடுத்தருளுவாரென்று அறிந்து, இப்படிப் பட்ட அழிந்து போகிற பாக்கியங்களைச் சட்டைபண்ணாமல், மட்டி ல்லாத சந்தோஷத்தை வருத்திவிக்கிற மோட்சத்தை அநுபவிக்கப் பிரயாசப்படுவான். அவ்வண்ணமே பெண்ணிக்கைக்குள்ளடங்காத மனுஷர் அழிந்துபோகிற சரீரம் பிழைக்கிறதுக்குக், காற்றுக்கும், மழைக்கும், வெயிலுக்கும் பயப்படாமல், இரவும் பகலும் மிகவும்

பிரயாசப்படுகிறபோது, அழியாத ஆத்துமத்துக்குப் பிழைப்பாகிற மோட்சத்தினுடைய செல்வ பாக்கியங்களை அடையத்தக்கதாக உபாய தந்திரமென்னப்பட்டயாவையும் பண்ணவேணுமென்று சந்தேகமில்லை. இதுவெல்லாம் இப்படியிருக்கையிலே, நீங்கள் புத்திரசந்தானம், ஆரோக்கியம் முதலான இலௌகீக நன்மைகளைத் துடங்கி, ஞான உபதேசத்தைத் தேடாமல், சாங்கோபாங்கமான பூர்த்தியை வருத்திவிக்கிற பரமானந்தமாகிற மோட்சத்தை அநுபவிக்கத்தக்கதாக, பராபர வஸ்துவினுடைய மகிமையைப் போதிக்கிற தேவோக்கித்த வேதத்தை அநந்த பத்தியோடேயும், தாழ்ச்சியோடேயும் கேட்கவேணுமென்று அறியப்பட்ட விசேஷமாகும்.

அவ்வண்ணமே முன் சொல்லப்பட்ட உத்தமமான கருத்தோடே திவ்விய உபதேசத்தைக் கேட்டால், மட்டில்லாத தயை சுபாவமாயிருக்கிற பராபரவஸ்துவானவர், பாவ விமோசனத்துக்கும், ஆத்துமத்துக்கும் திவ்வியமான அலங்கிருதமாகிற இஷ்டப்பிரசாதங்களுக்கு அற்பப் பொல்லாப்பினுடைய கலப்பில்லாமல், சகல நன்மையைக் கொண்டிருக்கிற மோட்சத்துக்குக் காரணமாயிருக்கிற ஞான உபதேசத்தினுடைய நிமித்தியமாக, உங்களுடைய ஆத்துமங்களில் உண்டான பாவங்களெல்லாம் நீக்கித், திவ்விய அருளினாலே உங்களுடைய ஆத்துமங்களைச் சிங்காரித்தால், இனிமேலும் மோட்ச இராச்சியத்திலே நித்திய நன்மைகளைத் தந்தருளச் சித்தமாயிருக்கிறதுந் தவிர, நீங்கள் அபேட்சிக்கிற அற்பப் பிரயோசனங்களையும் எங்களுக்கும் உங்களுக்குங் கிருபை பண்ணுவாரென்று அறிவீர்களாக.

ஆனால் கிரமத்தைத் தப்பிப்போய், பராபர வஸ்துவாகிற சர்வேசுரனானவர் அநுபவிக்கிற மட்டில்லாத மோட்ச பாக்கியத்திலே பங்காளிகளாயிருக்கிறவர்களுடைய மகிமையை நீங்கள் நினையாமல், புகைபோலேயும் தண்ணீர்மேல் புறப்படுகிற குமிழிபோலேயும் சற்றுநேரத்துக்குள்ளே வானத்திலே காண்பிக்கிற மின்னல்போலேயும், ஒரு நாழிகைக்குள்ளே வாடிப்போகிற புஷ்பத்தைப்போலேயும், ஐசுவரியம் வெகுமானம் சந்தோஷமுதலான இலௌகீக நன்மைகளை யுற்றியோசித்துத், திவ்விய உபதேசத்தைக் கேட்டால், ஆசையெல்லாம் பூரிக்கிற நித்திய நன்மைகளை இழந்துபோகிறதுந் தவிர, அழிந்துபோகிற செல்வ பாக்கியங்களை முதலாய் அநுபவிக்க

மாட்டார்கள். இதெல்லாம் இனிமேல் பிரசித்தமான நியாயங்களி னாலே நாம் உங்களுக்குச் சொல்லிக்காட்டுவோம்.

ஆனால் நாம் நாளைக்கு அவசியமாய்ப் பயணமாயிருக்கிறபடியி னாலே, இப்போது நம்மால் போதிக்கப்பட்ட பரமசத்தியங்களை நீங்கள் மனதிலே தரித்துக்கொண்டு, அதுகளின்பேரில் தியானம் பண்ணி இனிமேல் நம்முடைய அண்டைக்கு வருவீர்களாக.

இந்த ஞான உபதேசத்தைக் கேட்டவர்கள் குரு சுவாமியவர் களுக்கு விண்ணப்பம் பண்ணினதாவது: நாங்கள் இற்றைவரைக் கும் இந்தப் பரம இரகசியங்களை அறியாததினாலே, அக்கியானிக ளாய் இருந்தோமென்கிறதுக்குச் சந்தேகமில்லை; ஆனால் தேவரீ ராலே பண்ணப்பட்ட ஞானப்பிரசங்கத்தின் நிமித்தியமாக எங்க ளுடைய ஆத்துமங்களுக்குப் பரிபூரண பிரகாசம் உண்டாச்சுது. ஆனபடியினாலே தேவரீர் பயணமாயிருந்தாலும் உத்தாரம் பரா பர வஸ்துவினுடைய மகிமையையும், அவர் கற்பித்தருளிய தேவ வாக்கியத்தையும் எவ்வளவாகிலும் அறியுமட்டும், தேவரீரை விட் டுப் பிரியப் போகிறதில்லையென்று துணிந்திருக்கிறோம். அவ் வண்ணமே சூரியகாந்திப் புஷ்பம் சூரியனானது எந்தப் பக்கத்திலே இருந்தாலும் சூரியனைப் பார்க்கிறாப்போலே, எங்களுடைய அக்கி யானத்தை நீக்குகிற தேவரீர் எங்கெங்கு ஸ்தலத்திலேயிருந்தாலும், உம்முடைய பாதத்திலே காத்துக்கொண்டிருப்போமென்று விண் ணப்பம் பண்ணி, குருசுவாமியாரவர்களுடைய ஆசீர்வாதத்தை வாங்கிக்கொண்டு இளைப்பாறப் போனார்கள்.

---

## பராபர வஸ்துவினுடைய நிர்ணயத்தின் இரண்டாஞ் சல்லாபம்.

காரணக் குருவுமாய்ப் பொன்னாசை மண்ணாசை பெண்ணாசை யென்ற இந்த மூன்றாசையும் வெறுத்த சன்னியாசியாராயிருக்கிற சத்திய போதகர் தம்முடைய சீஷாக்களோடேயும், ஞான உபதேச த்தைக் கேட்கத் தம்முடைய அண்டைக்கு வந்தவர்களோடேயும் பயணமாயிருக்கும்போது, சற்றுநேரத்துக்குள்ளே மழை சம்பூரண மாய் வருஷிக்குமென்று அடையாளங் கண்டதினாலே, இராசபாதை யிலே கட்டியிருக்கிற வெகு சேர்த்தியுள்ள தேவாலயத்தினுடைய மு ன்மண்டபத்திலே பிரவேசம்பண்ணி அதிலுண்டான தூண்களையும்

தூக்குகளையும் வெகு விநோதமுள்ள வேலைகளையும் பார்த்துச் சந்தோஷப்பட்டு, அவ்விடத்திலே தம்முடைய ஆசனத்தைப் போடச் சொல்லி, அதிலே எழுந்தருளியிருந்து இளைப்பாறினர். இப்படியே காரணக் குருவானவர் சற்றுநேரம் இளைப்பாறினபிற்பாடு, பயங்கரமான இடிகளுடைய சத்தங்களும்,மின்னல்களும்,புசல்களும் அகோரமாய் வருகிற மழையினாலே ஆலங்கட்டி, அரசங்கட்டிகளும் விழுந்து எல்லாருக்கும் பயம் வருத்திவிக்கிற சமயத்திலே, வழிப்போக்கனொருவன் மழையிலே நனைந்து, பயத்தினாலே நடுங்கி, முன் சொல்லப்பட்ட மண்டபத்திலே புகுந்து, குருவினுடைய பாதத்திலே நின்றான்.

ஆனால் நெருப்பினுடைய வங்கிஷங்களோடே கலந்திருக்கிற ஆவிகள் கருப்புள்ள மேகங்களுக்குள்ளே அகப்பட்டுக், கட்டாயமாய் நெருங்கியிருக்கிறபடியினாலே, சிவந்திருக்கிற இரும்பினுடைய குணங்களை சுவீகரித்து, அக்கினியினுடைய உக்கிரத்தினாலேயும் அசைவினாலேயும் வெந்துபோய், மேகங்கள் கிழிந்துகொண்டு மகா அதிர்ச்சியோடேயும், பெலத்தோடேயும் நாலு திக்கும் விழுகிறபோது, பருவதங்களைப் பிளந்து, உப்பரிகைகளை இடித்து, பெரிய விருக்ஷங்களை வேரோடே பிடுங்கி, அக்கினிமழை வருஷித்தது. அத்தருவாயிலே பூமிக்குள் கட்டாயத்தினாலே அடங்கிற நெருப்பு ஆகாசத்திலே யேறத்தக்கதாக மிகுந்த பெலத்தோடே பூமியை அசைத்து, அந்த அதிர்ச்சியினாலே மண்டபத்தினுடைய தூண்களுந் தாக்குகளும் நடுங்குகிற சமயத்திலே, சத்திய போதகர் சுவாமியவர்கள் முழங்காலிலிருந்து, கைகுவித்து, பராபர வஸ்துவை யுத்தேசித்து, அத்தியந்த பத்தியோடே மன்றாடினதாவது :—

சர்வத்துக்கும் வல்லவருமாய், மட்டில்லாத கிரமமுள்ள விமரிசையோடே எல்லாத்தையும் நடத்திக்கொண்டு வருகிறவருமாயிருக்கிற என் சர்வேசுரா, தேவரீருடைய அளவில்லாத கிருபாகடாட்சத்தினிமித்தியமாக எங்களை இரட்சியுமென்று பிரார்த்தித்துக் கொண்டார். இப்படிப்பட்ட செபம் முகிந்தவுடனே, மேகங்களெல்லாம் அங்கங்கே சிதறிப்போய் கருப்பெல்லாம் வாங்கிப் போச்சுது, சற்று நேரத்துக்குள்ளே வெக்களித்துப் போச்சுது.

இதெல்லாத்தையும் கண்ட வழிப்போக்கன் ஆச்சரியப்பட்டு மகா பெரியவராயிருக்கிற சத்திய போதகருடைய பாதத்திலே விழு

ந்து, விண்ணப்பம் பண்ணினதாவது: சுவாமீ, தேவரீருடைய மகிமையை நான் பார்க்கும்போது, மகா சாஸ்திரியுமாய் விவேகியுமாயிருக்கிறீரென்று காண்பிக்கிறது. இதெல்லாம் இப்படியிருக்கையிலே, அதுக்கு முந்தி சர்வ லோகத்திலே மெய்யான தேவனில்லையென்று நான் விசாரித்தாலும், இந்த ஆச்சரியமான புதுமையைக் கண்டவுடனே, யாரைக்குறித்து தேவரீர் செபத்தியானம் பண்ணினீரென்று அறிகிறதற்கு மிகுந்த அபேட்சையாயிருக்கிறேனென்றான்.

இப்படிப்பட்ட வார்த்தையைச் சத்தியபோதகர் கேட்டவுடனே, தம்முடைய சமுகத்திலேயிருக்கிற அந்த வழிப்போக்கனைப் பார்த்து: நாஸ்திகர், பாஷாண்டிகள் முதலான பொல்லாதவர்களுடைய தர்மதத்திலே உட்பட்டவனாயிருக்கிறானென்று கண்டுபிடித்து, அவனைப் பார்த்துத் திருவுளம்பற்றினதாவது: நாஸ்திகருக்குள்ளேயும் பாஷாண்டிகளுக்குள்ளேயும் நீ சஞ்சாரம் பண்ணினதினாலே, மயங்கிப்போய் சர்வ லோகத்திலேயும் தேவனில்லையென்று பிதற்றுகிறாய்; ஆனால் நல்ல மத்தியானத்திலே பிரகாசிக்கிற பிரகாசத்தைப் பார்க்க சர்வலோகத்துக்கும் ஒரு கர்த்தர் உண்டென்றும், ஒருதேவன் அவசியமாயிருக்கிறாரென்றும் பிரசித்தமாயிருக்கிறதென்றதற்கு: நாஸ்திகனான வழிப்போக்கனிருந்து இந்தச் சீர்மைகளிலே திரிகிற அநேகம் சாஸ்திரிகளோடே தர்க்கம் பண்ணும்போது, இப்படிப்பட்ட ஞானிகள் ஒருதேவனானாலும் இருக்கிறாரென்று ஒப்பிவிக்கமாட்டாதேபோனார்களென்றான்.

இதுக்கு சத்திய போதகர் அருளிச்செய்த்தாவது: இந்தச் சீர்மையிலுண்டான சாஸ்திரிகள் மேலான சாஸ்திரங்களை அறியாமையினாலே, தாங்கள் உத்தம ஆராதனையினாலே நமஸ்கரிக்கிற தேவர்களிடத்திலே எண்ணிக்கைக்குள்ளடங்காத குறைச்சலும் பாவங்களும் உண்டாயிருக்கிறபடியினாலே, அப்படிப்பட்ட துரோகிகளுக்குத் தேவசுபாவமில்லையென்று நியாயத்தின்படியே சொன்னாலும், பரிச்சேதம் ஒரு தேவனுமில்லையென்றும் பராபர வஸ்துவுமில்லையென்றும் சர்வேசுரன் இல்லை யென்றும் சொல்லவும் கருதவும் கூடாதென்றார். இந்தப் பிரத்தியுத்தாரத்துக்கு நாஸ்திகன் சொன்னதாவது: இந்தத் தேசத்தார் முப்பது முக்கோடி தேவர்களுண்டென்று சொல்லுகிறார்கள்; ஆனபடியினாலே தேவரீர் இத்தனை

தேவர்களைத் தள்ளினதற்குப் பிற்பாடு, அவர்களையல்லாமல் வேறே யொரு தேவனிருக்கிறாரென்று எப்படி ஒப்பிப்பீரென்றான்.

அதுக்கு குருசுவாமீ சொன்ன மறுமொழியாவது: இந்த இராச்சியத்திலுண்டான அநேகம்பேர்கள் அர்ச்சனை, பூசை, ஆராதனை, யோக்கியங்கள், செபம், அனுஷ்டான முதலிய வழிகளினாலே சேவிக்கிற தேவர்களிடத்திலே தேவ சுபாவமில்லையென்று ஸ்திரமான நியாயங்களினாலே ஒப்பிவிப்போமானால், இப்போ சகல நன்மைச் சுரூபியாயிருக்கிற பராபரவஸ்துவான சர்வேசுரன் ஒருத்தர் இருக்கிறாரென்று எளிதாய்க் கண்டுபிடிக்கலாம். ஆனபடியினாலே இப்போ நாம் சொல்லப்போகிறதை இங்கே இருக்கிறவர்களெல்லாரும் இந்த நாஸ்திகனோடேகூட உற்றுக்கேளுங்கள். அதாவது: காரியத்துக்கும் காரணத்துக்கும் அவசரமாய்ச் சம்மந்தமும் அயிக்கியமுமிருக்கிறதென்று எல்லாரும் சொல்லுகிறார்களே; ஆனபடியினாலே ஒரு காரியத்தைப் பார்க்கும்போது, தப்பில்லாமல் காரணம் உண்டென்று சொல்லவேண்டியிருக்கிறது. இந்தப் பிரகாரமாக காவேரியாற்றிலே வெள்ளம் வரும்போது, சம்பூரணமாய் மேற்கே மழை வருட்சித்ததென்று சொல்லுகிறோம். இந்தடவாக நல்ல மத்தியானத்திலே கடினமான வெயிலுறைக்கும்போது, சூரியன் மத்தியான சக்கரத்திலே வந்ததென்று பிரசித்தமாகும். இதன்றியே இராசாக்களுடைய மகா நேத்தியுள்ள அரண்மனைகளையும், உச்சிதமான தேவாலயங்களையும் பார்க்கும்போது, அதுகளை ஒரு கெட்டிக்காரன் கட்டினானென்று சொல்லுகிறோம். ஆனபடியினாலே சர்வலோகத்தில் உண்டான ஆச்சரியமான ஒழுங்குகளையும் பத்தும் பத்தாய் விசாரிக்கும்போது, இந்த அதிசயமான காரியங்களுக்கு உத்தமமான பராபரவஸ்துவாகிற சர்வேசுரன் ஒருத்தர் இருக்கிறாரென்று அவசியமாய் நிச்சயிக்கக்கடவது.

இப்படிப்பட்ட கெட்டியுள்ள நியாயத்தை அந்த நாஸ்திகன் கேட்டதுக்குப் பிற்பாடு, வெளிப்படுத்தின சந்தேகமாவது: தேவரீர் வெளிப்படுத்தின சத்தியங்களெல்லாம் மெய்யென்று காண்பித்திருந்தாலும், சர்வலோகத்தினுடைய காரணத்தை நான் கண்ணால் காணாதிருந்தால், முன் சொல்லப்பட்ட காரணமுண்டென்று எப்படி விசுவசிப்பேனென்றதற்குக்: குருவானவர் நாஸ்திகனுடைய சந்தேகத்தை நிவாரணம் பண்ணினதாவது: பராபரவஸ்துவினுடைய

இலட்சணத்தை இனிமேல் நாம் சொல்லிக்காட்டுகிறபோது, சர்வேசுரன் அசரீரியாயிருக்கிறதினாலே சரீரத்தினுடைய கண்ணாலே காணக்கூடாதென்றும், புத்தியின் கண்ணாலே மாத்திரம் கண்டுபிடிக்கலாமென்றும் ஒப்பிவிப்போம். இப்போதைக்கு உன்னுடைய சந்தேகத்துக்கான பிரத்தியுத்தாரத்தைக் கேள். நீ கண்ணாலே காணாத அநேகம் காரியங்கள் இல்லையென்று சொன்னால், பயித்தியக்காரனுக்குச் சமானமானவனாயிருப்பாயென்று அறிவாயாக. அவ்வண்ணமே கங்கை யாறும் ஆகிரா, காசியும், ராமேசுரமும் இதுமுதலான ஸ்தலங்களைக் காணாததினாலே, இல்லையென்று சொல்லுவாயோ? உன்னுடைய பாட்டனை யொருக்காலும் காணாததினாலே அவன் இந்தப் பூலோகத்தில் இருக்கவில்லையென்பாயோ? உன்னிடத்தில் உண்டான நரசிவனை யொருக்காலும் காணாததினாலே, உனக்குப் பரிச்சேதம் உயிரில்லையென்றும், பிரேதமாயிருக்கிறேனென்றும் சொல்லுவாயோ? ஒரு காரியத்தினுடைய காரணத்தைக் கண்டாலும் உத்தாரம், காணாதிருந்தாலும் உத்தாரம், காரியத்தைக் கண்டால், அவசியமாய்க் காரணமுண்டென்று நிச்சயமாகும்.

இந்தப் பிரகாரமாக ஆற்றிலே வெள்ளம் வருகிறதைக் கண்டால், மேற்கே பெய்த மழையைக் காணாதிருந்தாலும், அவசியமாய் மழை வருட்சித்ததென்று சொல்லுகிறாப்போலேயும், பகல் நேரத்திலே சூரியனானது மேகங்களுக்குள்ளே மறைந்திருந்தாலும், மனிதன் பிரகாசத்தைக் கண்டு சூரியன் பூமியிலே இருக்கிறதென்று மனதிலே எண்ணுகிறாப்போலேயும், இந்தப் பட்டணத்தையும், கோவிலையும் கட்டினவனைக் காணாதிருந்தாலும், அவசியமாய் யாதொரு கெட்டிக்காரன் இதுகளைக் கட்டினானென்று விசாரிக்கிறாப்போலேயும், சருவலோகத்தையும் அதிலுண்டான அதிசயங்களையும் பார்க்கும்போது அவசியமாய் அளவில்லா ஞானத்தையும், மட்டில்லாப் பலத்தையும், அளவறுக்கப்படாத விமரிசையையும் கொண்டிருக்கிற பராபரவஸ்துவாகிற ஆண்டவர் இதெல்லாத்தையும் சிஷ்டித்ததுந்தவிர, இடைவிடாமல் இரெட்சித்துக்கொண்டுவருகிறாரென்று பிரசித்தமாகும்.

அதேதென்றால், ஒரு குடியானவனுடைய வீடு முதலாய்த் தானே வரக்கூடாதிருந்தால், சர்வலோகத்தில் உண்டான எண்ணிக்கைக்குள் அடங்காத அற்புதங்களும், அந்தந்த வஸ்துவினுடைய

ஆச்சரியமான ஒழுங்கும் ஒப்பில்லாத வலுமையையும், தப்பில்லாத கிரமமுள்ள விமரிசையையும் கொண்டிருக்கிற காரணத்தினுலே வந்ததென்று நிச்சயிக்கக்கடவோம். இதெல்லாம் அதிகமதிகமாக விளங்கத்தக்கதாக அறியவேண்டியதாவது: இந்தப் பட்டணத்தையும் கோவிலையும் அதிலுண்டான வெகு விநோதமுள்ள வேலைகளையும் ஆராய்ந்து பார்க்கும்போது, அப்படிப்பட்ட தேவாலயத்தைக் கட்டினவன் மகா சாமார்த்தியமுள்ளவனுமாய்க் கெட்டிக்காரனுமாய் இருந்தானென்று நீங்கள் சொன்னல், இதைப்பார்க்க அலங்காரமான தேவாலயத்தினுடைய ரூபலாவண்ணியத்தை உற்றுக்கேளுங்கள். இப்படிப்பட்ட தேவாலயத்தினுடைய தரையெல்லாம் விலையேறப்பெற்ற கல்லுகள் பதிந்திருக்க, ஸ்படிக்கங்களினுலேயும், வச்சிரங்களினுலேயும், மதில்களெடுத்திருக்க, வருணமெல்லாம் கோமேதகங்களினுலேயும், பற்பங்கள் வெள்ளியினுலேயுங், கபதங்கள் தங்கத்தினுலேயும், படிகள் பலபல திரவியங்களினுலேயும் அலங்கரிக்கப்பட்டிருக்க, இப்படிக்கூட்டுவர்க்கங்களினுலே யொழுங்காக நாட்டியிருக்கிற தூண்களெல்லாம் பவளங்களினுலே கடைந்திருக்கிறதுந்தவிர, விலைமதியாத மாணிக்கங்கள் பதித்திருக்கச், செம்புகள் புஷ்பராகத்தினுலேயும், நாடிகள் வச்சிரத்தினுலேயும், குடங்கள் கெம்புகளினுலேயும், பல்கை பொரிகையுத்திரங்கள் தங்கத்தினுலேயும், கொடுங்குகள் வைடூரியத்தினுலேயும் சீக்கியபொம்மையும், யாளமும் பச்சைச், சிவப்பு, நீல முதலான விலையேறப்பெற்ற கல்லுகளினுலேயும், தாக்குகளெல்லாம் முத்துகளினுலேயும் மணிகளினுலேயும் சிங்காரிக்கப்பட்டதாயிருக்க, அங்கங்கே பொன் சங்கிலியினுலே யேற்றின தீபங்கள் தூக்கியிருக்க, இப்படிப்பட்ட அலங்காரமான தேவாலயத்தை நீங்கள் கண்டால், அவசியமாய் யாதொரு மகா இராசாவானவன் சாஸ்திரியைக்கொண்டு, இந்த மகா அலங்கிர்தமான கோவிலைக் கட்டிவைத்தானென்று சொல்லுவீர்களொழிய மற்றப்படியல்ல.

ஆனல் பராபரவஸ்துவினுடைய உத்தம தேவாலயமாகிற சர்வலோகத்தை இப்போது பத்தும் பத்தாய் விசாரித்துப்பார்த்தால், முத்து பவளங்கள் சமுத்திரத்திலே பிறக்கிறதென்றும்; பொன் வெள்ளி முதலான திரவியங்கள் பூமிக்குள்ளே விளைகிறதென்றும்; வச்சிரம் வைடூரியம் கெம்பு முதலான இரத்தினங்களும்

பருவதங்களிலே உண்டாயிருக்கிறதென்றும் கண்டதற்குப் பிற்பாடு, உயிரில்லாத மாணிக்கங்களைப்பார்க்கப் பல பல வருணங்களினாலே அலங்கரிக்கப்பட்ட உயிருள்ள புஷ்பங்களினாலே பூமியெல்லாம் நிறைந்திருக்க, இப்படிப்பட்ட புஷ்பத்தினுடைய சுகந்தங்களும் பரிமளங்களும் எங்கும் வீச, ஸ்படிக்கத்தைக்காட்டிலும் தெளிவுள்ளதாய் ஆகாசமெங்கும் வியாபித்திருக்க, முத்துகளினாலேயும், கெம்புகளினாலேயும் அலங்கரிக்கப்பட்ட தாக்குகளைப் பார்க்க பரமண்டலங்களெல்லாம் எண்ணிக்கைக்குள் அடங்காத ஆச்சரியமான நட்சத்திரங்களினாலே பதித்திருக்க, இரத்தின தீபங்களைப்பார்க்கிலும் மிகவும் விளங்குகிற சந்திர சூரியன் சர்வலோகத்துக்கும் பிரகாசிக்க, இப்படிப்பட்ட விஸ்திரணத்தைப் பராமரித்தால் அதிசயமான விசேஷம் பிறக்கும்.

அதெப்படியென்றால், பதினறு மயிர்கொண்டது வொரு ஈற்று, பதினறு ஈற்றுக்கொண்டது வொரு விரல்கடை, பதினறு விரல்கடை கொண்டது ஒருபாதம், அஞ்சு பாதம் கொண்டது ஒரு பாகம்; இப்படிப்பட்ட பாகம் மூவாயிரம் ஒரு சாஸ்திரக்காதமென்று சொல்லப்படும். இப்படிப்பட்ட சாஸ்திரக்காதத்திலே பெரிய வளையம் ஏழாயிரத்துத்தொள்ளாயிரத்திருபது காதமுண்டென்று அறிவீர்களாக. அவ்விடத்திலிருந்து நம்முடைய மட்டுக்கும் இறங்குகிறதுக்கு ஆயிரத்திருநூற்றறுபது காதம்; பக்கமெல்லாம் இரண்டாயிரத்துஅஞ்ஞூற்றிருபது காதம், பின்னையும் பூமியினுடைய நாக்கு ரூபமான பிறத்திப்பக்கமெல்லாம் பார்க்கும்போது கோடியே தொண்ணூற்றென்பது இலட்சத்து ஐம்பத்தெண்ணுயிரத்து நானூறு காதம். இதன்றியே பூமியை யிரண்டாய்ப் பிளந்தால், மேற்பவனியிலே நாற்பத்தொன்பது இலட்சத்து எண்பதினயிரத்து நூறுகாதம். கடைசியிலே பூமியெல்லாம் கூட உள்ளேயும் பிறத்திலேயும் எல்லாமாக உள்ளது எண்ணூற்று முப்பத்தெட்டுக்கோடியே இருபத்தஞ்சு இலட்சத்து இருபத்தெண்ணுயிரங் காதம்.

ஆனபடியினலே இந்தளவைப் பார்த்துப் பூமிக்குள்ளே எம்மாத்திரம் மணலிருக்கலாமென்று சுமுத்திரையாகச் சொல்லலாம். இதெல்லாம் உலகப்பிரமாண சாஸ்திரத்திலே விஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறதுந் தவிர, கெட்டியுள்ள நியாயங்களினலே ஸ்தா

பிக்கப்பட்டதாயிருக்கிறதினாலே, இம்மாத்திரம் சொல்லிக்காட்டினது போதும். இப்போதைக்குப் பூமிக்குச் சதுர சக்கரத்தினுடைய மேற்பக்கத்துக்கு ஐம்பத்து மூவாயிரத்து நூற்றறுபது காதமுண்டென்று அறிவீர்களாக: இப்படிப்பட்ட சக்கரத்தின் மேல் பக்கத்திலே சந்திரனிருக்கும்போது, அறுபது நாழிகைக்குள்ளே அஞ்சு இலட்சத்து இருபத்து இரண்டாயிரத்தேழு நூற்றிருபது காதம் நடக்கும். ஆனபடியினாலே சூரியன் அந்த ஸ்தலத்திலே தானேயிருக்கும்போது, ஒரு நாழிகைக்குள்ளே பத்து இலட்சத்து அஞ்ஞூற்றறுபது காதம் நடக்கிறது. இந்தப்பிரகாரமாகப் பூமிக்கும் புதன் சக்கிரத்தின் மேற்பக்கத்துக்கும் கோடியே முப்பத்தாறு இலட்சத்துத்தொண்ணூற்று மூவாயிரத்து நூற்றெண்பது காதம். இப்படிப்பட்ட சக்கரத்தினுடைய மேற்பக்கத்திலே புதன் இருக்கும்போது எட்டுக்கோடியே ஆறு இலட்சத்து எழுபத்திரண்டாயிரத்து அஞ்ஞூற்றுப் பத்துக் காதம் அறுபது நாழிகைக்குள்ளே நடக்கும். ஆனபடியினாலே புதன் அந்த ஸ்தலத்திலிருக்கும்போதுதானே ஒரு நாழிகைக்குள்ளே பதினாலு இலட்சத்து முப்பதினாயிரத்து அஞ்ஞூற்று எழுபத்தாறு காதம் நடக்கும்.

இதன்றியே பூமிக்கும் வெள்ளிச் சக்கரத்தினுடைய மேற்பக்கத்துக்குங் கோடியே ஐம்பத்திரண்டு இலட்சத்து எழுபத்து ஏழாயிரத்து தொள்ளாயிரத்து நாற்பது காதம். இப்படிப்பட்ட சக்கரத்தினுடைய மேற்பக்கத்திலே வெள்ளி யிருக்கும்போது இராப் பகலுக்குள்ளே பத்துக்கோடியே இருபத்து மூன்று இலட்சத்துப் பதினெண்ணாயிரத்து நானூற்றெண்பது காதம் நடக்கும். ஆனபடியினாலே வெள்ளி அந்த ஸ்தலத்திலேதானே யிருக்கும்போது ஒரு நாழிகைக்குள்ளே பதினேழு யிலட்சத்து ஐயாயிரத்து மூன்னூற்று எட்டுக் காதம் நடக்கும். இதுக்கு அப்பாலே பூமிக்குஞ் செவ்வாய்ச் சக்கரத்து மேற்பக்கத்துக்கும் இரண்டு கோடியே அறுபத்து நாலு இலட்சத்து அறுபதினாயிரத்து முன்னூறு காதம். இப்படிப்பட்ட சக்கரத்தினுடைய மேற்பக்கத்திலே செவ்வாய்க் கிரகம் இருக்கும்போது இராப் பகலுக்குள்ளே பதினாறு கோடியே அறுபத்து மூன்று இலட்சத்து ஐம்பத்தொன்பதினாயிரத்து அறுநூற்று அறுபது காதம் நடக்கும். ஆனபடியினாலே செவ்வாய்க் கிரகம் அந்த ஸ்தலத்திலேத்தானே இருக்கும்போது, ஒரு நாழிகைக்குள்ளே

இருபத்தேழு இலட்சத்து எழுபத்தி இரண்டாயிரத்து அறுநூற்ற றுபது காதம் நடக்கும்.

இதல்லாமல் பூமிக்கும் வியாழச் சக்கரத்தின் மேற்பக்கத்துக்கும் கோடியே தொண்ணூற்றெண்பது இலட்சத்துப் பதினுயிரத்து அஞ்ஞூற்றிருபது காதம். இப்படிப்பட்ட மேற்பக்கத்திலே வியாழன் இருக்கும்போது அறுபது நாழிகைக்குள்ளே முப்பத்தேழு கோடியே அறுபத்தாறு இலட்சத்துப் பதினுயிரத்தெண்ணூற்று நாற்பது காதம் நடக்கும். கடைசியிலேபூமிக்கும் சனிச் சக்கர மேற்பக்கத்துக்கும்பதினொரு கோடியே முப்பத்தஞ்சு இலட்சத்துத் தொண்ணூற்று ஐயாயிரத்து முன்னூறு காதம். இப்படிப்பட்ட சக்கரத்தின் மேற்பக்கத்திலே சனியிருக்கும்போது அறுபது நாழிகைக்குள்ளே எழுபத்தொரு கோடியே நாற்பத்தஞ்சு இலட்சத்து இருபத்தேழாயிரத்து அறுநூறு காதம் நடக்கும். ஆனபடியினலே சனி அந்த ஸ்தலத்திலேதானே யிருக்கும்போது ஒரு நாழிகைக்குள்ளே கோடியே பத்தொன்பது இலட்சத்து நானூற்று அறுபது காதம் நடக்கும்.

இந்தக் கிரகங்களுடைய வயனத்தை நாம் சொல்லும்போது முன் சொல்லப்பட்ட கிரகங்களை மேற்கே யிருந்து கிழக்கே போகிற சுபாவ நடையை நாம் நினைக்கவில்லையென்று அறியுங்கள்.

இப்படிப்பட்ட கிரகங்களுடைய விஸ்தீரணமேதென்றால், முந்த முந்த சந்திர கிராணங்களின் நிமித்தியமாகப் பூமியைப் பார்க்கச் சந்திரன் சின்னதாயிருக்கிறதென்று பிரசித்தமாகும். அதேதென்றால் சந்திர கிராண காலத்திலே நிழலுக்குள்ளே சந்திரன் மறைந்துபோனதினலே சந்திர கிராணம் வருமொழிய மற்றப்படியன்று. புதனும் செவ்வாய்க் கிரகமும் பூமியைப்பார்க்க சின்னதாயிருந்தாலும் வெள்ளிக் கிரகமானது பூமியைப்பார்க்கப் பெரிதாயிருக்கிறது. வியாழக் கிரகத்திலே அறுநூற்றெண்பது பூமி அடங்கியிருக்கலாம். சனிக்கிரகமோவென்றால் எண்ணூற்றெண்பத்தினலு பூமி கொண்டதாயிருக்கும்.

கடைசியாய்ச் சூரியனை மேலெழுந்தவாரியாய்ப் பார்க்கும்போது ஆயிரத்தெழுநூற்று இருபத்தெட்டுப் பூமி கொண்டதாயிருக்கும். ஆனல் இப்படிப்பட்ட ஏழு கிரகங்களல்லாமல் இந்தச் சீமையில் உண்டான சோதிட சாஸ்திரிகள் அறியாத இன்னம் வேறே

கிரகங்கள் உண்டென்று அறிவீர்களாக. இதெல்லாம் வெளிப்படு த்த இப்போது சமையம் இல்லாததினாலே இம்மாத்திரம் சொல்லிக் காட்டினது போதும்.

ஆனால் நட்சத்திரங்களுடைய வர்த்தமானத்தைப்பற்றிக் கே ட்டறிய வேண்டியதாவது: பூமிக்கும் நட்சத்திர மண்டலத்துக்கும் பன்னிரண்டு கோடியே அறுபது காத தூரம். இப்படிப்பட்ட நட்சத்திர மண்டலம் சம சக்கரத்திலே அறுபது நாழிகைக்குள்ளே யெழுபத்தொன்பது கோடியே இருபத்து நாலு காதம் நடக்கிறது. ஆனபடியினாலே சம சக்கரத்தில் உண்டான நட்சத்திரங்கள் ஒரு நாழிகைக்குள்ளே கோடியே முப்பத்திரண்டு இலட்சம் காதம் நட க்கும்.

இப்படிப்பட்ட நட்சத்திரங்களுடைய எண்ணிக்கையும் விஸ் தீரணமும் ஏதென்றால், நட்சத்திர மண்டலங்களிலே அங்கங்கே சிதறியிருக்கிற நட்சத்திரங்களெல்லாம் அறுபத்து மூன்று நட்சத்தி ரங்களுடைய கூட்டங்களுக்குள்ளே ஆயிரத்து நாநூற்று எண்பத் தொரு நட்சத்திரங்கள் திஷ்டாந்திரமாகக் கணக்குக் காண்பிக்கிற துந் தவிர தூர திஷ்டியினாலே நட்சத்திர மண்டலத்தைப் பார்த் தால் எண்ணிக்கைக்குள் அடங்காத நட்சத்திரங்கள் காண்பிக்கும்.

இந்தப் பிரகாரமாக ஓரியோவென்கிற ராக்ஷத நட்சத்திரத்தினு டைய கூட்டத்திலே ஐம்பத்தாறு வித நட்சத்திர மாத்திரம் கணக் குக் காண்பித்தாலும் இப்படிப்பட்ட நட்சத்திரக் கூட்டத்தைப் பெரிய தூரதிஷ்டியினாலே பார்த்தால், நட்சத்திரக் கூட்டத்திலே பதினாயிரம் நட்சத்திரம் காண்பிக்கிறது. இதன்றியே நட்சத்திர மண்டலத்திலே புனர்பூசத்துக்குக் கீழே துவக்கி வடமேற்கே போ கிற வெண்மையான பாதையிலே தூரதிஷ்டியைக்கொண்டு எண் ணிக்லகைக்குள் அடங்காத நட்சத்திரங்களைக் காணலாம். இப்படிப் பட்ட நட்சத்திரத்தினுடைய விஸ்தீரணத்திலேயும் பருமத்திலே யும் அறியவேண்டியதாவது.

எந்தெந்த நட்சத்திரம் கண்ணுக்குக் காண்பிக்கிறதோ, அந்த நட்சத்திரம் தானே பூமியைப்பார்க்கப் பெரிதாயிருக்குதென்கிறத ற்குச் சந்தேகமில்லை. அதேதென்றால், யாதாமொருத்தன் நட்சத் திரமண்டலத்திலே யிருந்தால், பூமியைச் சற்றாகிலும் பார்க்கமாட்

டானென்று சோதிடசாஸ்திரிகள் சொல்லுகிருர்கள். பெரிய நட்சத்திரங்களோவெனில் விஸ்தீரணத்திலேயும் பருமத்திலேயும் பூமியை மிகவும் அதிசயித்திருக்கிறதென்கிறதற்குச் சந்தேகமில்லை. இதன்றியே புனர்பூசத்திலே தெற்கே மிகவும் பிரகாசிக்கிற நட்சத்திரமானது ஒன்பது பூமி கொண்டதாயிருக்கும். இந்தப் பிரகாரமாக மற்றுமுண்டான நட்சத்திரங்களுடைய விஷயங்களில் ஆலோசிக்கலாம். இந்த விஷயங்களிலும் அறியவேண்டிய வேறே அதிசயமான காரியங்களையும் விஸ்தீரணமாய் அறியவேணுமானல், உலோகதுவ சாஸ்திரமென்கிற புஸ்தகத்தை வாசிக்கக்கடவீர்களாக.

இதெல்லாம் பத்தும் பத்தாய் விசாரிக்கும்போது, அவசியமாய் அளவறுக்கப்படாத சாமர்த்தியத்தையும், வாக்குக்கும் எண்ணத்துக்கும் எட்டாத பிலத்தையும் கரைகாணுத விமரிசையையுங் கொண்டிருக்கிற காரணமாகிற பராபரவஸ்துவானவர் உலகத்தைப் படைத்தாரென்று பிரத்தியட்சமான சத்தியமாகும். இந்தப் பிரசங்கத்தைக் கேட்ட நாஸ்திகனுனவன் ஆச்சரியப்பட்டுக் குருசுவாமியைப் பார்த்துச் சொன்னதாவது: தேவரீராலே வருணிக்கப்பட்ட உலகத்தினுடைய மகிமையையும் பெருமையையும் நான் கேட்கும்போது, உலோகந்தானே தேவனுயிருக்கிறதென்று எனக்குக் காண்பிக்கிறது என்ருன்.

அத்தறுவாயிலே குருவானவர் நாஸ்திகனைப்பார்த்துத் திருவுளம்பற்றினதாவது: இற்றைவரைக்கும் சறுவலோகத்திலுண்டான அற்புதமான விசேஷங்களை நாம் வெளிப்படுத்தும்போ[illegible] மாய் அதுகளெல்லாம் வேறே காரணத்தினுலே வந்ததென்று [illegible]பித்தாப்போலாயிற்றே. ஆனபடியினுலே அந்தந்த வஸ்துவினுடைய ஸ்திதியும் மகிமையும் வேறே காரணத்தினுலே வந்ததானல் அவசியமாய் அந்த வஸ்து தேவனுயிருக்கமாட்டாமல் உண்டாக்கப்பட்ட வஸ்துக்களாயிருக்கச்செய்தே சர்வ லோகமெல்லாம் தேவனுயிருக்கமாட்டாதென்று பிரசித்தமாகும்.

இதெல்லாம் அதிகமதிகமாய் விளங்கத்தக்கதாக அறியவேண்டியதாவது: சகலமான வஸ்துவினுடைய மட்டும் பிரமாணமும் வேறே காரணத்தினுலே வந்ததென்று நிச்சயமாகும். இந்தப் பிரகாரமாக மண்டபத்திலேயுண்டான தூண்களுடைய உயரத்தையும் அகலத்தையும் விநோதமுள்ள வேலைகளையும் மட்டோடேயும்

பிரமாணத்தோடேயும் இருக்கப்பண்ணியிருக்கிறதினாலே, சிற்பாசாரியனாலே இந்தமட்டும் பிரமாணம் வந்ததொழிய மற்றப்படியல்ல. இந்தடவாக மற்றுமுண்டான காரியத்திலே யோசிக்கக்கடவோம். இதெல்லாம் இப்படியிருக்லகயிலே சர்வலோகத்திலுண்டான சந்திர சூரிய நட்சத்திரங்கள் சமுத்திரம் ஆகாயம் இதுமுதலான வஸ்துவென்னப்பட்ட யாவுக்குமட்டும் பிரமாணமும் உண்டாயிருக்கிறபடியினாலே அவசியமாய் அதுகளெல்லாம் காரணத்தினாலே வந்த வஸ்து, தேவனாயிருக்கமாட்டாதென்கிறதற்குச் சந்தேகமில்லை.

இந்த விஷயத்திலேதானே நாஸ்திகன் வேறொரு சந்தேகத்தை விண்ணப்பஞ் செய்தான். அதெப்படியென்றால், இந்த உலகம் அநாதியாயிருந்ததென்று சொல்லக்கூடாதோவென்றான். அந்த வார்த்தையைக் கேட்ட குருசுவாமியார் அவனைப் பார்த்துத் திருவுளம் பற்றினதாவது: உலோகம் எப்போதுமிருந்ததென்று சொன்னாலும் உத்தாரஞ் சொல்லாதிருந்தாலும், உத்தாரம் உலகத்திலுண்டான வஸ்துவென்னப்பட்ட யாவுக்கும் அளவும் மட்டும் பிரமாணமும் உண்டாயிருக்கிறபடியினாலே அவசியமாய் வேறே காரணத்தினாலே வந்ததென்று நிச்சயமாகும்.

பின்னையும் உலகம் அநாதியாயிருந்ததென்று யாதாமொருத்தன் சொன்னால், எண்ணிக்கைக்குள் அடங்காத அபத்தங்களைச் சொல்லவேண்டியிருக்கும். இந்தப்பிரகாரமாக அளவில்லாத மரங்களும், அளவில்லாத மிருகங்களும், அளவில்லாத மனுஷரும் இதுமுதலான மட்டில்லாத அநேகம் வஸ்துக்கள் உண்டாயிருக்கிறதென்று சொல்லலாம். இதிப்படியிருக்கையிலே, மயிர்களுடைய வெண்ணிக்கை உலோகத்திலிருக்கிற மனுஷருடைய வெண்ணிக்கையைப்பார்க்க அதிகமாயிருந்தாலும், மனுஷரும் மயிர்களும் அளவில்லாததாயிருக்கக்கொள்ள, எல்லாஞ் சரியாயிருக்கிறதென்று சொல்லவேண்டியிருக்கும். இந்த அபத்தத்தையுஞ் சொல்லாதபடிக்கு உலோகம் அநாதியாயிருந்ததென்று சொல்லவொண்ணாது.

ஆனால் இப்போது நம்மாலே சொல்லப்பட்ட நியாயத்தை அநேகம்பேர்களுக்குக் கண்டுபிடிக்கிறதற்கு அருமையாயிருக்கிறபடியினாலே, எல்லாரும் எளிதாய்க் கண்டுபிடிக்கலான விசேஷத்தைச் சொல்லிக்காட்டுவோம். அதெப்படியென்றால், பருவதங்களுடைய நுனி சிகரத்தின்மேலே மண்ணும் மணலுமில்லாதிருந்தபோதி

லும் வருஷந்தோறும் இப்படிப்பட்ட பாறையிலே அநேகம்விசை பரிபூரண மழை பெய்ததினாலேயும், சந்திர சூரியன் கதிர்களினாலேயும் வருஷந்தோறும் எவ்வளவாகிலும் குறையவேண்டியிருக்கிறது. ஆனால் முகிவில்லாத வருஷமுண்டானால்; பருவதங்களுடைய நுனிச் சிகரமட்டுக்குச் சரியாயிருக்கும். ஆனபடியினாலே அநேகம் பருவதங்கள்மேலே இப்படிப்பட்ட பாறைகள் உண்டாயிருக்கிறபடியினாலே உலோகம் அநாதியாயிருக்கவில்லையென்றும் முகிவில்லாத வருஷம் மழை பெய்யவில்லையென்றும் உலோகம் வேறே காரணத்தினாலே வந்ததென்றும் உலோகம் துவக்கினதென்றும் உலோகம் தேவனாயிருக்கக்கூடாதென்றும் அவசியமாய் நிச்சயிக்கக்கடவோம்.

இந்தப் பிரசங்கத்தை மனதிலே கெட்டியாய்த் தரித்த நாஸ்திகனிருந்து நான் பிறந்தநாள் துவக்கி ஒருகாலும் இப்படி நியாயங்களைக் கேட்கவில்லையென்று இந்தச் சீமையிலுண்டான சாஸ்திரிகள் இப்படி யோசிக்கமாட்டார்களென்றும் விண்ணப்பம் பண்ணினதாவது: சுவாமீ, தேவரீர் பண்ணின பிரசங்கத்தினிமித்தமாக என்னுடைய அந்தகாரமெல்லாம் நீங்கிப்போச்சுது. ஆனால் நான் சிறுபத்திலே துவக்கி தேவன் இல்லையென்கிற நாஸ்திகருக்குள்ளே சஞ்சாரம் பண்ணினதால், இத்தனை தத்தளித்துக்கொண்டிருக்கிற என்னுடைய மனதிலே கடவுள் நிர்ணயத்தை அதிகமாய்த் தரிப்பிக்கத்தக்கதாக, தேவரீர் இன்னஞ் சில வேறே நியாயங்களை அடியேனுக்கு பிரசங்கித்தீரானால், அதுகளை மிகுந்த அபேட்சையோடே கேட்பேனென்றான்.

அந்தச் சமையத்திலே சத்தியபோதகர் அருளிச்செய்ததாவது: பரலோகத்தையும் அதிலே உண்டான ஆச்சரிய விசேஷங்களையும் வரணித்ததினாலே, அதுக்கும் ஆதிகாரணமும் அவசியமாயிருக்கவேண்டியிருக்கிறதென்று நிச்சயித்திருக்குமாப்போலே, சின்ன உலகமாகிற மனுஷனையும் அதிலே உண்டான தத்துவங்களையும் பத்தும் பத்தாய் விசாரித்தால் அளவில்லாத சாமார்த்தியத்தையும் ஒப்பில்லாத வலுமையையும் அளவருக்கப்பட்டாத கருணையையும் கொண்டிருக்கிற ஆதிகாரணமாகிற பராபரவஸ்துவானவர் மனுஷரை உண்டாக்கினாரென்றும் பிரசித்தமாகும்.

அதெப்படியென்றால், அண்டத்திலேயுண்டானதெல்லாம் பிண்டத்திலே யிருக்குதென்று சொல்லுகிறார்களே. இதுக்கு அர்த்த

மேதென்றால், பரமண்டலத்திலேயும் பூலோகத்திலேயும் உண்டான அதிசயமான விசேஷங்களெல்லாம் மனுஷரிடத்திலே காணலாமென்று அர்த்தமாகும். இது நிமித்தமாக மகாத்துமாவானவர் மனுஷனானவன் சர்வேசுரனாலே உண்டாக்கப்பட்ட சகலமான வஸ்துக்களுடைய குறிப்பிடமாயிருக்கிறானென்று அருளிச்செய்தார்.

அசரீரியாயிருக்கிற வஸ்துகளுக்குண்டான குணங்களெல்லாம் மனுஷனுடைய நர சீவனிடத்திலே பிரகாசிக்கிறதுந் தவிர வளர்த்தி சீவனுள்ள பொருட்களுக்குமுண்டான உச்சிதமான குணங்களென்னப்பட்ட யாவையும் மனுஷருடைய சரீரத்திலே பிரத்தியட்சமாய்க் காணலாம். இதெல்லாம் பிரசித்தமாயிருக்கிறதினாலே, இம்மாத்திரம் சொல்லிக்காட்டினது போதும். ஆனாலும் பராபரவஸ்துவினுடைய சாயலாக உண்டாக்கப்பட்ட நரசீவனுடைய மகிமையையும் பெருமையையும் வேறே சமையத்திலே உங்களுக்கு வரணிக்கப்போகிறதினாலே, ஆதிகாரணத்தினுடைய ஒப்பில்லாத கிரமமுள்ள விமரிசையையும், அளவறுக்கப்படாத சாமார்த்தியத்தையும் கண்டுபிடிக்கத்தக்கதாக மனுஷனுடைய சரீரத்தின் அவையவங்களுடைய எண்ணிக்கையையும் ஒழுங்கையும் பிரயோசனத்தையும் அயிக்கியத்தையும் தொந்தத்தையும் தொழில்களையும் இணக்கத்தையும் நரம்புகளையும் சில இரத்தத்தாரைகளையும் நாடிகளையும் பாத்திரங்களையும் சந்துகளையும் நினைக்கக்கடவீர்கள்.

இப்படிப்பட்ட விசேஷங்களை நாம் பார்க்கும்போது, நந்தவனத்திலுண்டான எண்ணிக்கைக்குள்ளடங்காத பரிமளித்திருக்கிற புஷ்பங்களைப் பார்க்கிறவனெல்லாம் பறிக்கமாட்டாமல் ஒன்று இரண்டு மாத்திரம் பறிக்கிறாப்போலே, மனுஷருடைய சரீரத்திலே மிகவும் விளங்குகிற எண்ணிக்கைக்குள்ளடங்காத அற்புதங்களை வெளிப்படுத்தாமல் கண்ணுக்குப் பிரசித்தமாய்க் காண்பிக்கிறதையும் முகத்தையும் சங்க்ஷேபமாக வரணிப்போம்.

முந்த முந்தக் கைகளுடைய பிரயோசனத்தைப் பார்க்கும்போது, மனுஷர் பிழைக்கத் துவக்கிறதற்கும் வேண்டிய தொழில்களெல்லாம் பண்ணுகிறதற்கும் பிரதான எத்தனமாயிருக்கிறதுந் தவிர சத்துருக்களைச் செயிக்கிறதற்கும், மோசம் வராதபடிக்கு உபாயங்களெல்லாம் பண்ணுகிறதற்கும் இப்போது கையினுடைய வங்கிஷங்களைப் பார்த்தால், கெட்டியாய்ப் பிடிக்கிறதற்கும் எடுக்கி

றதற்கும் எறுகிறதற்கும் வெவ்வேறே அநேகம் சிஷ்டிகளுக்கும் அஞ்சு விரல், சிலதுகள் நீண்டதாயிருக்கிறதும் அந்தந்த நியாயங்களுக்கு நாலு விரலுக்கு மூன்று சந்துகளுண்டாயிருந்தாலும் பெருவிரலுக்கு இரண்டு சந்துண்டாயிருக்கிறது. இப்படிப்பட்ட சந்துகள் நிமித்தமாக கை நீட்டலாம் வளைக்கலாம். பின்னையும் விரல்களெல்லாம் அதிகமான பிலத்தோடே கண்டிப்புள்ள வஸ்துக்களைப் பிடிக்கிறதற்கு சதையிலே ஸ்திரமாகப் பதிந்திருக்கிற நிகங்களால் மூடியிருக்கிறது.

கடைசியிலே கரத்தினுடைய நரம்புகளையும், நாடிகளையும், தத்துவங்களையும், இரத்தத்தாரைகளையும் சொல்லுகிறவனர். இதெல்லாமிப்படியிருக்லகயிலே இத்தனை அதிசயமான காரியங்களுக்கு உதவுகிற கையை உண்டாக்கினவர் இருக்கிறதுந் தவிர அளவறுக்கப்படாத சாமார்த்தியத்தைக் கொண்டிருக்கிறரென்கிறதற்குச் சந்தேகமில்லை. ஆனல் மனுஷனுடைய கரமானது இத்தனை ஆச்சரியமாயிருந்தால், முகத்தைப் பத்தும் பத்தாய் ஆராய்ந்து பார்த்தால் இத்தைப்பார்க்க அதிகமான அற்புதங்களைக் காணலாம்.

அதெப்படியென்றால், மனுஷருடைய முகமானது ரூபலாவண்ணியங்களுடைய பத்திராசனமாயிருக்கிறது. முந்தின வங்கிஷங்களுடைய விளக்கத்தையும் அழகையும் பார்க்கும்போது, இந்த அவயவங்களெல்லாம் திவ்வியமான சாஸ்திரத்தின்படியே உண்டாக்கப்பட்டதாயிருக்கிறதென்று பிரசித்தமாகும். ஒரு சாணுக்குள்ளே பஞ்சேந்திரியங்களெல்லாம் காண்கிறது. இப்படிப்பட்ட பஞ்சேந்திரியங்களுடைய வெவ்வேறே தொழில்களையும் விஷயங்களையும் பராமரித்தால், சருவலோகத்திலுண்டான புதுமைகளுக்குள்ளே அதுவே ஆச்சரியமென்று நிச்சயிக்கக்கடவோம்.

ஆனல் இப்படிப்பட்ட விஷயங்களை வெளிப்படுத்த மனதாயிருந்தாலும், சமுத்திரத்திலே குளிக்கும்போது எண்ணிக்கைக்குள்ளடங்காத சிப்பிகளைப் பார்த்தால் எல்லாத்தையும் ஒருமிக்கப் பிடிக்கிறதற்கு எத்தனை ஆசையாயிருந்தாலும் சிலதுகளைமாத்திரம் எடுக்கிறாப்போலே, நான் இந்த அதிசயமான விசேஷங்களை வரணிக்கத்தக்கதாக தாற்பரியமாயிருந்தாலும் இதெல்லாம் நன்றாய் வெளிப்படுத்தக்கூடாததினலே கண்களிலே தோன்றுகிற சில அற்புதங்களைச் சொல்லிக்காட்டுவோம்.

அதெப்படியென்றால், விலைமதியாத மாணிக்கங்களைத் தங்கத்திலே பதித்திருந்தால் சம்பிரமாகப் பிரகாசிக்கிறப்போலேயும், சந்திர சூரியன் சோதிமண்டலங்களிலே சாங்கோபாங்கமாய் விளங்கிறப்போலேயும், இரண்டு கண்களானது முகத்திலே மிகவும் பிரகாசிக்கிறதென்று பிரசித்தமாகும். முந்த முந்த விலையேறப் பெற்ற இரத்தினங்கள், பட்டுப் பட்டாவழிகள் பூச்சியமாய்ப் பூட்டியிருக்குமாப்போலே, சகலமான இரத்தினங்களைப்பார்க்க அதிசயித்திருக்கிற கண்களிரண்டு நிமைகளிலே பதனமாய் மூடியிருக்கிறது. இப்படிப்பட்ட இரண்டு கண்களுடைய ஆச்சரியமான தொந்தமேதென்றால், இரண்டு கண் ஒருமிக்கப் பின்னபேதமின்றியும் உசத்துகிறதும் ஒருமிக்கத் தாழ்த்துகிறதும் ஒருமிக்க அஷ்டதிக்கும் பார்க்கிறதும் தவிர இரண்டு கண்கள் ஒரு காரணத்தினாலே அசையக்கூடாததுகளாயிருப்பதினாலே ஒவ்வொரு வஸ்துவினுடைய ரூபமானது இரண்டு பிரத்தியிந்திரியங்களிலே எழுதப்பட்டதுமாயிருந்தாலும் பொது விந்திரியத்தில் ஒன்றித்து ஒரு வஸ்துமாத்திரங் காண்பிக்கிறது. இந்தப்பிரகாரமாக இரண்டு கண்முன்பாக ஒரு இரத்தினத்தை வைத்தால் இரண்டு இரத்தினத்தைக் காண்பியாமல் ஒரு இரத்தினமாத்திரம் தோன்றுகிறது.

பின்னையும் இந்தக் கண்களுடைய சுரூபமேதென்றால் அதிகமான பலத்தோடேயும் எளிதான ஆசையோடேயும் அங்கங்கே தரிகிறதற்கு வட்டரூபமாயிருக்கிறது. இதுக்கப்பால் அறியவேண்டியதாவது: கண்களுக்கு மோசம் வராதபடிக்குக் கண்கள் கெபிக்குள்ளே தரித்திருக்கிறதுந் தவிர மற்றுண்டான சரீரத்தின் அவையவங்களுக்கு வருகிற விக்கினங்களெல்லாம் தள்ளுகிறதற்கு வேவுக்காரரைப்போலே உயர்ந்த ஸ்தலத்திலே ஸ்தாபிக்கப்பட்டது.

பின்னையும் கண்களுக்குக் குளிர் முதலான ஆகாசத்தினுடைய பல பல விகாரங்களுடைய நிமித்தமாக விக்கினம் வராதபடிக்குக் கண்களிலே மாங்கிஷமில்லாமல் ஸ்படிக்கத்தைப்போலேயும் தண்ணீர்போலேயும் முந்திரிகைப்பழ இரசத்தைப்போலேயும் பற்பல சாரங்கள் காணப்படும். கடைசியிலே இப்படிப்பட்ட கண்களுக்குள்ளே சர்வலோகத்திலேயுண்டான சகலமான கண்டிப்புள்ள வஸ்துக்களுடைய ரூபங்கள் சுபாவமான வர்ணங்களுடனே ஒரு க்ஷணத்திலே உச்சிதமாயெழுதப்படும். இந்தப்பிரகாரமாக சந்திர

சூரிய நட்சத்திரங்களெல்லாம் எத்தனை தூரமாயிருந்தாலும் சோதிமண்டலம் எத்தனை விசாலமாயிருந்தாலும், பருமமாயிருந்தாலும், சின்னதாயிருக்கிற கண்ணிலே ஒரு க்ஷணத்திலே காண்பிக்கிறது.

ஆனல் கண்டிப்புள்ள பொருட்களை கண்கள் பார்க்கிறதுந்தவிர அசரீரியாயிருக்கிற நரசீவனுடைய இரகசியமான விசாரங்களை முதலாய் வெளிப்படுத்துகிறது. இந்தப் பிரகாரமாக மனதிலே யுண்டான வற்மமும், பக்ஷமும், கோபமும், சாதுவும், பயமும், துணிவும், நம்பிக்கையும், அவநம்பிக்கையும், அகங்காரமும், தாழ்ச்சியும், நிந்தையும், வணக்கமும், பராக்கும் அவதானமும் ஆசைகளெல்லாஞ் சுபாவமாய்க் கண்களிலே காண்பிக்கிறதென்று பிரதிதினம் அநுபவசித்தியினலே கண்டுபிடிக்கிறேம்.

ஆனல் இப்படிப்பட்ட அற்புதமான இரகசியங்களை வெளிப்படுத்துகிறதற்குத் தமிழ்ப்பாஷையிலே ஆன வார்த்தையில்லாததினலேயும் நீங்கள் அதுகளைக் கிரிகித்கிறதற்கு அருமையாயிருக்கிறதினலேயும் இம்மாத்திரம் சொல்லிக்காட்டினது போதும்.

இற்றைவரைக்கும் நம்மாலே சொல்லப்பட்ட பிரசங்கத்தினிமித்தமாக மனுஷரிடத்திலே மிகவும் விளங்குகிற அதிசயமான விசேஷங்களை பத்தும் பத்தாய் விசாரிக்குமிடத்திலே, கரைகாணுத் கருணையும் அளவறுக்கப்படாத சாமார்த்தியத்தையும் அளவில்லாத பிலத்தையும் மட்டில்லாத கிரமமுள்ள விமரிசையையுங் கொண்டிருக்கிற ஆதிகாரணத்தினலே வந்ததொழிய மற்றப்படியல்ல. இதெல்லாம் காரணமில்லாமல் தானுப் முளைத்ததென்று முதிர்ந்த மதிப்பிராங்கிஷத்தைக் கொண்டிருக்கிற பயித்தியகாரன் முதலாய்ச் சொல்லவும் எண்ணவுமாட்டான்.

ஆனல் மனுஷரிடத்திலேமாத்திரம் இப்படிப்பட்ட அற்புதங்கள் காண்பிக்கிறதென்று விசாரிக்கவேண்டியதில்லை: பூமியின்மேல் திரிகிற மிருகங்களுக்கும் ஆகாயத்திலே பறக்கிற பட்சிகளுக்கும் சமுத்திரத்திலே நீந்துகிற மச்சங்களுக்கும் நந்தவனங்களிலே நாட்டியிருக்கிற மரங்களின் புஷ்பங்களுக்கும் உண்டான அதிசயமான விசேஷங்களைப் பரீக்ஷித்தால் அதுகளுக்கெல்லாம் ஆதிகாரணமுண்டாயிருக்கிறதென்று ஒப்பிக்கிறதுந் தவிர இப்படிப்பட்ட ஆதிகா

ரணம் சகல நன்மைச் சுபாவமாயிருக்கிறதென்று பிரத்தியட்சமாய்க் காண்பிக்கிறது.

கடைசியிலே ஒரு பூச்சியிலேமுதலாய் அசைகிறதற்கும் நடக்கிறதற்கும் தின்கிறதற்கும் சொரிகிறதற்கும் வேண்டிய அவயவங்களையும் தத்துவங்களையும் நரம்புகளையும் சலத்தாரைகளையும் உற்றுப்பாரமரிசித்தால் கெட்டிக்காரனுயிருக்கிற பேர்போன சித்திரக்காரன் ஒருத்தன் பிரமாண்டமான அரண்மனையிலுண்டான வங்கணமென்னப்பட்ட யாவையும் ஒரு தகட்டிலே எழுதினதினலே தன்னுடைய சாமார்த்தியத்தையும் புத்திக் கூர்மையையும் காண்பித்தாப்போலே, பராபரவஸ்துவான சர்வேசுரனுனவர் சோதிமண்டலமுண்டாக்கிறதிலே தம்முடைய மட்டில்லாத மகிமைசோபன பிரதாபத்தைப் பிரகாசிப்பித்ததற்குப் பிற்பாடு நீசமான பூச்சியிலே முதலாய்த் தம்முடைய அளவில்லாத சூட்சமுள்ள சாமார்த்தியத்தைக் காண்பித்தாரென்று பிரசித்தமாகும்.

இந்த அற்புதமான விசேஷங்களைக் கேட்ட நாஸ்திகனுனவன் மிகுந்த சந்தோஷப்பட்டுக் குருசுவாமியார் பாதத்திலே விழுந்து விண்ணப்பம் பண்ணினதாவது: முன்னுலே யென்னுடைய புத்தியிலேயும் மனதுக்குள்ளேயுமிருந்த அந்தகாரமெல்லாம் உம்முடைய பிரசங்கத்தின் தெளிவினலே நீங்கிப்போச்சுது. தேவரீர் இப்போது என்னுடைய அக்கியானத்தை நிவாரணம் பண்ணினதினலே உமக்கே ஸ்தோத்திரமுண்டாகக்கடவது. பராபரவஸ்துவானலே சர்வேசுரனுனவர் எல்லாத்துக்கும் ஆதிகாரணமாயிருக்கிறுரென்று கெட்டியாக முழுமனதோடே விசுவசிக்கிறேன். இனிமேல் இப்படிப்பட்ட பராபரவஸ்துவினுடைய மகிமையைத் தேவரீர் அதிகமதிகமாய் வெளிப்படுத்தினதினலே யெனக்கு மகா பிரகாசமாயிருக்குதென்றுன்.

அத்தறுவாயிலே குருவானவர் திருவுளம்பற்றினதாவது: உன்னுடைய புத்திக்கும் மனதுக்கும் ஞானப்பிரகாசம் விளங்கினதினலே நமக்குப் பரிபூரண சந்தோஷம் உண்டாச்சுது. ஆனல் ஆதிகாரணத்தினுடைய நிர்ணயமானது ஞானவுபதேசத்துக்கும் சகலமான தருமங்களுக்கும் அஸ்திவாரமாயிருக்கிறதினலே, இப்படிப்பட்ட ஆதிகாரணம் அவசியமாயிருக்கிறதென்று ஒப்பிக்கிறதற்காகத் தப்பில்லாத நியாயத்தை உற்றுக்கேள். அவ்வண்ணமே இப்பூ

லோகத்திலே உண்டான மனுஷரென்னப்பட்ட யாவர்க்கும் ஒரு மனுஷன் மாத்திரம் சேதம் வருத்துவிக்கமாட்டாததுபோல மனுஷரெல்லாரும் ஒரு மனுஷனுக்குச் சேதம் வருத்துவிக்கமாட்டார்களென்று சத்தியமாகும். இதெல்லாம் இப்படியிருக்க இந்தப் பூலோகத்திலே சிதறியிருக்கிற மனுஷரெல்லாரும், அவசியமாய் ஆதிகாரணமிருக்கிறதென்றும் ஒரு பராபரவஸ்துவானவர் இருக்கிறதென்றும், சர்வேசுரனுன ஆண்டவர் எல்லாத்துக்கும் ஒருத்தர் இருக்கிறாரென்றும் சங்கேதம் பண்ணினுர்கள்.

அவ்வண்ணமே தமிழரும் வடுகரும் மிராட்டியரும் கன்னடியரும் முகிலரும் பார்சியத்தாரும் துலுக்கரும் வங்காளத்தாரும் தார்த்தாரியாரும் உலகத்திலே யுண்டான மற்ற எண்ணிக்கைக்குள்ளடங்காத சனங்களும் ஒரு சர்வேசுரன் இருக்கிருரென்று தப்பில்லாத சத்தியமாயிருக்கிறதென்று ஸ்திரமான விதமாய்ச் சொல்லுகிருர்கள். இதுக்கப்பால் அறியவேண்டியதாவது: மேற்சொல்லப்பட்ட சனங்களுக்குள்ளே இலௌகீக காரியங்களிலேயும் ஆசாரங்களிலேயும் மட்டில்லாத தூரமும் பட்சமும் உண்டாயிருந்தாலும் இந்தக் காரியத்திலே எல்லாரும் கூடினுர்களென்றும் இப்படிப்பட்ட தெய்வத்ினுடைய நிரணயம் தலைமுறை தலைமுறையாக ச[illegible]திலே பரம்பியிருக்கிறதென்றும் பார்த்து அவசியமாய் ஆதிகாரணமான சர்வேசுரன் இருக்கிருரென்று நிச்சயிக்கக்கடவோம்.

ஆனல் அஞ்சு நாஸ்திகர் மாத்திரம் தேவனில்லையென்று விசாரிக்கிறதாகச் சொல்லாதே. அவ்வண்ணமே இப்படிப்பட்ட நாஸ்திகர் மகா துரோகிகளாயிருந்து எண்ணிக்கைக்குள்ளடங்காத பாவதோஷங்களைக் கட்டிக்கொண்டு பாவச்சேற்றிலே அமிழ்ந்தி இருக்கிறதினலே புத்தி மயங்கி எந்த விதமாகக் குளறிப்பிதற்றினலும் அவர்களுடைய வார்த்தை சகலமான மனுஷருடைய சாட்சி முன்பாக நிற்குமோ? கண்தெரியாத நாலைந்துபேர் உலகத்திலே சூரியனில்லையென்று சொன்னலும், தெளிவுள்ள கண்ணுடையவர்கள் கேட்பார்களோ? அவஸ்தையாய் இருக்கிற வியாதிக்காரனுடைய நாவிலே தோஷம் பிறந்ததுக்குப் பிற்பாடு தேன் கசப்பாயிருக்கிறதென்று சொன்னலும் மற்றுண்டாகிய ஆரோக்கியமுள்ளவர்கள் ஒத்துக்கொள்ளுவார்களோ? இந்தப் பிரகாரமாக பாவ தோஷத்தினலே கெட்டுப்போன நாஸ்திகர் தேவன் இல்லையென்று சொல்லும்

போது ஆதிகாரணமிருக்கிறதென்கிற சத்தியத்தை மற்றவர்கள் எல்லாரும் பிரத்தியட்சமாய்க் காணுகிறபோது துரோகிகளான நாஸ்திகர் பேரிலே அருவருப்பாயிருப்பார்களொழிய மற்றப்படியல்ல.

ஆனால் இந்த விஷயத்திலே அறிய வேண்டியதாவது: நாஸ்திகர் முதலாய் எத்தனை பொல்லாதவர்களாய் இருந்தாலும் பராபரவஸ்துவானவர் தாம் இருக்கிற நிர்ணயத்தைச் சகலமான மனுஷருடைய இருதயத்துக்குள்ளே தெளிவித்ததினாலே இப்படிப்பட்ட நாஸ்திகருக்குப் பயங்கரமான இக்கட்டு அசுப்பிலே வருகிறபோது சுபாவமாய் ஆதிகாரணமான சர்வேசுரனை மன்றாடுவார்களென்றார். இப்படிப்பட்ட வார்த்தையைக் குருவானவர் முகித்த உடனே நாஸ்திகன் இருந்து சொன்னதாவது.

தேவரீர் சொன்னதெல்லாம் சத்தியந்தானே. அவ்வண்ணமே நான் சிறுப்பத்திலே துவக்கி நாஸ்திகரோடே சஞ்சாரம் பண்ணினதினாலே இப்படிப்பட்ட பொல்லாதவர்கள் தேவன் இல்லையென்று சொல்லிப் பாவத்துக்குப் பயப்படாமல் தங்களுடைய பொல்லாத இச்சையின்படியே நடக்கிறார்களென்று பிறத்தியட்சமாய்க் கண்டேன். கடைசியிலே நானும் இற்றைவரைக்கும் நாஸ்திகனாயிருந்தாலும் நாலு நாட்களுக்கு முன்னே பயங்கரமான இடிச்சத்தங்களைக் கேட்டு பூமியின் அதிர்ச்சியினுடைய மிகுதியினாலே இந்த மண்டபத்தின் தூண்கள் நடுங்கிறதைக் கண்டு சற்றுநேரத்துக்குள்ளே சாவேனென்று பயந்து எனக்கு மோசம் வராதபடிக்கு ஆதிகாரணமாய் இருக்கிற சருவேசுரனை உம்முடைய பாவனையாக மன்றாடினேனென்று மனது திரும்பின நாஸ்திகன் இந்த வார்த்தையைச் சொன்னவுடனே சூரியன் அஸ்தமித்தது. ஆனபடியினாலே குருசுவாமி அவர்களெல்லாருக்கும் ஆசீர்வாதம் கொடுத்துச் செபத்தியானம் பண்ணத் துவக்கினார்.

---

## பராபர வஸ்துவின் ஏகத்துவம். மூன்றாம் சல்லாபம்.

---

மறுநாள் விடியற்காலத்திலே தானே எல்லாரும் பிறப்பட்டு மூன்று நாழிகை நடந்ததுக்குப் பிற்பாடு ஸ்நானம் பண்ணத்தக்க

தாகத் தெப்பக் குளத்திலே இறங்கி சுத்தராயிருந்து அப்பாலே போகிறதுக்கு எல்லாரும் ஆயித்தமாயிருக்கிற சமையத்திலே வல சை வாங்கின அனேகம் பேர்கள் சத்தியபோதக சுவாமியாரவர் களிடத்திலே இருந்த சிஷர்களோடே சொன்னதாவது: நீங்கள் அப் பாலே போகவேண்டாம்; சீமை எல்லாம் கலக்கமாச்சுது; பெரிய து ரை மரணத்தை அடைந்ததுக்கு பிற்பாடு அவனுடைய குமாரர்கள் இரண்டு பேர் சீமையை ஆளத்தக்கதாக ஆசையாயிருந்து தங்கள் பேரிலே அன்னியவொன்னிய பரிபூரண வற்மமாயிருந்து படை கூட்டிக் கிராமங்களைச் சுட்டுப் போட்டுச் சிறை பிடித்து எங்கும் கொள்ளை இட்டுக் கடைசியிலே முதல் நாள் சண்டை பண்ணிஞர் கள்.

இப்படிப்பட்ட யுத்தத்தினிமித்தமாக சமர்க்களத்திலே பீரங்கி யினுலேயும் குண்டு குழல்களினுலேயும் துப்பாக்கியினுலேயும் கத்திகளினுலேயும், வாணங்களினுலேயும் சக்கரம் எரிந்ததினுலே யும் இப்படிப்பட்ட முப்பத்திரண்டு ஆயுதங்களினுலேயும் கா யங்கள் வெகுவாய்ப்பட்டு தோள் விழுந்தபேருந், தலை விழுந்த பே ருந், குடலற்று விழுந்த பேரும், இடுப்பு முறிந்தவர்களும் கிழித்து ப் போடப்பட்டவர்களுமாய்க் கிடக்கிருர்கள்.

அனுல் சண்டப் பிரசண்டருமாய் எதிராக யுத்தம் பண்ணு கிருப்போலே இரண்டு துரைகளும் ஒருவருக்கொருவர் அந்தச் சீ மையை நீ ஆளுவாய் நான் ஆளுவேன் என்று மகா பேச்சு வார்த்தை யாகி மகா ஆங்காரக் கோபக் கொதிப்பு எழும்பித் துவேஷித்துப் ப கைத்து அகோரமான சண்டை பண்ணத்துவக்கி ஒருவருக்கொரு வர் தங்களுடைய சேனை படைகளோடே எதிர்த்து சூரிய வுக்கிரா ய் மகா அகோரமான சண்டை பண்ணினதினுலே, யானை குதிரை யோட்டகம் ராவுத்தர் மாவுத்தர் பட்டாணிகள் பொருந்திலியர் து லுக்கர் வடுகர் முதலான சேனை படைகளெல்லாம் வெட்டுண்டு, கற் பாறையிலே விழுந்த ஸ்படிக்கப்பாத்திரம் உடைந்து நொறுங்கின துபோலே சின்ன பின்னமாய்ச் செத்துருண்டு ரணக்களமாகி யானை ப்பிணம் குதிரைப் பிணம் சேனைப் பிணங்கள் மலைபோலக் குவிந்து போய் இரத்த வெள்ளாருயோடிப்போச்சுது, சூரியனும் அஸ்தமித் தது என்ருர்கள்.

இந்தச் செய்தியை அந்த வலசை வந்த சனங்கள் சொல்ல உபதேசிமாரும் மற்றெல்லாரும் கேட்க சுவாமியாரவர்கள் பாதத்திலே விண்ணப்பம் பண்ணினார்கள். பிறபாடு சுவாமியாரவர்கள் தம்முடைய சீஷர்களையும் உபதேசம் கேட்க வந்தவர்களையும் ஆன ஸ்தலத்திலே இருக்கச்சொல்லி அருளிச் செய்ததாவது.

இந்தப் பயங்கரமான கலகம் அப்பாலே பயணமாய்ப் போகிறதற்கு விக்கினமாயிருந்தாலும், நாம் வெளிப்படுத்தின சத்தியங்களை மனதிலே தரிக்கிறதற்கு உதவியாய் இருக்கும். அவ்வண்ணமே பராபர வஸ்துவினுடைய நிர்ணயம் பண்ணினதுக்குப் பிற்பாடு இப்படிப்பட்ட கடவுளாகிற சர்வேசுரன் ஒருவர் மாத்திரம் இருக்கிறாரென்று பிரசித்தமாய் ஒப்பிவிக்கத்தக்கதாக நீங்கள் இப்போது கேட்ட விசேஷங்களை நினைத்துக்கொள்ளுங்கள்.

அதேதென்றால் ஒரு இராச்சியத்தில் இரண்டு துரைகள் உண்டானால் அந்தச் சீமை எல்லாம் நிர்மூலமாய்ப் போகிறாப்போலே சர்வலோகத்திலே இரண்டு மூன்று நூறு ஆயிரம் லெட்சங் கோடி தேவர்கள் உண்டானால் உலகம் எல்லாம் நிர்மூலமாய்ப் போமென்கிறதற்குச் சந்தேகமில்லை. ஆனபடியினாலே ஒருத்தனுக்கு ஒரு விதமாகக் காரியங்களை நடத்தச் சித்தமாயிருக்கும், வேறொருத்தனுக்கு வேறே விதமாக உலகத்தை நடத்தத்தக்கதாக மனது வரும். அவ்வண்ணமே இப்படிப்பட்ட தேவர்கள் சுதந்தரமுள்ள மனதைக்கொண்டிருக்கிறபடியினாலே, வேணும் வேண்டாம் என்கிற பிலத்தினிமித்தமாகத் தங்களுடைய இச்சையின்படியே காரியங்கள் என்னப்பட்ட யாவையும் நடத்துவார்கள்.

ஆனபடியினாலே சந்திர சூரிய நட்சத்திரங்கள் பூதியங்கள் முதலானதுகள் விபரீதமாய்ப் போமென்கிறதுக்குச் சந்தேகமில்லை.

சீஷன்.—ஆனால் சரீரத்திலே அநேக அவையவங்கள் உண்டாயிருந்தாலும் மனுஷன் பிழைக்கிறதற்கு அந்நிய வொந்நியமாய் இருக்குமாப்போலே இந்த உலகத்திலே அநேகம் தேவர்கள் உண்டாயிருந்தாலும் உலகம் எல்லாம் சாங்கோ பாங்கமாக இருக்கிறதற்கு முன் சொல்லப்பட்ட தேவர்கள் அன்னிய வொன்னியமாய்ச் சர்வலோகத்துக்கும் ஒத்திருக்கிறார்களென்று சொல்லப்போகாதோ?

குரு.—நீ சொன்ன உவமையினாலே சர்வலோகத்திலே ஒரு தேவன் மாத்திரம் இருக்கிறாரென்று பிரத்தியட்சமாய் ஒப்பிப்போம்.

அதேதென்ருல் சரீரத்திலுண்டான அவையவங்களுக்குள்ளே சிலதுகள் மேற்றரமாய் இருக்கிறதென்றும், சிலதுகள் கீழ்த்தரமாய் இருக்கிறதென்றும் சொல்லுகிறுப்போலே சர்வலோகத்திலே அநேகம் தேவர்கள் உண்டானுல் அவர்களுக்குள்ளே பெரியவர்கள் சின்னவர்கள் இருக்கிருர்கள் என்று சொல்லக்கூடாது.

பின்னேயும் உலகத்திலே அநேகம் தேவர்கள் உண்டென்று சொன்னுல் ஒவ்வொரு தேவன் சர்வத்துக்கும் வல்லவனுய் இருக்கிறபடியினுலே வேறே தேவர்களுடைய உதவியும் ஆலோசனேயும் தேவையில்லே.

ஆனபடியினுலே சின்ன உலகமாகிற மனுஷனுடைய சரீரத்திலே அவயவங்கள் எல்லாம் தனது தொழிலுக்குத் தக்கது பார்க்கிறதும் கேட்கிறதும் நடக்கிறதும் இருக்கிறதும் பிடிக்கிறதும் எறிகிறதும் இது முதலான கிரிகைகளுக்குச் சுதந்தரமுள்ள நர சீவனுனது போதுமென்று சொல்லுகிறுப்போலேயும் மனுஷருடைய சரீரத்திற்கு அநேக ஆற்றுமாக்கள் உண்டானுல் அந்த ஆற்றுமங்களுடைய விபரீதமான மனதினுலே சரீரம் பரிச்சேதமாய்க் கெட்டுப்போமென்று சொல்லுகிறுப்போலேயும் உண்டான சூரிய சந்திர நட்சத்திரங்களேயும் பூதியங்களேயும் பற்பல காலங்களேயும் ஒழுங்காக நடத்துகிறதற்கு பராபர வஸ்துவாகிற தேவன் ஒருத்தர் போதுமென்றும் வேறே அநேகம் தேவர்கள் உண்டானுல் உலகம் எல்லாம் நிர்மூலமாய்ப்போமென்று நிச்சயிக்கக்கடவோம்.

இதுக்கு அப்பால் அறியவேண்டியதாவது: சர்வேசுரனுடைய பேரை நன்ருய்க் கண்டு பிடித்தால் இரண்டு மூன்று கோடி தேவர்கள் இல்லேயென்று பிரசித்தமாய்க் காண்பிக்கிறது. அவ்வண்ணமே சர்வேசுரன் எல்லாத்துக்கும் கர்த்தாவாயிருக்கிறவர் என்கிற வர்த்தமாய் இருக்கச்செய்தே இவரல்லாமல் வேறே சர்வேசுரன் இருக்கக்கூடாது. அப்படிப்போலே இரண்டு மூன்று நூறு லட்சம் சர்வேசுரன் இருக்கிருரென்று விசாரித்துக்கொள். இப்படிப்பட்ட இலட்சஞ் சர்வேசுரன் ஒன்றில் பராபர வஸ்துவுக்குச் சரியாய் இருப்பார்கள்; ஒன்றில் அவருக்குக் கீழ்ப்படிந்து இருப்பார்கள். அவருக்குக் கீழ்ப்படிந்திருந்தால் அவர்கள் தேவர்களாய் இருக்கமாட்டார்கள். அவர்கள் பராபர வஸ்துவுக்குச் சரியாயிருந்தால் அப்போதிருக்கிற பரம சர்வேசுரன் முதலாய் சர்வேசுரனுயிருக்கமாட்

டார். அவ்வண்ணமே சர்வேசுரனானவர் எல்லர்த்துக்கும கர்த்தராயிருக்கச்செய்தே ஒன்றுக்கொன்று சரிசமானமாய் இருக்கிற இலக்ஷம் தேவர்களிருந்தால், அவர்களுக்குள்ளே ஒருத்தரும் எல்லாத்துக்கும் கர்த்தராய் இருக்கமாட்டார்; அதாவது ஒருத்தரும் தமக்குச் சரியாய் இருக்கிற மற்றவர்களுக்கு கர்த்தராயிருக்கமாட்டார். ஆனபடியினாலே அவசியமாய் ஒரு சர்வேசுரன் மாத்திரம் இருக்கிறாரென்று நிச்சயிக்கக்கடவோம்.

சீஷன்.—அநேக முத்துக்களும் இரத்தினங்களும் ஒரு வஸ்திரத்திலே வைத்திருந்தால் அநேகம் நன்மை அலங்காரமாய் இருக்குமாப்போலே அநேகந் தேவர்கள் உலகத்தில் இருந்தால் அநேகம் நன்மையாய் இருக்குமென்று காண்பிக்கிறது.

குரு—அப்படிச் சொல்லப்போகாது. ஏனென்றால் முந்த முந்த நூறு, இலட்சங் கோடி தேவர்கள் உண்டாயிருந்தால், அளவில்லாத தேவர்களாயிருக்கலாமென்று சொல்லலாமானால், இப்படிப்பட்ட அபத்தத்தைப் பைத்தியகாரன் சொல்லுவானொழிய மற்றப்படியல்ல. இதுக்கப்பால் அறியவேண்டியதாவது: முத்து இரத்தினங்கள் மட்டோடேயிருக்கிறதினாலே, அநேகம் மாணிக்கங்களைக் கூட்டினால் விலை அதிகமாய் வர்த்திக்கிறதுந் தவிர ஆன வகையோடே அதுகளை வைத்தால் அலங்காரம் பிறக்கும். சர்வேசுரனோவென்றால், சகல நன்மை சுரூபியாயிருக்கிறதினாலே தாம் ஒருத்தர்மாத்திரம் எல்லாத்துக்கும் போதுமென்று பிரசித்தமாகும். ஆனபடியினாலே கோடித் தேவர்களிருக்கிறார்களென்று விசாரித்தாலும் ஒரு சர்வேசுரனல்லாமல் மற்றுமுண்டான தேவர்களுடைய கூட்டத்திலே பிரயோசனமில்லை. இதின்நிமித்தமாக மகாப் பேர்போன சாஸ்திரியானவர் இந்த விஷயத்திலே அதிசயமான விசேஷத்தை யெழுதிவைத்தார்.

அதெப்படியென்றால், இந்த உலோகத்திலே அநேகம் தேவர்கள் இருக்கிறார்களென்று விசாரித்தால், ஒருதேவனை வேறே தேவன் சட்டைபண்ணுகிறதைப்பார்க்கச் சிற்றெறும்பை அதிகமாயெண்ணிக்கொண்டிருப்பார். அவ்வண்ணமே சிற்றெறும்பினாலே தேவனுக்குப் பிரயோசனம் வராதிருந்தாலும் சிற்றெறும்புக்குத் தேவன் அநேகம் நன்மை பண்ணலாமென்கிறதினாலே சிற்றெறும்பு இந்த உலோகத்திலே வியர்த்தமாயிருக்கவில்லை.

இதெல்லாம் இப்படியிருக்கையிலே அநேகம் தேவர்கள் இருக்கிறார்களென்று சொன்னால், அநேக அபத்தங்களைச் சொல்லவேண்டியிருக்கச்செய்தே, அவசியமாய்ச் சர்வலோகத்திலே ஒரு சர்வேசுரன்மாத்திரம் இருக்கிறாரென்று விசாரிக்கக்கடவோம்.

சீஷன்.—ஆனால் அநேக தேவர்கள் உலகத்திலே உண்டானால் மனுஷருக்கு அநேக பிரயோசனமாயிருக்குமென்று காண்பிக்கிறது.

குரு.—அநேகம் தேவர்கள் உலோகத்திலிருக்கிறதினாலே மனுஷருக்கு நன்மை வந்தாலும் உத்தாரம், வராதிருந்தாலும் உத்தாரம் அநேகம் தேவர்களுடைய கிரணயத்திற்கு உதவாது. ஆனால் இதிலே உனக்குக் கனமான மோசம் வருகிறது. அவ்வண்ணமே அநேகம் தேவர்கள் உலோகத்திலுண்டானால், ஆரைக்குறித்துத் தருமங்களைச் செய்வோம்? அவ்வண்ணமே சமுத்திரத்திலிருக்கிறக்கப்பலானது எட்டுத்திக்கிலேயும் பெருங் காற்று வீசுகிறபோது அங்கங்கே அடிபட்டுத் துறைக்குப் போகமாட்டாமல் கடலில் தப்பில்லாமல் அமிழ்ந்திப்போகுமாப்போலே, யெண்ணிக்கைக்குள் அடங்காத தேவர்களுண்டானால் நம்முடைய இருதயமும் மனமும் அங்கேயும் இங்கேயும் தத்தளித்து ஒருத்தனுடைய பாரிசத்திலே யிருந்தாலும் வேறே தேவர்களாலே அந்தப் பொல்லாப்பு வருமோவென்று பயந்து மோட்சக்கரை ஒருக்காலும் ஏறப்போகிறதில்லையென்று பிரசித்தமாகும்.

ஆனால் தேவர்களையெல்லாம் சேவிக்கலாமென்று சொல்லாதே. அதேதென்றால் எண்ணிக்கைக்குள்ளடங்காத தேவர்களுண்டானால் உன்னுடைய தருமங்களை அநேகம் பங்காய்ப் பிரித்து ஒவ்வொரு தேவனுக்கு எம்மாத்திரம் போகுமென்று பார்த்துக்கொள். அவ்வண்ணமே ஒரு ஆற்றிலே பதினாயிரம் வாய்க்கால் வெட்டினால் ஒவ்வொரு வாய்க்காலுக்கு நாலைந்து துளித் தண்ணீர் முதலாய்ப் போகாது. இதெல்லாம் இப்படியிருக்கையிலே நூற்றிருபது கோடி தேவர்களுக்கு எப்படி ஊழியம் பண்ணுவாய்? இதல்லாமல் தேவர்களெல்லாரையும் சேவிக்கத் துணிந்திருந்தாலும் அவர்கள் தானே சம்பாதிப்பார்களோ? உன்னுடைய ஊழியம் அவர்களுக்குப் பிரியமாயிருக்குமென்று உனக்குச் சொன்னவனார்?

அவ்வண்ணமே அவனவன் தனக்கு மாத்திரமே நமஸ்காரம் பண்ணவேணுமென்று எண்ணுவார்களொழிய மற்றப்படியல்ல. எப்

போதைக்கும் சர்வலோகத்திலேயுண்டான ஒழுங்கைப் பார்க்கும் போது அவசியமாய் ஒரு சர்வேசுரன் மாத்திரம் எல்லாத்தையும் நடத்திக்கொண்டு வருகிறாரென்று பிரசித்தமாகும்.

அதேதென்றால் சந்திர சூரியனுனது உத்தர தெக்ஷணயத்தி னிமித்தியமாக வருஷந்தோறும் தப்பில்லாமல் சர்வலோகத்துக்கும் சரியாய்ப் பிரகாசிக்க, சந்திரன், செவ்வாய், புதன் முதலான கிரகங்கள் அங்கங்கே ஒழுங்காய்த் திரிந்து தனது கிற்கேமனத்தினாலே பூமிக்கும் சகலமான பொருள்களுக்கும் சகாயமாயிருக்கவும், அமாவாசை பவுர்ணிமி, கிராணகாலங்களிலே இதெல்லாம் தப்பில்லாமல் அவர் சித்தத்துக்கு இணங்குகின்றது. சித்திரக்காரன் பிரகாசமுள்ள வர்ணங்களினாலேயும் கருப்புள்ள நிறங்களினாலேயும் தன்னுடைய சூட்சத்தைக் காட்டுகிறாப்போலே, சர்வேசுரனானவர் பகலிலேயும் இராத்திரியிலேயும் தம்முடைய அளவறுக்கப்படாத சாமார்த்தியத்தைப் பிரதிதினம் காண்பிக்கவும், சமுத்திரமானது எத்தனை உயரமாயிருந்தாலும், பெருங்காற்றுகளினாலே அடிபட்டுப் பறுவதங்களைப்போலே தனது உதகங்களாகிற வலைகளை உயர்த்தி பூமியிலே யெழாமல் மணலிலே மோதவும்; புத்தியில்லாத பொருட்களும் புத்தியுள்ள வஸ்துக்களும் பிழைக்கத்தக்கதாக எண்ணிக்கைக்குள்ளடங்காத உபாயங்களிருக்கவும் இதுமுதலான அதிசயமான விசேஷங்களைப் பத்தும் பத்தாய் விசாரித்தால், எல்லாத்துக்கும் ஆதிகாரணமாகிற பராபரவஸ்துவான சர்வேசுரன் ஒருத்தராயிருக்கிறாரென்று அவசியமாய்க் கண்டுபிடிப்பீர்கள். ஆனபடியினாலே இப்படிப்பட்ட ஏகபரனான பாராபரவஸ்துவைக் குறித்து பத்தியாயிருந்து அவருக்குமாத்திரம் செய்யத்தக்க உத்தம ஆராதனை பண்ணக்கடவீர்களாக.

## பாரபர வஸ்துவினுடைய தானாயிருக்குந் தன்மை.

### ௬-ம் சல்லாபம்.

சகல சகிர்த குணங்களைக் கொண்டிருக்கிறவருமாய் வேத சாஸ்திரங்களைச் சாங்கோபாங்கமாய் அறிந்திருக்கிறவருமாய்த் திவ்விய உபதேசத்தைப் போதிக்கிற சத்தியபோதகர் சுவாமியவர்களும் அ

வருடைய உபதேசிகளும் சீஷர்க்களும் சர்வேசுரன்பேரிலே தோத்திரம் சொன்னதற்குப் பிற்பாடு எல்லாரும் புறப்பட்டு ஏறக்குறைய ஒரு சாமம் நடந்ததற்குப் பிற்பாடு அக்கியானபுரத்திற்குச் சேர்ந்தார்கள். இப்படிப்பட்ட பட்டணத்தின் கிட்ட இருக்கும்போது, எண்ணிக்கைக்குள்ளடங்காத சனங்களுடைய வாதாவியையும் ஆரபாரத்தையும் பயங்கரமான சத்தங்களையும் கேட்டுக் குருசுவாமியாரவர்கள் இத்தனை சனங்கள் தாறுமாறுய்க் கூப்பிடுகிறதற்குக் காரணத்தை விசாரிக்கத்தக்கதாக ஒரு உபதேசியை அனுப்பி ஆற்றோரத்திலுண்டாயிருக்கிற வெகு நேற்றியுள்ள சிங்காரத்தோப்பிலே பிரவேசம்பண்ணி பெரிய விருக்ஷங்களுடைய நிழலிலே இளைப்பாறினர்.

இப்படியே குருசுவாமியவர்கள் தம்முடைய சீஷர்க்களோடே இளைப்பாறின இரண்டு நாழிகைக்குப் பிற்பாடு முன் சொல்லப்பட்ட பட்டணத்திற்குப் போன உபதேசி திரும்பி வந்து குருசுவாமியவர்கள் பாதத்திலே விண்ணப்பம் பண்ணினதாவது: இன்றைக்குப் பெருமாளுடைய விக்கிரகத்தை மகா அலங்காரமாய்ச் சோடிக்கப்பட்ட ஒரு சப்பரத்திலே நிறுத்தி நம்பியார் பிராமணர் முதலான அநேகஞ் சனங்கள் கூடித் தோள்மேல் வைத்துக்கொண்டு தெருவீதியைச் செதுக்கிச் சுத்தம்பண்ணி தண்ணீர் தெளித்துத் தோரணங்கள் கட்டிச் சுவர்களெல்லாம் சாந்துப்பட்டை செங்காவிப்பட்டை யடித்துப் பஞ்சவர்ணக் கோலங்களெழுதி சந்தனம், குங்குமம், சவ்வாது, பன்னீர் தெளித்துப் பல வர்ணப் புஷ்பங்களை வீதியிலே பரப்பி ஏக ஆரவார சங்கீத, மேளதாள, நாகசனம், எக்காளம், நபிரி, நகார, பேரிகை, டமான் முதலான ஆரவாரத் தொனி முழங்க,

வெகு சம்பரமத்தோடேயும் சிறப்போடேயும் பிரமாண்ட தேர் சம்பாதித்துப் பெரிய வண்டியுருளை போட்டு மகா விநோதமுள்ள யாளி, சிங்கம், கரடி, புலி, மான் முதலான மிருகம், பட்சி சாதிகளெல்லாம் மரத்தினாலேயும் பலகையினாலேயும் பல பல பதுமைகள் செய்ப்பனிட்டுத் தேரிலே வைத்துச் சட்டங்கள், குத்துக்கால்கள், கொடுங்கைகள், வளைவுசத்திரிப்பு, இருப்புச்சதுரவாட்சிகள் செப்பனிட்டு தேரிலே வைத்து வெகு விந்தையான அங்கணவிநோதமுள்ள சித்திரவேலைகளினாலேயும் மகா உச்சிதமான கொத்துவேலைகளினாலே

யும் சிங்காசனக்குரடு செப்பனிட்டுப் பொற்சரிகை, வெள்ளிச்சரிகை, சந்திர காவிச்சல்லா, சிவப்புச்சல்லா, கருப்புச்சல்லாப் பலபல வர்ணமுள்ள பட்டுப்பட்டாவழி வஸ்திரங்களும் மகா விச்சித்திரமான பொன்னெழுத்துச் சேலைகளினாலேயும் மகா விநோதமுள்ள அலங்கார நேற்றியாய்ச் சோடித்து,

முத்துச்சரம், பவளச்சரம், மல்லிகை முல்லைச்சரம், வெட்டிவேர், மருக்கொழுந்து, செந்தாமரை, தாளம்பூச் சரம், பிற்கமாலை, வாகரிசிமாலை, நட்சத்திரமாலை, இதுகளினாலே வாசலணிவ்குத்து ஆலாத்துப்பெண்கள் வெண்சாமரை வீசச் சோபனப்பெண்கள் மங்களம் பாட தூபத் தூபங்கள் விளங்க நட்டு முட்டு நாடகசாலை பலஸ்திரிகள் ஆடிவர ஆனைமேல் டமானம்பேரிகை யதிரக் குதிரைமேல் நகார நகப்பத்து முழங்க,

இருபுறமும் வரிசைவரிசையாய் இராசாக்கள், துரைகள், செட்டி வர்த்தகர், வடுகர், வெள்ளாழர் அணியணியாய் வர பிராமணர் கூட்டங்கூடிக்கொண்டு பாட்டுகள் பாடிக்கொண்டு வர அடிக்கொருக்கால் பல வர்ணப் புஷ்பங்கள் சபைக்கு இறைத்துக்கொண்டுவர இத்தனை ஆரபாரமான அலங்கார வேடிக்கை முழக்கத்தோடே தேர் திருவிழாக் கொண்டாடிப் பெருமாளைத் தேரின்மேல் ஸ்தாபித்துத் தெருவீதியிலே போகிற வாதாளியினாலே தேருடைய அச்சு முறிந்து பிரதான வட்டந்தெறித்து ஒரு க்ஷணத்திலே எல்லாம் உடைந்து தேர் விழுந்தது.

அதிலேயிருந்த சிலர் தப்பி ஓடிப்போனார்கள்; சிலர் தலையுடைந்து கைகாலொடிந்து வயிறு கிழிந்து குடல் புறப்பட்டுச் செத்தவர்களும், குற்றுயிராய்க் கிடக்கிறவர்களும், பிழைக்காயம் சாவுக்காயம் பட்டவர்களும், தாறுமாறாய் விழுந்து பேசமாட்டாமல் மூர்ச்சைபோய் வஸ்திர அலங்கோலப்பட்டுக் கிடக்கிறவர்களும்; இப்படிச்சற்றுநேரத்திலே அத்தனை சந்தோஷம் மாறிப்போய்த் துக்கம் மூடிக்கொண்டு ஏங்கித் தவித்துப் பயந்து கலங்கிக் கிடக்கிற சபையத்திலே,

தூர நின்றவர்களில் கெட்டிக்காரர் நாலைந்து பேர் ஓடிவந்து பெருமாள் தரையிலே விழுந்து உடைந்து துண்டு துண்டாய்ப் போய்க் கிடக்கிறதைக் கண்டு, அய்யோ! நாங்கள் என்ன பொல்லாப்புச் செய்தோம்! என்ன பொல்லாப்பு வருமோ தெரியாதெ

ன்று அழுது புலம்பிப் பிற்பாடு கம்மாளரையும் சிற்பாசாரியர்களை யும் அழைத்துவந்து தெறித்து உடைந்துபோன விட்டங்களையும் அச்சுகளையும் இருப்பாணிகளாலும் இருப்புச் சங்கிலிகளாலும் கட் டிச் செப்பனிட்டுப் பெருமாளுடைய விக்கிரகத்தின் பலபல துண் டுகளை ஒன்றாய்ச்சேர்த்துக் கட்டிச் செப்பனிட்டுத் தேர்மேலேற்றி சகல மனுஷரென்னப்பட்ட யாவரும் கூடித் தேர் வடக்கயிற்றைப் பிடித்திழுத்துக்கொண்டு போய்ச் சற்றுநேரம் நிலைக்கு நின்றவுட னே அங்கேயிருந்த சகலமான சனங்களென்னப்பட்ட யாவரும் சா ஷ்டாங்கமாக விழுந்து அதிவிஷ்ணு தங்களை யிரட்சிக்கும்படிக் குப் பிரார்த்தித்துக்கொண்டு தம்மாலான ஆராதனை பண்ணினார்கள்.

அப்போது கம்மாளருக்கு முகனைக்காரனல்லாமல் சுரூபத்து க்கு நமஸ்காரம் பண்ணாதிருந்த சிற்பாசாரி சும்மா நிற்கிறதை மற்றவர்கள் கண்டு பல்லைக்கடித்து மகாக் கோபத்துடனே கம்மா ளனைப்பார்த்து வெகு உத்தண்டமாய்ச் சொன்னதாவது: அடா, சண்டாளா, பிராமணர், இராசாக்கள், துரைகள் மற்றுண்டான பெரியவர்களெல்லாரும் இந்தத் தேர் விமானத்தின்மேல் எழுந்தரு ளியிருக்கிற ஆதிகாரணமான விஷ்டுணுவை வணங்குகிறபோது நீ சுவாமியைச் சட்டைபண்ணாமல் வணங்காமலிருக்கிறதென்ன? தீ விரமாய் நாலுபேர் செய்கிறாப்போலே நீ செய்யாதிருந்தால் உன் னைச் சித்திர வதை பண்ணி பிழந்துபோடுவோமென்று சொல்லு கையில்,

அதற்குக் கம்மாளன் பயப்படாமல் தைரியத்தோடே இப்ப டியே நான் இந்த சிலை ஆதிகாரணமாய் எப்படியிருக்குமென்று க ண்டுபிடிக்கமாட்டேன். நான்தானே சில வருஷத்துக்கு முன்னே இந்த விக்கிரகத்தை உண்டாக்கி இப்போதைக்கும் அதினுடைய அவயவங்களை ஒன்றாய்ச் சேர்த்து பிரத்திட்சை பண்ணினேன். ஆனதினாலே இந்தச் சுரூபத்துக்குப் புத்தியுண்டானால் தன்னையுண் டாக்கின என்னை வணங்கவேணுமல்லாமல், நான் அந்தச் சிலையை ஆராதிக்கிறதற்கு நியாயமில்லையென்று ஸ்திரமாய்ச் சொன்னான். இந்த நியாயத்தைக்கேட்ட அநேகப்பேர்கள் கம்மாளனமேலே விழு ந்து வெறிகொண்டாப்போலே அவனைப் பிய்த்துப்போடத்தக்கதாக உத்தியோகமாயிருக்கிறதைக் கண்ட அநேகம் பேர்கள் அமர்த்தினார் கள்.

இப்படிப்பட்ட விருத்தாந்தத்தை உபதேசியானவன் சொன்னபிறகு, குருசுவாமியார் தமதருகேயிருக்கிற சனங்களைப் பார்த்தருளிச் செய்ததாவது: உலோகத்தார் வணங்குகிற தேவர்களை தூஷணிக்கிறதற்கு நமக்கு அபிப்பிராயமில்லாதேபோனாலும், உபதேசி சொன்ன செய்தியை நீங்கள் பத்தும் பத்தாய்ப் பராமரித்தால் சிற்ப்பாசாரியானவன் உண்டாக்கின விக்கிரகம் ஆதிகாரணமாயிருக்கவில்லையென்று விசாரித்துப் பராபர வஸ்துவுக்குச் செய்யத்தக்க உத்தம ஆராதனையைச் சிலைக்குப் பண்ணுகிறதற்கு நியாயமில்லையென்று நிச்சயமாகும். அதேதென்றால், ஆதிகாரணமானது வேறே காரணத்தினாலே வராமல் அவசியமாய்த் தானாயிருக்கவேணுமென்று தப்பில்லாத சத்தியமாயிருக்கிறது. ஆனபடியினாலே தச்சன், கருமான், தட்டான், குயவன், கன்னான் முதலான தொழிலாளிகள் உண்டாக்கின விக்கிரகங்களுக்கு உத்தம நமஸ்காரம் பண்ணுகிறதற்கும் புத்திக்கும் நியாயத்துக்கும் ஒவ்வாதென்று நிச்சயிக்கக்கடவோம்.

அப்போது உபதேசி குருசுவாமியவர்களைப் பார்த்து விண்ணப்பம் பண்ணினதாவது: தேவரீர் திருவுளம்பற்றின இந்த நியாயத்தை இந்தச் சீமையிலுண்டான சாஸ்திரிகளுக்குச் சொல்லிக்காட்டுகிறபோது அவரவர்கள் இருந்ததெப்படியென்றால், வேதப் புராணங்களிலே வர்ணிக்கப்பட்ட திரிமூர்த்திகள் முதலான தேவர்கள் மெய்யான தேவர்களாயிருக்கிறார்களென்று சொல்லுகிறதுந்தவிர, மண்ணினாலேயும் மரத்தினாலேயும் கல்லினாலேயும் பொன், வெள்ளி, செம்பு, பித்தளை முதலான பஞ்சலோகங்களினாலேயும் உண்டாக்கப்பட்ட விக்கிரகங்களை சுபாவமாய்த் தேவர்களென்று சொல்லவும் எண்ணவுங் கூடாது. ஆனால் முன்சொல்லப்பட்ட சிலைகளும் சுரூபங்களும் திரிமூர்த்திகளுடைய அடையாளமாயிருக்கிறதினாலே பராபரவஸ்துவுக்குச் செய்யத்தக்க நமஸ்காரம், பூசை, யர்ச்சனை, ஆராதனை விக்கிரகங்களுக்குப் பண்ணவேண்டியிருக்கிறதென்றார்கள்.

உலோகத்தார் சொல்லுகிற போக்குகளைக் கேட்ட குருசுவாமியவர்கள் திருவுளம்பற்றினதாவது: உலோகத்தார் நம்மாலே சொல்லப்பட்ட நியாயம் பிரசித்தமான திஷ்டாந்திரமாயிருக்கிறதென்று கண்டு அதைப் பிரட்டி விபர்த்தமான போக்குகளைச் சொல்லுகிறார்களொழிய மற்றப்படியல்ல. அவ்வண்ணமே அக்கியானிகளெல்

லாரும் ஏறக்குறைய விக்கிரகங்கள் மெய்யான தேவர்களாயிருக்கிறதென்றும் சிலைகளிலே விஷ்ணு, ருத்திரன் முதலான தேவர்களிருக்கிறதென்றும் விசுவசித்ததினாலே முன் சொல்லப்பட்ட விக்கிரகங்களுக்கு நெய்வேத்தியம், பூசை, பலி முதலான வழிபாடுகளைப் பண்ணுகிறார்கள்.

ஆனபடியினாலே இப்போதைக்கும் உலோகத்தார் தாங்கள் தப்பிப்போகிறதற்கு விதித்த நியாயத்தைப் பார்க்கும்போது, அவர்களுடைய வேதப் புராணங்களிலே வர்ணிக்கப்பட்ட தேவர்களுடைய சுபாவத்தைப் பத்தும்பத்தாய் விசாரித்தால் பிர்மா, விஷ்ணு, ருத்திரன் முதலான தேவர்கள் தானாயிராமல் வேறே காரணத்தினாலே வந்தார்களென்று பிரசித்தமாய் ஒப்பிவிக்கலாம். அதெப்படியென்றால், உலோகத்தார் சொல்லுகிறாப்போலே:

சுலோபம்.

சித்திடைக்கொல்கி துடங்குந் திருவுயிற்று லொருத்தி பெற்றெடுக்குந் திருப்பிள்ளைகள் மூவரம் மூவரையும் கற்றிடச்சொன்ன தொழிலொரு மூன்று வவ்வரிக்கடைக்கால செதிடச்சொன்ன பிள்ளைக்கவளே யம்மையும் தேவியுமே. இந்தச் சுலோபத்திலே உண்டான அர்த்தங்கள் எல்லாம் சொல்லலாம். நாம் வெளிப்படுத்துகிறதும் அடுத்த சில விசேஷங்களையும் மாத்திரம் சொல்லிக்காட்டுவோம்.

அதெப்படியென்றால், பூர்வகாலத்திலே ஒரு பாரசத்தியானவள் பிர்மா, விஷ்ணு, ருத்திரனைப் பெற்றுப் படைக்கிறதும் இரட்சிக்கிறதும் சங்கரிக்கிறதுமென்கிற இந்த மூன்று தொழில்களைத் தனித் தனியே ஒவ்வொரு பிள்ளைக்கு விசேஷமான வரத்தைக் கொடுத்தாளாம். ஆனபடியினாலே பிர்மா, விஷ்ணு, ருத்திரன் தங்களுக்குண்டான ஸ்திதியையும் பிலத்தையும் சமார்த்தியத்தையும் சுபாவமாய்க் கொண்டிராமல் பாரசத்திகையிலே வாங்கினார்களென்றும், அவளிடத்திலே பிறந்தார்களென்றும் படைத்தல், இரட்சித்தல், அழித்தல் இம்மூன்று பிரதான வரங்கள் பாரசத்தியினாலே வந்ததென்று பிரசித்தமாகும். ஆனபடியினாலே மெய்யான தேவனாய் இருக்கிறதற்கு வேறே காரணத்தினாலே வராமல் தானாய் இருக்கவேண்டியிருக்கச் செய்தே, பாரசத்தியினாலே வந்த பிர்மா, விஷ்ணு, ருத்திரன் தானாய் இருக்கவில்லையென்று நிச்சயிக்கக்கடவோம்.

இதல்லாமல் உலகத்தாருடைய வேதத்திலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் வேறே வகையோடே வந்தார்களென்று சொல்லியிருந்தாலும் ஆதிகாரணத்தினலே உண்டாக்கப்பட்டவர்களாய் இருக்கிறார்களென்று எழுதியிருக்கிறதாம். அதெப்படியென்றால், ஆதிகாரணமாகிற பராபர வஸ்துவானவர் உலகத்தை உண்டாக்கச் சித்தமாயிருக்கிறபடியால் அநாதியாயிருக்கிற தண்ணீரிலே குழந்தை ரூபமாக ஒரு மரத்தினுடைய இலையை உண்டாக்கி இப்படிப்பட்ட குழந்தையின் காலினுடைய பெரு விரல் வாயிலே வைத்துத் தன்னைத் தான் அசைத்ததினலே அவனுடைய வுந்தியிலே நின்று தாமரைப் பூவாகப் பிறப்பட்டு அந்தத் தாமரையிலே நின்று விஷ்டுணு பிறந்தானென்று சொல்லியிருக்கிறது.

இப்படிப்பட்ட விருத்தாந்தத்திலே அடங்கியிருக்கிற அநேகம் அபத்தங்களை விட்டு எப்படியானாலும் விஷ்டுணுவென்கிறவன் தானாய் வராமல் பராபர வஸ்துவினலே உண்டாக்கப்பட்டவனாய் இருக்கிறானென்று திஷ்டாந்தமாச்சுது. இந்தப் பிரகாரமாக விஷ்டுணு தாமரைப் பூவில் நின்று பிறந்தானென்றும் அடையாளமாகத் தினந் தினஞ் சித்திரக்காரர் அவனுடைய காலிலே மலர்ந்திருக்கிற தாமரைப் புஷ்பத்தை எழுதுகிறார்கள். இதன்றியே ருத்திரன் முதலான தேவர்களுடைய விஷயத்திலே யோசிக்கக்கடவோம்.

கடைசியிலே முப்பத்துமுக்கோடி தேவர்கள் பிறந்த விசேஷத்தை அறிய மனதுண்டானல், சற்பயாகத்திலே செனசெயனுக்குவசமாய் முனியீஸ்பரன் சொன்ன விசேஷத்தை உற்றுக்கேளுங்கள்: விஷ்டுணுவினலே முப்பத்துமுக்கோடி தேவர்களானார்கள். கருடனும் மண்ணும் பிருமாதி தேவரும் ஆதித்திய சனங்களுக்குள்ளாய் தேவர்களுடைய சிஷ்டியெல்லாம் நடவாமனிற்கும், இனி வேறே பூரணங்களிலே கசிபன் என்கிறவனுக்கும் மதி யென்கிறவளுக்கும் தேவர்கள் பிறந்தார்களென்று சொல்லியிருக்கிறது.

ஆனபடியினலே தேவர்கள் எல்லாரும் பூர்வகாலத்திலே இராமல் பிறகு வந்ததினலேயும் அவர்களுக்குத் தாய் தகப்பன் உண்டாயிருக்கிறபடியினலேயும் தானாய் இராமல் வேறே காரணத்தினலே தோன்றினார்களென்று பிறத்தியட்சமான விசேஷமாகுமென்றார்கள்.

அத்தறுவாய்களிலே உலகத்தாருடைய வேதப் புராண சாஸ்திரப் புஸ்தகங்களை அறிந்திருக்கிற உபதேசி குருசுவாமி யவர்கள் பாதத்திலே விண்ணப்பம் பண்ணினதாவது: பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதல் தேவர்கள். தேவரீர் திருவுளம்பற்றினுப்போலே வேறே காரணத்தினலே வந்ததுமல்லாமல் இனிமேல் செத்துப்போவார்களென்று வேதப் பிரமாணத்திலே அங்கங்கே சொல்லியிருக்கிறது.

அதெப்படியென்றல், அநேகம் கோடி வருஷம் பிர்மா, விஷ்டுணுவினுடைய பரம ஆயுசும் முகியும். இப்படிப்பட்ட பிர்மாவினுடைய பரம ஆயுசு முகிந்த பிற்பாடு, ஒரு பரம ரிஷியினுடைய ரோமம் உதிர்ந்துபோம். இந்தப் பரம ரிஷியினுடைய பரம ஆயுசு எல்லாம் கூடி விஷ்டுணுவினுடைய ஒரு நாளுக்குச் சரி. விஷ்டுணுவினுடைய பரம ஆயுசு எல்லாம் கூடி ருத்திரனுடைய ஒரு நாள். இந்தப்பிரகாரமாக சகலமான தேவர்களுக்கும் பரம ஆயுசு இருக்கிறதுந்தவிர தேவர்களுடைய பரம ஆயுசை விட சில பரம ரிஷிகளுடைய பரம ஆயுசு அதிசயித்திருக்கிறதென்று கால சக்கரத்திலே எழுதியிருக்கிறது. ஆனல் பராபர வஸ்து அநாதியாய் இருக்கிறரென்கிற சத்தியத்தைத் தேவரீர் வெளிப்படுத்தும்போது, அப்போது அந்தத் தேவர்களுடைய பரம ஆயுசை விஸ்தாரமாய் வெளிப்படுத்தலாமென்றான்.

இப்படிப்பட்ட அபத்தமான விசேஷத்தை எல்லாரும் கேட்கையில், குருசுவாமி அவர்கள் திருவுளம்பற்றினதாவது: யாதொரு வஸ்து அழிந்துபோனல், தானய் இராமல் வேறே காரணத்தினலே வந்ததென்று சகலமான சாஸ்திரிகள் சங்கேதம் பண்ணினர்கள். அவ்வண்ணமே யாதாம் ஒரு பொருள் இருக்கும்போது, லயமாய்ப் போகாதபடிக்கு பெலமில்லாதேபோனல் தான் இருக்கிறதுக்குச் சற்றுவம் இல்லையென்று சத்தியமாகும். இதெல்லாம் இப்படியிருக்கையிலே, பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் சில வருஷத்துக்குப் பிற்பாடுசெத்துப்போவார்களென்றும் லயமாய்ப் போவார்களென்றும் உலகத்தார் தானே சொன்னல், அவசியமாய் திரிமூர்த்திகள் தானய் இராமல் வேறே நிமித்தத்திலே உண்டாக்கப்பட்டவர்களென்று சந்தேகமில்லை.

இதுக்கு அப்பால் அறியவேண்டியதாவது: உலோகத்தார்களுக்குள்ளே பேர்போன பரம ரிஷிகளுடைய தாய் தகப்பன்மாருடைய பெயரை எல்லாரும் அறிந்திருக்கிறபடியினலேயும் அவர்களுடைய சாவு நிச்சயமாய் இருக்கிறபடியினலேயும் இந்த ரிஷிகள் தானய் இராமல் வேறே காரணத்தினலே பிறந்தார்களென்று சொன்னல், தேவர்களும் தானய் இராமல் வேறே நிமித்தங்களினலே தோன்றினர்களென்று சொல்லக்கடவோம். ஆனபடியினலே உலகத்தாருக்குள்ளே பூர்வ காலத்திலே இருந்த கவியீசுரன் சொன்னதாவது:

பிறந்திறக்கும் தெய்வப் பிணங்களைக்கொண்டு ஆண்டேன்; அறந்தழைக்கும் சோண சிரியானே பிறந்திறவாது உன்னைப் புகழ்ந்தேன் உனக்கு அடிமையானவர்கள் தன்னைப் பணிவது அல்லாறுன். இதுக்கு அர்த்தமேதென்றல், பிர்மா, விஷ்டுணு, ருத்திரன், தேவேந்திரன் முதலான தேவர்களுக்குப் பிறப்பும் இறப்பும் உண்டாயிருக்கிறதினலே, இப்படிப்பட்டவர்களை வணங்காமல் பிறப்பும் இறப்பும் இல்லாத தேவனை நமஸ்கரிப்பேனென்று அர்த்தமாகும்.

இற்றைவரைக்கும் நம்மாலே சொல்லப்பட்ட நியாயங்கள் எல்லாமல்லாமல் பிர்மா, விஷ்டுணு, தேவர்கள் முதலானவர்கள் படைக்கப்பட்டவர்களாய் இருக்கிறர்களென்று ஒப்பிவிக்கத்தக்கதாக வேறே ஸ்திரமுள்ள இரண்டு நியாயங்களை சங்க்ஷேபமாய் வெளிப்படுத்துவோம். அதெப்படியென்றல், பிர்மா, விஷ்டுணு முதலான தேவர்கள் நாலு சிரசும், அஞ்சு சிரசும், ஆறு சிரசுங் கொண்டிருக்கிறர்களென்றும் வேதப் புராணங்களிலே சொல்லியிருக்கிறதுந் தவிர சித்திரக்காரன் மேற்சொல்லப்பட்ட தேவர்களை இந்த விசேஷத்தோடே தேர்களிலேயும் தேவாலயங்களிலேயும் எழுதுகிறன். ஆனல் நாலு, அஞ்சு, ஆறு தலை உண்டாயிருக்கிறதினல், இப்படிப்பட்ட தலைகள் மட்டோடேயிருக்கிறபடியினலே அவசியமாய் வேறே காரணத்தினலே வந்ததென்று நிச்சயிக்கக்கடவோம்.

அவ்வண்ணமே கண்டிப்புள்ள வஸ்து மட்டோடே யிருக்கும் போது, இப்படிப்பட்ட அளவு பிரமாணத்துக்குக் காரணம் ஏதென்றல், இந்த வஸ்துவை உண்டாக்கினவன் இம்மாத்திரம் உண்டாக்கினனென்று சொல்லுகிறப்போலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன்

முதலான தேவர்களுக்கு நாலு, அஞ்சு, ஆறு தலை உண்டாக்கிறதுக்குக் காரணத்தைப் பத்தும் பத்தாய் விசாரித்தால், இந்தத் தேவர்களை உண்டாக்கினவன் இம்மாத்திரம் உண்டாக்கினனென்று சொல்லவேண்டியிருக்கிறது. இதெல்லாம் இப்படியிருக்கையிலே, அஞ்ஞானிகள் வணங்குகிற தேவர்கள் தானுயிராமல் வேறே நிமித்தத்தினாலே பிறந்தார்களென்று சந்தேகமில்லை.

இந்தக் கெட்டியான நியாயத்தை சுவாமியவர்கள் திருவுளம் பற்றினவுடனே, உபதேசி விண்ணப்பம் பண்ணினதாவது: நான் சிறுபத்திலே துவக்கி அஞ்ஞானிகளுக்குள்ளே சஞ்சாரம் பண்ணினதினாலே, இந்தக் காரியத்திலே அவர்களுடைய துற்குணத்தை அறிந்திருக்கிறேன். ஆனபடியினாலே தேவரீர் திருவுளம்பற்றின நியாயம் கெட்டி நியாயமாயிருந்தால், பற்பல மனுஷவதார நிமித்தமாக நாலு, அஞ்சு, ஆறு தலை தேவர்களுக்கு வந்ததொழிய மற்றப்படியல்லவென்று சாதிப்பார்களானால், இந்தப் பிறத்தியுத்தாரத்தை எளிதாய் ஆக்ஷேபிக்கலாமென்று சொன்னதற்கு குருசுவாமியவர்கள் அருளிச்செய்ததாவது.

மனுஷாவதாரத்தின் நிமித்தமாக நாலு தலை, அஞ்சு தலை, ஆறு தலை தேவர்களுக்கு வந்ததென்று சொல்லுகிறது புத்திக்கும் நியாயத்துக்கும் ஒவ்வாததாயிருக்கிறதினாலே, பிர்மா, விஷ்ணு, ருத்திரன் முதலான தேவர்களுடைய சுபாவ சுரூபத்தை வேதப் புராணங்களினாலே வர்ணிக்கும்போது சொல்லப்பட்ட தேவர்களுக்கு நாலு தலையென்றும், அஞ்சு தலையென்றும், ஆறு தலையென்றும் சுபாவத்திலே சொல்லியிருக்கிறது. ஆனபடியினாலே உலோகத்தார் நம்முடைய நியாயத்துக்கு பிரத்தியுத்தாரம் சொல்லமாட்டாமல் பிரசித்தமான தப்பறை சொல்லுகிறார்கள்.

ஆனால் இப்படிப்பட்ட தேவர்களுக்குச் சுபாவமாய் நாலு தலை, அஞ்சு தலை இல்லையென்று விசாரித்துக்கொள். தேவர்களுக்குச் சுபாவமாய் திருமேனி உண்டென்று உலகத்தார் எல்லாரும் சொல்லுகிறார்கள். அவ்வண்ணமே சரீரம் தேவர்களுக்கு இல்லாதேபோனால், போக பாக்கியங்களை அநுபவிக்கமாட்டார்களென்று வெட்கமில்லாமல் சொல்லுகிறார்களே. இந்தப் பயித்தியமான விசேஷத்தைத் தள்ளுகிறதற்குச் சமயமில்லாததினாலே, இப்போது யோசிக்கத்தக்கதாவது: போக வாழ்வுகளை அநுபவிக்கிறதற்குத் தேவர்களு

டைய சரீரம் மட்டோடேயிருக்கவேணுமானபடியினலே, இந்தச் சரீரத்தினுடைய அளவு பிரமாணம் வேறே காரணத்தினலே வரவேண்டியிருக்கிறது.

கடைசியிலே உலோகத்தார் தானே திரிமூர்த்திகளும் மற்றுமுண்டாகிய தேவர்களும் பாரபர வஸ்துவாகிற ஆதி காரணத்தைத் தேடிக்கொண்டு இப்படிப்பட்ட ஆண்டவருடைய பெருமையையும் மகிமையையும் சுபாவத்தையும் கண்டுபிடிக்கமாட்டாதே போனர்களென்று வேதாந்திரங்களை அறிந்திருக்கிறவர்களும் சாஸ்திரிகளும் வித்துவாங்கிஷரும் எழுதிவைத்தார்கள். ஆனபடியினலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலான தேவர்களல்லாதே தேவாதிகாரணமுண்டானல், அவசியமாய் மேற்படி சொல்லப்பட்ட தேவர்களுக்கு மேலான காரணமிருக்கிறதினலே அவர்கள் தானய் இராமல் வேறே காரணத்தினலே பிறந்தார்களென்று அங்கீகரிக்கக்கடவோம்.

அல்லது தாங்கள் தானே ஆதிகாரணமாயிருந்து ஆதிகாரணத்தைத் தேடிக்கொண்டாலும், இதுக்குச் சரியான பயித்தியமில்லை. இந்தச் சத்தியத்தை சில உவமையினலே வெளிப்படுத்துவோம். அதெப்படியென்றல், யாதாமொருத்தன் தன் குதிரைமேல் ஏறி எங்கும் தன் குதிரையைத் தேடினல், என்ன சொல்லுவார்கள்? யாதாமொருத்தன் தன்னைத்தான் நாலு திக்கிலும் தேடினல்; இதுக்குச் சரியான மதிப்பிரங்கிஷம் உண்டோ? ஆனபடியினலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் அநாதி காரணத்தைத் தேடினபோதே தானயிராமல் வேறே காரணத்தினலே வந்தார்களென்று பிரசித்தமான அடையாளமாச்சுது.

இதுக்கப்பால் அறியவேண்டியதாவது: எல்லாத்துக்கும் கர்த்தராயிருக்கிற ஆண்டவருக்கு பிரம தேவன் முதலான தேவர்களெல்லாரும் தெண்டனிட்டு வேத மந்திரங்களினலே ஸ்துதி பண்ணித் தங்களை இரட்சிக்க விண்ணப்பம் பண்ணினர்களென்று இராமாயணத்திலே அஞ்சாஞ் சற்கத்திலே எழுதியிருக்கிறது. இந்தப் பிரகாரமாக விஷ்டுணு பாசுராம அவதாரத்தினலே தன்னைப்பார்க்கப் பெரியவனைக்குறித்துப் பூசை யாகம் பண்ணினனென்றும் இந்தப் பூசை யாகத்தின் நிமித்தமாகச் சமுத்திரத்தைத் தள்ளுகிறதுக்கு வரத்தை வாங்கினனென்றும் பரசுராமனுடைய கதையிலே எழு

தியிருக்கிறது. பின்னையும் விஷ்டுணு ராம அவதாரத்திலே அக்கினி பகவான், சூரியன் முதலானதுகளை வணங்கினனென்று இராமாயணத்திலே சொல்லியிருக்கிறது. கடைசியிலே ருத்திரன் தான் செய்த பாவங்களுக்காக உத்தரிக்கிறதற்கு வருணனை மன்றாடினனென்று எல்லாரும் அறிவார்களே.

ஆனதினாலே இப்படிப்பட்ட பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் தங்களுக்குப் பிரத்திப்பட்ட வஸ்துக்களை ஆராதிக்கும்போது, தானாயிருக்கிறதென்கிற பிரதாபத்தினாலே வருகிற சகல நன்மைகளை அடையாமல் தங்களுடைய குறைச்சலைத் தீர்க்கத்தக்கதாக வெவ்வேறே பொருட்களை நமஸ்கரித்தார்களென்று பிரசித்தமாகும். இதெல்லாம் இப்படியிருக்கையிலே, தானாயிராத பிர்மா, விஷ்டுணு, ருத்திரனை நீங்கள் வணங்காமல் தானாயிருக்கிற பராபர வஸ்துவுக்கு மாத்திரம் உத்தம ஆராதனை பண்ணிக்கொண்டு அவருடைய சித்தத்துக்கு ஏற்க நடந்து அவருக்கு ஏராத துரோகங்களைத் தள்ளிப்போட்டு அவருக்கு மிகவும் பொருந்தியிருக்கிற சுகுர்தங்களைச் செய்துகொண்டு மரண பரியந்தம் நல்லவர்களாய் இருப்பீர்களாக.

---

## கடவுள் அசரீரி. ரு-ம் சல்லாபம்.

---

ஞான உபதேசத்தைக் கேட்கத்தக்கதாகக் குறித்த ஸ்தலத்திலே எல்லாரும் வந்து சேர்ந்த பிறகு, அவர்களுக்குள் ஒருத்தன் குருசுவாமியவர்களைப் பார்த்து விண்ணப்பம் பண்ணினதாவது: இந்தத் தோப்பிலே வெகு நேற்றியுள்ள சித்திரச் சாவடியைக் கண்டு இந்தச் சீர்மையிலுண்டான உலகத்தார் வணங்குகிற அநேகந் தேவர்களுடைய சுருபங்களை மிகுந்த பிரயாசத்தோடே சித்திரக்காரர் எழுதிவைத்தார்கள்.

அதெப்படியென்றால், பிர்மா நாலு தலையோடேயும், ருத்திரன் அஞ்சு தலையோடேயும், குமரசாமி ஆறு முகத்தோடேயும், விஷ்டுணு திருப்பால் கடலிலே சேஷன்மேலே பள்ளிகொண்ட பாவினையாகவும், விநாயகன் தும்பிக்கையோடே மகா ருசுஷத்துடனே வரணித்திருக்கிறதுந்தவிர விஷ்டுணுவுடைய பத்து அவதாரமாகிற மச்ச,

கூர்ம, வராக, நரசிங்கம், வாமன், பரசுராமன், பெலபத்திராம, கிஷ்ன், கலி ஆக பத்தவதாரங்களுக்கு வெகு பிரகாசமுள்ள வர்ணங்களினாலே யெழுதியிருக்கிறதுமல்லாமல் அந்தந்தத் தேவர்களுடைய ஆயுதங்கள், ஆபரணங்கள், வாகனங்கள் முதலான அடையாளங்கள் ஒழுங்காக எழுதிவைத்திருக்கிறதென்றான்.

அத்தறுவாயிலே குருசுவாமியவர்கள் திருவுளம்பற்றினதாவது: அந்தகாரத்துக்குள் அமிழ்ந்தியிருக்கிற உலோகத்தார்கள் பராபரவஸ்துவினுடைய அசரீரியான அளவில்லாததனத்தைக் கண்டுபிடிக்கமாட்டாமல் தாங்கள் வணங்குகிற தேவர்களுக்குச் சரீரத்தை வரணித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் இந்த அக்கியானம் எந்த விதமாய் வந்ததென்று சொல்லிக்காட்டுகிறதற்கு முன்னே, கடவுளுக்குச் சரீரமில்லையென்று ஸ்திரமான நியாயங்களினாலே ஒப்பிவிப்போம்.

அதெப்படியென்றால், பராபரவஸ்துவுக்குச் சரீரமுண்டானால், ஒன்றில் அந்தச் சரீரம் அளவில்லாததாயிருக்கிறது; ஒன்றில் மட்டோடேயிருக்கிறது. எந்த விதமாக பிரத்தியுத்தாரஞ்சொன்னாலுங் கடவுளுக்குச் சுபாவமாய் சரீரமிருக்கக்கூடாதென்று பிரசித்தமாய் ஒப்பிவிக்கிறேன். அப்படிப்பட்ட பராபர வஸ்துவினுடைய சரீரம் அளவில்லாததாயிருந்தால், அவ்வளவு பிரமாணங் கண்டிப்புள்ள வஸ்துவினிடத்திலே உண்டானதெல்லாம் சாஸ்திரிகள் ஒப்பிவிக்கிற எண்ணிக்கைக்குள்ளடங்காத அபத்தங்களை கடவுளுடைய சரீரத்திலே காணலாமென்று சொல்லுகிறதுந்தவிர இப்படிப்பட்ட சரீரம் நிசமானதுமாயிருக்கும்.

அதெப்படியென்றால், சரீரம் அளவில்லாததாயிருந்தால் ஒன்றில் அவையவங்கள் மட்டில்லாததாயிருக்கும்; ஒன்றில் மட்டோடேயிருக்கும்; தலையும் காலுங் கையும் அளவில்லாததாயிருந்தால், ஒரு விரல் முதலாய்ச் சரீரத்துக்குச் சரியாயிருக்கும்; காது, மூக்கு முதலான அவையவங்களெல்லாம் சரீரத்துக்குச் சரியாயிருக்கும். இப்படிப்பட்ட அபத்தம் முழு பயித்தியக்காரன் முதலாய்ச் சொல்லமாட்டாததினாலே, சரண சாரதியாகிற கை, கால் முதலான அவையவங்கள் மட்டோடேயிருக்கிறதென்று சொன்னால், சரீரம் அளவில்லாததாயிருக்கச்செய்தே முன் சொல்லப்பட்ட சரண சாரதிகள் அளவி

ல்லாத சரீரத்திலே இருக்கிறபடியினாலே, அவலட்சணமானதுமாய் ஈசமானதுமாயிருக்கும்.

அவ்வண்ணமே மட்டுள்ள வஸ்துவுக்கும் அளவில்லாத வஸ்துவுக்கும் மட்டில்லாத தூரமும் பாஸ்பரமுண்டாயிருக்கிறபடியினாலே மட்டுள்ள அவையவங்கள் மட்டில்லாத சரீரத்திலேயிருக்கிறது அளவில்லாத அபத்தமாயிருக்குமொழிய மற்றப்படியல்ல. இந்தச்சத்தியத்தைப் பிரசித்தமான உவமையினாலே ஒப்பிவிப்போம். அதெப்படியென்றால், மனுஷருடைய சரீரம் தரையிலேயிருந்து நட்சத்திரங்கள்மட்டும் நீளமாயிருக்குதென்று விசாரித்துக்கொள்ளுங்கள்; இப்படிப்பட்ட விஸ்தீரணமான சரீரத்திலே மூக்கு மாத்திரம் ஒரு சாண் நீளமாயிருந்தால், எல்லாரும் பரியாசம் பண்ணுகிறதற்கும் நகைக்கிறதற்கும் காரணமாயிருக்குமொழிய மற்றப்படியல்ல. மூக்கினுடைய விஷயத்திலே யோசித்தாப்போலே மற்றுண்டான அவையவங்களிலே யோசிக்கலாம்.

ஆனால் இந்த இராக்ஷதனுடைய சரீரத்துக்கும் அவலட்சணமான மூக்குக்கும் அளவில்லாத தூரமில்லாததினாலேயும் பராபர வஸ்துவினுடைய மட்டில்லாத சரீரத்துக்கும் அதினுடைய மட்டுள்ள அவையவங்களுக்கும் அளவில்லாத வேற்றுமை உண்டாயிருக்கிறதினாலேயும் இராக்ஷதனுடைய அவலட்சணமான சரீரமானது பராபர வஸ்துவினுடைய அளவில்லாத சரீரத்தைப்பார்க்க மிகவும் அழகுள்ளதுமாய் இணக்கமுள்ளதுமாய் அக்தமுள்ளதுமாய் இருக்குமென்று சந்தேகமில்லை. இப்படிப்பட்ட அபத்தங்களையும் பயித்தியத்தோடே கலந்திருக்கிற வேறே அனேகம் விசேஷங்களையுஞ் சொல்லாதபடிக்குப் பராபர வஸ்துவுக்கு அளவில்லாத சரீரமில்லையென்று அங்கீகரிக்கக்கடவோம்.

ஆனால் பராபர வஸ்துவுக்கு மட்டுள்ள சரீரமென்று சொன்னால், இப்படிப்பட்ட சரீரத்தினுடைய அவையவங்களை ஆன் வகையோடேயுங் கூடுகிறதுக்குஞ் சேருகிறதுக்கும் அந்தச் சரீரமல்லாமல் வேறே காரணம் வேண்டியிருக்கிறதென்று பிரசித்தமாகும். இதெல்லாம் இப்படியிருக்கையிலே தானாயிருக்கிற வஸ்து வேறே காரணத்தினாலே வரக்கூடாதென்கிறதினாலே பராபர வஸ்துவுக்கு மட்டுள்ள சரீரமில்லையென்று சொல்லவேண்டியிருக்கிறது.

இதன்றியே பிரமாதிகள் தியானிக்கிற நன்மைகளுக்குள்ளே கலப்பில்லாமல் அகண்டமாயிருக்கிறதென்கிறது உத்தம நன்மையாய் இருக்கிறதினாலே, சகல நன்மையாய் இருக்கிற பராபர வஸ்துவினிடத்திலே அகண்டமென்கிற நன்மை அவசியமாய் இருக்க வேணுமானபடியினாலே பராபர வஸ்துவானவர் சரீரத்தினுடைய கலப்பில்லாமல் முழுதும் அசரீரியாய் இருக்கிறாரென்று தப்பில்லாத சத்தியமாகும்.

இப்படிப்பட்ட சத்தியமான விசேஷமானதுகளைப் பாவிகள் விசாரியாமல் பராபர வஸ்துவானவர் கற்பித்தருளிய கற்பனைகளை மீறி எண்ணிக்கைக்குள்ளடங்காத பாவ தோஷங்களைக் கட்டிக்கொண்டதினாலேயும், விசேஷமாய் துர்க்கந்த மோகத்தின் சேற்றிலே அமிழ்ந்தியிருந்தபடியினாலேயும் புத்தி மயங்கிப்போய் பராபர வஸ்துவினுடைய அசரீரியாயிருக்கிற மட்டில்லாத மகிமையைக் கண்டுபிடிக்கமாட்டாமல் பஞ்சேந்திரியங்களினாலே மாத்திரம் கிரகிக்கத்தக்க வஸ்துகளைப்போலே பராபர வஸ்துவையும் விதித்தார்கள். இந்தச் சத்தியத்தை மகாத்துமாவானவர் ஒரு திருஷ்டாந்தரத்தினாலே வெளிப்படுத்தினார்.

அதெப்படியென்றால், நாலு கண் தெரியாதவர்கள் யானையினுடைய சுருபம் இன்னதென்று அறியத்தக்கதாக தாற்பரியமாயிருந்து யானையின் கிட்டப்போய் அதனுடைய காதை ஒருவன் தொட்டுப்பார்த்ததிலே, யானை முறம்போல் இருக்கிறதென்று விசாரித்தான். வேறேயொருவன் யானைக் காலைத் தழுவினதினாலே, யானை உரலுடைய சுருபமென்று மனதிலே எண்ணிக்கொண்டான். மூன்றாங் குருடனேவென்றால் யானையினுடைய தும்பிக்கையைப் பிடித்ததினாலே, யானை உலக்கைச் சுருபமாய் இருக்குதென்று மனதிலே நிச்சயித்தான். கடைசியிலே நாலாங் குருடன் யானையினுடைய வாலை நன்றாய்த் தொட்டுப்பார்த்ததினாலே, யானை அவசியமாய் தடிபோல் இருக்குதென்று ஸ்தாபித்தான். அதின்பிறகு இந்த நாலு கண் தெரியாதவர்கள் இப்படிப்பட்ட அபத்தமான விசேஷங்களை விசுவசித்ததுந்தவிர யானையை ஒருக்காலும் காணாத அநேகம் பேர்களுக்கு யானையினுடைய தாறுமாறான சுருபத்தைப் படிப்பித்தார்கள்.

இந்தப்பிரகாரமாக பாவத்தின் நிமித்தமாக மதிகெட்ட பாவிகள் புத்தியினுடைய கண்களிலே பராபர வஸ்துவினுடைய அசரீரித்தனத்தை மனதிலே தரிக்கமாட்டாமல் சரீரத்தினுடைய கண், வாய், கை, கால் முதலான பஞ்சேந்திரியங்களுடைய எத்தனங்களினலே கண்டுபிடிக்கலான கண்டிப்புள்ள பிரமாணத்தோடே கூடின பொருட்களைப்போலே கடவுளை வருணிக்கிறார்கள். இந்தப் பிரகாரமாக அவனுக்கு நாலு தலையென்றும் இவனுக்கு அஞ்சு தலையென்றும் ஆறு தலையென்றும் இவனுக்கு ஆறு முகமென்றும் அவனுக்கு மூன்று கண்ணென்றும் அந்த வாகனம், இந்த வாகனமென்றுஞ் சொல்லிக்கொண்டு திரிகிறார்களென்றார்.

இந்தப் பிரசங்கத்தைக் கேட்ட உபதேசிகளுக்குள் ஒருவன் விண்ணப்பம் பண்ணினதாவது: தேவரீர் வெளிப்படுத்தின சத்திய விசேஷத்தை பூர்வ காலத்திலிருந்த வித்துவாங்கிஷன் ஒருத்தன் இந்த ஒரு சுலோபத்திலே சொல்லிக்காட்டினான். அதெப்படியென்றால், ஞானக் கபடக்காரன் சொன்னது:

விழியில்லாதவர் சில பேர் வேஷங்காண
விருப்பமுடன் செவி துதிகை யிரு பாதம்
வழுவறுவா முடலிணைக் கரத்தால் நோக்கி
வாரண மிவ்வானெவே மிதித்துத் தம்மில்
இழிவினுடன் தனித் தனியே முன்கண்ட வாரண
யானையினெரியம்பி யலைந்திடுவர்போலும்
பழிநெறுவுங் கபடனெறி சமயத்தோரும்
பாவியல வெவ்வேறென்று பகரும்வாறே.

இதுவுமல்லாமல் சகலமான வேதப் புராணங்களிலேயும் வித்துவாங்கிஷர் எழுதின பிரபந்தங்களிலேயும் அந்தத் தேவர்களுடைய போசனமும், ஆயுதமும், ஆபரணமும் வருணித்திருக்கிறது. இதெல்லாத்தையும் சங்க்ஷேபமாக ஒரு கவீசுரன் வெளிப்படுத்தினான், அதெப்படியென்றால்:

சிறுவன்னைப்பயறு சென்னலக்கடுரு
மறுதிகிரிதென்று வேதனை மாலுக்குங்
கற்றுளம் பூவே கறி.

இதுக்கர்த்தமேதென்றால், சிவனுக்குச் சிறு துண்டன கரி, பெருமானுக்கு வாளையாகிற தயிரு, பிர்மாவுக்குச் சென்னல்லரிசி சா

தம், ஈசுரனுக்குக் கருகாகிற வால் கால் விஷம், பெருமாளுக்குக் கட வாகிற மண் சாதம்.

ஆயுதங்களேதென்றால், ஈசுரனுக்கு ஆயுதம் அறியாகிற மானு மழுவும், விஷ்டுணுவுக்கு அதிகாரியாகிற சக்கராயுதம், பிர்மாவுக்கு ஆயுதம் தெண்டு. பின்னையும் ஆபரணங்களேதென்றால், பெருமா ளுக்கு ஆபரணம் இரத்தினமணி, பிர்மாவுக்கு நூல், ஈசுரனுக்கு அ ரவமாகிற பாம்பு. கடைசியிலே தேவர்களுடைய வாகனமேதென்றா ல், பிர்மாவுக்கு வாகனம் அன்னம், பெருமாளுக்கு புள்ளாகிற கெருடன், ஈசுரனுக்கு வேராகிற எருது. இதன்றியே இவர்களு டைய இருப்பிடங்களேதென்றால், சிவனுக்கு இலங்கை, பெருமா ளுக்கு சமுத்திரம், பிர்மாவுக்கு தாமரைப்பூ.

இதெல்லாமிப்படியாகையில், மனுஷரைப் போலே சம பிரமாய் சாப்படுகிறவர்களும் ஆயுதங்களைக் கொண்டிருக்கிறவர்க ளும் ஆபரணங்களைத் தரித்திருக்கிறவர்களுமாய் அங்கங்கே உட் கார்ந்துகொண்டிருக்கிறவர்களுக்குக் கண்டிப்புள்ள பிரமாணத் தோடே கூடியிருக்கிற சரீரம் உண்டாயிருக்கிறதென்று பிரசித்த மான சத்தியமாகும். இதெல்லாம் பிரசித்தமாயிருந்தாலும் ஒரு நாள் இந்தச் சீர்மையில் பிறந்திருக்கிற ஒரு சாஸ்திரியோடே நான் தற்கம் பண்ணுகிறபோது, இந்தத் தேசத்தார் வணங்குகிற தேவர்க ளுக்குச் சரீரம் உண்டென்று வேதப் புராணங்களிலே சொல்லியி ருந்தாலும் இந்தச். சரீரமெல்லாம் பல பல அபதாரங்களினிமித் தமாக வந்ததென்று அந்தச் சாஸ்திரியானவன் சொன்னதுந் தவிர உலகத்தாருடைய வேதத்திலே தேவன் அசரீரியாய் இருக்கிறதெ ன்று பல பல உதாரணங்களினாலே ஒப்பிவிக்கப்பட்ட விசேஷ மாகுமென்று சலஞ்சாதித்தான்.

அதற்குவாயிலே குரு சுவாமி அவர்கள் அருளிச்செய்ததாவ து: இந்தச் சாஸ்திரியானவன் சொன்ன விசேஷத்தை மூன்று பிறத் தியுத்தாரத்தினாலே எளிதாய் ஆக்ஷேபிக்கலாம். அதெப்படியென் றால், இந்தச் சீர்மையிலே பிறந்திருக்கிற ஜனங்கள் சரீரத்தினுடை ய சுபாவத்தையும் குணங்களையும் கண்டுபிடியாமல் கண்டிப்புள் ள வஸ்துக்கள் அசரீரியாயிருக்குதென்று சொல்லுகிறார்கள்.

இந்தப் பிரகாரமாக அந்தந்த வேதப்புராணங்களில் பராபர வஸ்து முதலாய் அசரீரியாயிருக்குமென்று சொன்னதுக்குப் பிறபாடு ஆகாசத்தைப்போலே இருட்டுள்ள அறைக்குள்ளே பிறவேசம் பண்ணுகிற சூரியனைப்போலேயும் அதினுடைய கதிர்களைப் போலேயும் சரீரத்தைக்கொண்டிருக்கிறதென்று எழுதியிருக்கிறது; இதுவெல்லாம் இப்படியிருக்கையிலே, ஆகாயமும் சூரியனுடைய கதிர் அளவு பிரமாணத்தோடே கூடினதாயிருக்கிறபடியினுலே பராபர வஸ்து அசரீரியாயிருக்கிறதென்று காண்பிக்கிறது; ஆனுல் பராபர வஸ்துவை வருணிக்கிறதிலே இந்தத் தேசத்திலுண்டான கிரந்த கர்த்தாக்கள் மயங்கிப்போய் அசரீத்தனத்தைக் கண்டுபிடியாமல் போனுலும் பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலானவர்களுக்குச் சரீரமில்லையென்றெப்படிச் சொல்லுவார்கள்.

இதுக்கப்பால் அறியவேண்டியதாவது: உன்னேடே தர்க்கம்பண்ணின சாஸ்திரியானவன் பற்பல அவதாரங்களினிமித்தமாகத் தேவர்களுக்குச் சரீரம் வந்ததென்று சொன்ன விசேஷமானது பிரசித்தமான தப்பறையாயிருக்குமென்று திஷ்டாந்தமாக ஒப்பிக்கலாம். அதெப்படியென்றுல், பற்பல அவதாரங்களினிமித்தமாக வெவ்வேறு சரீரங் கொண்டிருக்கிறதென்று சொன்னுலும் இந்த அவதாரங்கள் தவிர பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் சுபாவமாயெப்படியிருக்கிருர்களென்று கேட்டால், இத்தேசத்தார் எல்லாரும் பின்னபேதகமில்லாமல் இப்படிப்பட்ட அப்படிப்பட்ட சரீரங் கொண்டிருக்கிருர்களென்று சொல்லுகிருர்கள்.

இதெல்லாம் அதிகமதிகமாய் விளங்கத்தக்கதாக அறியவேண்டிய விசேஷமாவது: பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலான தேவர்கள் உலகத்தார் சொல்லுகிறுப்போலே தங்களுடைய மோக்ஷஸ்தலங்களிலே தங்களுடைய மகிமைப் பிரதாபங்களையும் சுபாவகுணங்களையும் மோக்ஷவாசிகளுக்குக் காண்பிக்கிருர்கள்; ஆனல் இப்படிப்பட்ட மோக்ஷ விராச்சியத்திலே முன் சொல்லப்பட்ட தேவர்கள் சுபாவமாய்ச் சரீரத்தைக் கொண்டிருக்கிருர்களென்று. அந்தந்த வேதப்புராணங்களிலே சொல்லியிருக்கிறது.

அதெப்படியென்றுல், சொற்கத்திலே இருக்கிற தேவேந்திரன் மற்றுமுண்டான முப்பத்தி முக்கோடி தேவர்களுமெண்ணிக்கைக்

குள்ளடங்காத பலஸ்திரிகளோடே புணர்ச்சி பண்ணுகிறதும் வை குண்டத்திலே விஷ்ணு அநேகம் பெண்களோடே இருக்கிறதும் கைலாசத்திலே ருத்திரன் பார்வதி மற்றுமுண்டான ஸ்திரிக ளோடே இருக்கிறதுந்தவிர சிலபேர்கள் அவன் முன்பாகக் கொளுத்தியிருக்கிற தீவெட்டிகளைப் பிடித்துக்கொண்டிருக்கச் செய்தே வேறே பேர்கள் அவனுக்கு விசிறியினலே வீசுகிறதும் பிர்ம லோகத்திலே சரஸ்வதி பிர்மாவுக்கு ஊழியம் பண்ணுகிற அன்னம் முதலானதுகள் முன் சொல்லப்பட்ட தேவர்களுக்குச் சுபாவமாய்ச் சரீரமுண்டென்று பிரசித்தமாய் ஒப்பிவிக்கிறது.

இதுவெல்லாம் அறிந்திருக்கிற அநேகம் அக்கியானிகள் தங்க ளுடைய தேவர்களுக்குச் சரீரம் உண்டென்று சொன்னலும் முன் சொல்லப்பட்ட சரீரங்கள் திவ்விய சரீரங்களாயிருக்கிறதென்று சாதிக்கிருர்கள். ஆனல் இந்தப் பிரத்தியுத்தாரம் சொல்லுகிறதி லே தங்களுடைய புத்திக் குறைச்சலைக் காண்பிக்கிருர்களொழிய மற்றப்படியல்ல. அவ்வண்ணமே முன் சொல்லப்பட்ட திவ்விய சரீரங்கள் கண்டிப்புள்ள பிரமாணத்தோடே கூடின சரீரங்களா யிருக்கிறபடியினலே தேவ சுபாவத்துக்கு பாஸ்பரமுமாய் ஒவ் வாததுமாயிருக்கிறதென்று சத்தியமாகும்.

இதல்லாமல் எந்தவிதமாக முன் சொல்லப்பட்ட தேவர்களு டைய சரீரங்களை எந்தவிதமாக ஸ்துதித்தாலும் திவ்வியமான சரீ ரமென்று சொல்லாமல் அவலட்சணமான காமாதுரருடைய துர்க் கந்த சரீரங்களைப்பார்க்கக் கெட்ட சரீரமென்று சொல்லவேணுமே யொழிய மற்றப்படியல்ல. அதேதென்றுல் முன்சொல்லப்பட்ட தே வர்கள் பண்ணின அக்கிரமங்களையும் தாறுமாறுகளையும் நினைக்கும் போது அழிந்துபோகிற மிருகங்களுடைய சரீரங்களுக்கு மிகவும் கீழ்த்தரமானதாயிருக்கிறதென்றும் அறியப்பட்ட விசேஷம்.

இந்தப்பிரசங்கத்தைக் குருசுவாமியார் அவர்கள் முகித்த பிற் பாடு உபதேசிகளுக்குள் ஒருவன் விண்ணப்பம் பண்ணினதாவது: இந்தச் சீர்மையில் உண்டான ஜனங்கள் ஆராதிக்கிற தேவர்களுக்குச் சரீரம் உண்டென்று இத்தனை நியாயங்களினலேயும் உதாரணங்களி னலேயும் ஒப்பிவிக்கத்தக்கதாகத் தேவரீர் பிரயாசப்படுவானேன் ? உலோகத்தார் தானே வலிய தங்களுடைய தேவர்களுக்குச் சரீரம்

உண்டென்று சொல்லுகிறதுந்தவிர இப்படிப்பட்ட தேவர்களுக்குச் சரீரம் இல்லாதேபோனால் செல்வ பாக்கியங்களை அநுபவிக்க மாட்டார்களென்று கெட்டியாக விசுவசிக்கிறார்கள்.

ஆனால் இப்படிக்கொத்த பயித்தியமான விசேஷத்தை அனேகம் விசை தேவரீர் ஆக்ஷேபித்ததினாலே, விசேஷமாய்ப் பராபரவஸ்துவானவர் அளவில்லாத நன்மையை அநுபவிக்கிறதென்கிற சத்தியத்தைத் தேவரீர் வெளிப்படுத்தும்போது சரீரந் தேவையில்லையென்று கெட்டியுள்ள நியாயங்களினாலே ஸ்தாபித்தீரென்கிறதற்காக இந்த விஷயத்திலே பிரசங்கம் பண்ணினது போதும்.

கடைசியிலே தேவரீருடைய உத்தாரத்தின்படியே ஒரு வார்த்தை மாத்திரம் சொல்லுகிறேன். அதெப்படியென்றால் பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலான தேவர்களுக்குச் சரீரம் உண்டாயிருக்கிறதுந்தவிர இப்படிப்பட்ட சரீரங்களுக்கு அநேகங் குறைகளுண்டாயிருக்கிறதென்று ராமாயணத்திலே சொல்லியிருக்கிறது.

அதெப்படியென்றால், சூர்ப்புநங்கை வனத்திலே தபசு பண்ணுகிற ராமனைப்பார்த்துச் சொன்னதாவது: நான் சகல தேவர்களை உற்றுப் பார்த்ததற்குப் பிற்பாடு அவர்களுக்குள் ஒருத்தனானாலும் என்னைக் கலியாணம் பண்ண பாத்திரமாய் இருக்கவில்லையென்று ஸ்திரமாக எண்ணிக்கொண்டிருக்கிறேன். அவ்வண்ணமே சொற்கத்திலே தேவேந்திரனுக்கு உடலெல்லாம் கண்ணாயிருக்கிறது, பிர்மா ஒரு தலை வெட்டுண்டு போனான், ருத்திரன் சாம்பலினாலே எங்கும் பூசிக்கொண்டிருக்கிறான், விஷ்டுணு கரி நிறமாயிருக்கிறான், சூரியன் பல்லுடைபட்டிருக்கிறான், கணபதியானை முகம் உள்ளவனாயிருக்கிறான், எசிர்வேனியன் பெலவீனனாயிருக்கிறான், சுப்பிரமணியன் ஆறு முகம் உள்ளவனாயிருக்கிறான். ஆனபடியினாலே இத்தனை குறைச்சலுள்ள சரீரங்கொண்டிருக்கிற தேவர்களை நான் கலியாணம் பண்ணப் போகிறதில்லையென்று ஸ்திரமாகச் சொன்னாளென்றான்.

இந்த அபத்தமான வர்த்தமானத்தை எல்லாம் கேட்டதுக்குப் பிற்பாடு, குருசுவாமி அவர்கள் திருவுளம் பற்றினதாவது: உலகத்தாருக்குள்ளே உண்டான புத்திமான்களும் சாஸ்திரிகளும் தேவ

தத்துவத்தின் அசரீரித்தனத்தைக் கண்டு பிடிக்கமாட்டாமல் தங்களுடைய திரிமூர்த்திகளுண்டான சுபாவத்தை வருணிக்கும்போது, அதுக்குள்ள அளவு பிரமாணமுண்டென்று ஒப்பிவிக்கத்தக்கதாக அவர்கள் மிகவும் கொண்டாடுகிற புதுமையினாலே பிரசித்தமாயொப்பிவிப்போம்.

அதெப்படியென்றால், சீரங்கத்திலே இருந்த நலந்திருயன் நாளையிலே மைசூர் சீர்மையிலேயிருந்து ஒரு சன்னியாசி சீரங்கத்தில் எல்லாரும் வணங்குகிற பிரதான சிலையினுடைய தேவதத்துவத்தைக் கும்பத்திலே வைத்துக்கொண்டு போகத்தக்கதாக உத்தியோகமாயிருந்து சீரங்கத்திலே வந்தான். மகாப் பில்லிசூனியக்காரனாயிருக்கிற இப்படிப்பட்ட சந்நியாசி பெலி பீடத்தின் கிட்ட இருந்து தான் இருக்கிறதை யொருவருங் கண்டுபிடியாதபடிக்குத் திலதம் போட்டுக்கொண்டு கும்பம் ஸ்தாபித்து தன்னுடைய பில்லி சூனியங்களுடைய பலத்தினாலே விக்கிரகத்தில் உண்டான தேவதத்துவத்திலே பாதியை வாங்கித் தன்னுடைய கும்பத்திலே வைத்துக்கொண்டிருக்கிற சமையத்திலே நம்பியான் சீரங்க விக்கிரகத்தின் கிட்டப் போய் அதினுடைய முகம் எப்போதும்போலே தெளிவின்றி மாறிப்போச்சுதென்று கண்டு விக்கிரகத்திலுண்டான மூர்த்தியிலே பாதி இல்லையென்று கண்டுபிடித்து ஒருவரையுங் காணாததினாலே அவசியமாய் மூர்த்தியை வாங்கத்தக்கதாக பில்லி சூனியக்காரன் வந்திருக்கிறானென்று நிச்சயித்து மிளகு, கடுகு, மஞ்சள் இம்மூன்றையும் பொடிசெய்து வொன்றாய்க் கலந்து சோற்றிலேகூடப் போட்டு பிசைந்து பலி பீடத்தின் முன்பாக ரகசியமாய் வைக்கச் சொன்னான். அதுக்குப் பிறகு மைசூரிலிருந்துவந்த சன்னியாசியார் பண்ணின தந்திரத்தை அறியாமல் எப்போதும் போலே அந்தச் சோற்றைத் தின்றான். தின்றவுடனே வேர்வையெடுத்து திலதங் கரைந்து அஞ்சனம்போனதினாலே அவனைக் கண்டு பிடித்துக்கொண்டார்கள்.

ஆனால் எல்லாரும் அவனுக்குப் பயந்து விக்கிரகம் ஏறுகிற பல்லக்கிலே அவனை வைத்துப் பதினெட்டு வகை மேள வாத்தியங்களோடே பட்டணப் பிரவேசம்பண்ணிவித்து கோவிலுக்கு உண்டான உடமைகளை எல்லாம் அவனுக்குக் கொடுத்து அவன்

தன்னுடைய கும்பத்திலே வைத்திருந்த தெய்வத்தினுடைய அரை வாசியை விக்கிரகத்தில் இருக்கிற மற்ற அரைவாசியோடு ஒன்றாகக் கூட்டச்சொல்லி மன்றாடினார்கள். இப்படியெல்லாருஞ் சன்னியாசியை மன்றாடினதினாலே, அவர்களுடைய வார்த்தையைக் கேட்டுத் திரும்ப மூர்த்தியினுடைய பாதியை அந்த விக்கிரகத்திலே வைத்துக் கோவிலுக்கு உண்டான உடமையை வாங்கிக்கொண்டு மைசூர் சீர்மைக்குப்போகிற வழியிலே தந்திரத்தினாலே அவனைக் கொன்றுபோட்டார்கள்.

இப்படிப்பட்ட அபத்தமான சரித்திரத்தைப் பத்தும்பத்தாய் விசாரித்து பராமரித்தோமானால் தெய்வதத்துவத்துக்குக் கால்வாசி, அரைவாசி, முக்கால்வாசி உண்டென்று சொன்னால் இப்படிப்பட்ட தேவ தத்துவமானது இவ்வளவு பிரமாணங் கண்டிப்போடே பொருந்தியிருக்கிறபடியினாலே அவசியமாய்ச் சரீரங்களுக்குச் சமானமாய் இருக்கும். ஆனால் பராபர வஸ்துவுக்கு அளவு பிரமாணங் கண்டிப்புச் சரீரமில்லாததினாலே, அவசியமாய் உலகத்தார் வணங்குகிற தேவர்களுக்குத் தேவதத்துவம் இல்லையென்று பிரசித்தமான சத்தியமாகுமென்றார். இந்தப் பிரசங்கம் முகிந்தவுடனே, எல்லாருஞ் செபம் பண்ணப்போனார்கள்.

---

## கடவுள் சர்வ வியாபி. சூ.ம் சல்லாபம்.

---

குருசுவாமி அவர்களும் உபதேசிகளும் உபதேசத்தைக் கேட்கத்தக்கதாக வந்த அனேகம் பேர்களும் சிங்காரத்தோப்பில் இருக்கும்போது, உபதேசிகளுக்குள்ளே ஒருத்தன் இந்தச் சீர்மையில் உண்டான புராண சாஸ்திரங்களிலே பழகினவர் கணக்கு அதிகாரம் என்கிற ஒரு சின்னச் சுவடி கையிலே பிடித்துக்கொண்டு சர்வ உலகத்தினுடைய அளவுபிரமாணம் இங்கே சொல்லியிருக்கிறதாம். அதெப்படியென்றால்: இது நாவலன பெருந்தீவு. இனி சமுத்திரமுளவு வருமா—றுமுதல் கடல் உப்புச் சமுத்திரம் நாற்பத்தெண்ணூறாயிரம் யோசினை அகலம். இதுக்குக் குறுக்கு நூறாயிரம் யோசினை. இது சம்புத்தீவு. இதுக்கு அப்புறங் கருப்பஞ்சாற்றுக்

கடல் இருனூருயிரம் யோசினை அகலம். சணமலித் தீவு. இது க்கு அப்புறம் சமுத்திரம் நானூருயிரம் யோசினை அகலம். பில க்ஷந் தீவு. இதுக்கப்புறந் தயிர்க்கடல் எண்ணூருயிரம் யோசி னை அகலம். குழசத் தீவு.

இதுக்கு அப்புறம் மகா விஷ்டுணு பள்ளிகொண்டிருக்கிற திரு ப்பாற் கடல் இறுபத்தெண்ணூருயிரம் யோசினை அகலம். சக்கரத் தீவு. இதுக்கப்புறம் நெய்ச் சமுத்திரம் சத்தசலம் இருனூருயிரம் யோசினை அகலம். புட்களைச்சுத் தீவு. இந்தச் சமுத்திரம் ஏழுக் கும் பிறகு சக்கரவாளக்கிக் கோட்டை. இதுக்கு விட்ட சமுத்தி ரம். அகலம் இரண்டுகோடியே ஐம்பத்து நானூருயிரம் யோசினை சமுத்திரம். வெளி நடுத்தீவின் அளவு கோடியே ஐம்பத்து எழு னூருயிரம் யோசினை. ஆகக் கிழக்கு மேற்கு கொண்டது மூன்று கோடியே எண்பத்துனூருயிரம் யோசினை தூரமென்றும், கோட் டைக்குச் சுற்றளவு பத்துகோடியே நாற்பத்து மூவாயிரம் யோசி னை தூரமென்றும் சொல்லுவது. இனிமேல் பாதாளங்கள் வறுமாறு என்ருன்.

அந்தத் தறுவாயிலே குருசுவாமி அவர்கள் திருவுளம்பற்றின தாவது: இந்தச் சின்னச் சுவடியிலே எழுதியிருக்கிற அபத்தங்க ளும் பிரசித்தமான தப்பறைகளும் பத்தும்பத்தாய் விசாரித்தால் இதுக்குத் தப்பறைக் கணக்கு அதிகாரமென்கிற பேர் செல்லுமொ ழிய மற்றப்படியல்ல. அதேதென்ருல், இந்தப் பூமியும் பூமியோ டே கலந்திருக்கிற சமுத்திரமும் உண்டை வட்டப்பிரகாரமாக உண்டாக்கப்பட்டதாயிருக்கச் செய்தே, பூமிமேலே சம சக்கரத்து க்குக் கீழேயிருந்து மேற்கு முகமாய் நடந்து முன் இருந்த ஸ்தலத் துக்குத் திரும்ப வருகிறதுக்கு எழாயிரத்து அறுனூற்று இருபது சாஸ்திர காதவழி மாத்திரம் உண்டென்று சோதிட சாஸ்திரிகள் சந்திர சூரியக் கிராண நிமித்தமாகவுந் திரும்ப வேறே கெட்டியுள் ள நியாயங்களினிமித்தமாகவும் திஷ்டாந்திரமாக ஒப்பிவிக்கிருர் கள்; ஆனல் இப்படிப்பட்ட தப்பில்லாத விசேஷமும் வேறே ஆச்சரியமான அநேகம் காரியங்களும் உலோகப் பிரமாண சாஸ்தி ரத்திலே பிரத்தியக்ஷமாய் ஒப்பிவித்திருக்கிறதினலே இம்மாத்திர ம் சொல்லிக்காட்டினதுபோதும். ஆனல் இப்போதைக்குக் கடவு

வின் நன்மைகளின் விஷயத்திலே இந்தச் சீர்மையிலுண்டான அக்கியானத்தைத் தள்ளத்தக்கதாக உத்தியோகமாய் இருக்கிறதினாலே பராபரவஸ்துவானவர் எப்படி எங்கும் வியாபித்திருக்கிறாரென்று சொல்லிக்காட்டுவோம்.

அதெப்படியென்றால், விஷ்டுணுவை வணங்குகிறவர்கள் எங்கும் வியாபித்திருக்கிற பராபர வஸ்துவினுடைய அளவில்லாத தனத்தைக் கண்டு பிடிக்கமாட்டாமல் விஷ்டுணு பாற்கடலிலே ஆனந்தனென்கிற பாம்பின் மேலே பள்ளிக்கொண்டிருக்கிறானென்று பிதற்றுகிறதுந் தவிர பற்பல தேவர்கள் பற்பல ஸ்தலங்களிலே இருக்கிறார்களென்று உலகத்தார் எல்லாரும் சொல்லும்போது விஷ்டுணுவுக்கும் அந்தந்தத் தேவர்களுக்கும் தேவத்துவமுண்டென்று நிச்சயிக்கிறதெப்படி? அவ்வண்ணமே சர்வ உலகத்திலே எங்கும் வியாபித்திருக்கிறாரென்று சொல்லுகிறது மிகவும் துதிக்கப்படத்தக்க நன்மையாய் இருக்கிறதினாலே, அவசியமாய்ச் சகல நன்மையாயிருக்கிற பராபர வஸ்துவினிடத்தில் இருக்க வேண்டியிருக்கிறதென்று சத்தியமாகும்.

இதெல்லாம் இப்படியிருக்கையிலே, பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலானவர்கள் தேவர்களாய் இருக்கமாட்டார்களென்று அங்கீகரிக்கக்கடவோம். ஆனால் இந்த விசேஷத்தை ஒப்பிவிக்கிறதுக்கு முன்னமே கடவுளுடைய அளவில்லாத வியாபித்திருக்கிறதனத்தை எவ்வளவாகிலும் சொல்லிக்காட்டுவோம்.

அதெப்படியென்றால், பராபர வஸ்துவானவர் ஞானத்தினாலேயும் பலத்தினாலேயும் எல்லாத்துக்கும் காரணமாய் இருக்கிறதினாலேயும் எங்கும் வியாபித்திருக்கிறார். ஞானத்தினாலே பூர்வ காலம், வர்த்தமான காலம், பவிஷியகாலமாக மூன்று வகைக் காலமெல்லாம் அளவறுத்துப் போனதையும் உண்டானதையும் இருக்கலானதையும் சாங்கோபாங்கமாக அறிந்திருக்கிறார். பலத்தினாலே தம்முடைய சித்தத்தின்படியே எங்கும் எல்லாத்தையும் நடத்திக்கொண்டுவருகிறார். எல்லாத்துக்கும் காரணத்தினாலே அவருடைய உதவியைக்கொண்டு சகல உலகத்திலே சகலமான வஸ்துக்களான வகையோடே இருக்கிறது. கடைசியிலே பிரகாசம் பூலோகத்தில் இருக்குமாப்போலே சுபாவத்தினாலே எங்கும் வியாபித்திருக்கிறார்.

இதிலே அறியவேண்டியதாவது : சூரியனுடைய பிரகாசமான து பூலோகத்தினுடைய பாதியைப் பிரகாசியாமல் இருக்கிறதுந் தவிர கடினமான கண்டிப்புள்ள வஸ்துக்களிலே பிரவேசம் பண்ண மாட்டாது. ஆனால் சர்வேசுரனுடைய அளவில்லாத வியாபித்தி ருக்கிறதனம் சர்வ உலகத்திலேயும் பிரத்தியிலேயும் இருக்கிறது. ஆனபடியினாலே பக்ஷிகள் ஆகாயத்தில் இருக்குமாப்போலேயும் சமுத்திரத்திலே மக்ஷங்கள் இருக்குமாப்போலேயும் சகல வஸ்து க்கள் கடவுளுடைய வியாபித்திருக்கிறதனத்திலே இருக்கிறதுந் த விர இப்படிப்பட்ட வியாபித்திருக்கிறதனம் எங்கும் பிரவேசம் பண்ணி எல்லாத்திலும் நிறைந்திருக்கிறது.

அவ்வண்ணமே பாசி சமுத்திரத்தினுடைய நடுவிலே இரு ந்து தனது மேலேயும் கீழேயும் உள்ளேயும் பிறத்தியிலேயும் தண்ணீர் நிறைந்திருக்குமாப்போலே பரர்பர வஸ்துவினுடைய அளவில்லாத வியாப்பித்திருக்கிறதனம் சகலமான வஸ்துக்கள் மேலேயும் கீழேயும் உள்ளேயும் பிறத்தியிலேயும் எங்கும் நிறைந்தி ருக்கிறதென்று சந்தேகமில்லை. இதிலே அறியவேண்டியதாவது : இப்படிப்பட்ட எங்கும் வியாபித்திருக்கிற விஷயத்திலே புத்தியில் லாதவர்கள் சில அபத்தமான சந்தேகங்களைச் சொல்லும்போது, தங்களுடைய புத்திக் குறைச்சலைக் காண்பிக்கிறதுந் தவிர அசரீரி யாய் இருக்கிற வஸ்துக்களுடைய சுபாவத்தையும் மனுஷருடைய சரீரத்திலிருக்கிற ஆத்துமத்தினுடைய பிரகாசத்தையும் சற்றாகி லும் கண்டு பிடிக்கவில்லையென்று பிரசித்தமாய் ஒப்பிவிக்கிறார்கள்.

இதெல்லாம் இப்படியிருக்கையிலே, பிர்மா, விஷ்டுணு, ருத்தி ரன் முதலானவர்களிடத்திலே எங்கும் வியாபித்திருக்கிறதனமில் லாததினாலே, அவர்கள் தேவனாய் இருக்கமாட்டார்களென்று பிரசித் தமாகும். அதெப்படியென்றால், விஷ்டுணு ராம அவதாரம் பண்ணு கிறதுக்கு முன்னமே முப்பத்து முக்கோடி தேவர்கள் இராக்ஷதரா லே செயிக்கப்பட்டு பிர்மாவுக்கு இராவணனுடைய நிஷ்டூரத்தை அறிவித்ததுக்குப் பிற்பாடு பிர்மாவும் சகலமான தேவர்களும் பாற்கடலிலே பள்ளிக்கொண்டிருக்கிற விஷ்டுணுவண்டைக்குப் போய் அவனை எழுப்பி முன் சொல்லப்பட்ட காரியத்திலே விண்ண ப்பம் பண்ணினார்களென்று இராமாயணத்திலே சொல்லியிருக்கி றது.

ஆனால் விஷ்டுணு எங்கும வியாபித்திருந்தால் பாதாளலோக்குப் போக வேணுமோ? அவனை எழுப்ப வேணுமோ? இந்தப் பிரகாரமாக பிர்மாவும் மற்றுண்டான தேவர்களும் எங்கும் வியாபித்திருந்தால், தாங்கள், இருந்த ஸ்லத்தை விட்டு அப்பாலே போகக்கூடுமோ? அங்கங்கே பயணமாய் இருக்கலாமோ? இதுக்கப்பால் அறியவேண்டியதாவது: பூர்வகாலத்திலே பிர்மாவுக்கும் விஷ்டுணுவுக்கும் ருத்திரனுக்கும் கர்த்தத்துவத்தின் பேரில் கனமான தர்க்கமுண்டாச்சுது. அவ்வண்ணமே ருத்திரன் எல்லாரையும் பார்க்கத் தன்னைப் பெரியவனென்று சொல்லித் தன்னுடைய சாமார்த்தியத்தையும் பிலத்தையும் கொண்டாடுகிறபோது பிர்மாவையும் விஷ்டுணுவையும் பார்த்துச் சொன்னதாவது:

தேவத்துவத்தின் விஷயத்திலே இத்தனை கனமான சண்டை வருவானேன்? சற்று நேரத்துக்குள்ளே தர்க்கம் முகித்துப் போடுவேன்; அதெப்படியென்றால், என்னுடைய தலையை ஒரு ஸ்தலத்திலே ஒளித்துப்போட்டு வேறே ஸ்தலத்திலே நம்முடைய பாதங்களையும் மறைப்பேன்; உங்களுக்குள் யாதொருத்தன் நம்முடைய தலையையானாலும் பாதத்தையென்கிலும் கண்டு பிடித்தால் அவன் தான் தேவன், இல்லாவிட்டால் நான்தான் எல்லாத்துக்கும் கர்த்தனென்றான்.

அத்தறுவாயில் எல்லாரும் சம்மதித்ததுக்குப் பிற்பாடு பிர்மாவானவன் அன்ன ரூபமாக ஆகாயத்திலே பறந்து ருத்திரன் தலையை எங்கும் தேடினானும். விஷ்டுணுவோவென்றால், பன்றி ரூபமாகப் பூமியை மூஞ்சியினாலே முட்டித் தள்ளிப்போட்டு உள்ளே புகுந்து சிவனுடைய கால்களைத் தேடிக் காணமற் பிரயாசப்பட்டானும். இதெல்லாம் இப்படியிருக்கையிலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் எங்கும் வியாபித்திருக்கிறதென்ன? ஒரு ஸ்தலத்திலே ஒளித்திருக்கிறவன் எங்கும் நிறைந்திருக்கிறானென்று பயித்தியகாரனானாலும் சொல்லுவானோ? பின்னையும் ஆகாயத்திலே பறக்கிறவனும் பூமியிலே நுழைகிறவனும் எங்கும் வியாபித்திருக்கிறார்களென்று விசுவசிக்கிறவர்களார்?

இந்தப் பிரகாரமாக பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலானவர்கள் கனமான காரியத்திலே ஆலோசனை பண்ணுகிறதுக்குப் பரிசுத்

...மாகிற தங்கத்தினலே உண்டாக்கப்பட்ட மகா மேருவினு டைய மூன்றும் கொம்பின் சிகரத்தின் மேல் ஏறித் தங்களுக்கு ள்ளே இரகசியமாய்ப் பேசினர்களாம். ஆனபடியினலே முன் சொ ல்லப்பட்ட மும்மூர்த்திகள் மகா மேருவினுடைய மூன்றும் அங் கணத்தின் பேரிலே பரிச்சேதம் இராமல் அங்கே யோசிக்கப்போனு ர்கள். பின்னையும் அந்தக் கோபுரத்தின்மேல் ஏறுகிறதுக்குத் தாங் கள் வாசமாயிருந்த ஸ்தலத்தை விட்டுவிட்டார்களென்று பிரசித் தமாகும். ஆகையால் அவர்களுக்கு அளவில்லாத தனமில்லையெ ன்றும் எங்கும் வியாபித்திருக்கிறதன மில்லையென்றும் சந்தேக மற்றத் திர்ஷ்டாந்திரமாச்சுது.

இதன்றியே தேவர்களும் நல்லவர்களும் சகலமான செல்வபா க்கியத்தை அநுபவிக்கத்தக்கதாக நாலு பிரதான ஸ்தலமுண்டென் று உலகத்தார் சொல்லுகிறர்கள். அதெப்படியென்றல், தேவேந் திரனும் முப்பத்து முக்கோடி தேவர்களும் அநேகம் பேர்களும் சொற்கத்தின் வாழ்வுகளுக்குளளே அமிழ்ந்தியிருக்கிறர்களென்றும் சிவன் மேலே பத்தியாய் இருக்கிறவர்கள் கையிலாச மோக்ஷத்தி லேயான சந்தோஷங்களை அநுபவிக்கிறர்களென்றும் விஷ்டுணுவு க்கு விசேஷமான ஆராதனை பண்ணினவர்கள் வைகுண்டத்திலே செ ல்வங்களை அடைவார்களென்றும் கடைசியிலே பிர்மாவானவனும் அநேக மகாத்துமாக்களும் பிர்ம லோகத்திலே பாக்கியவான்களாய் இருக்கிறர்களென்றும் அங்கங்கே வேதப் புராணங்களிலே சொல்லி யிருக்கிறது.

இதெல்லாம் இப்படியிருக்கையிலே, ஒவ்வொரு தேவன் இருக் கிறதுக்கு விசேஷமான ஸ்தலங் குறித்திருக்கச் செய்தே, இப்படி ப்பட்ட தேவர்கள் எங்கும் வியாபித்திருக்கமாட்டார்களென்று சந்தேகமில்லை. அவ்வண்ணமே பிர்மாவானவன் சொற்கத்திலே இருக்கிறனென்றும், விஷ்டுணு கைலாசத்தில் இருக்கிறனென் றும், ருத்திரன் வைகுண்டத்தில் இருக்கிறனென்றும் யாதொருத் தன் சொன்னல் அந்தந்த மதங்களிலே உட்பட்டவர்கள் இப்படிப் பட்ட விசேஷம் பிறத்தியட்சமான தப்பறையாயிருக்குதென்று மிகுந்த கோபத்தோடே சொல்லுவார்கள்.

இதுக்கப்பால் அறியவேண்டியதாவது : அந்தந்தத் தேவர்க ளுடைய விக்கிரகங்களை வெள்ளி விலங்கிலே போட்டுத் தங்கச் சங்

கிலிகளினாலே கட்டிவித்து தங்களுடைய தேவர்கள் அப்பாலே போகாதபடிக்கு உபாய தந்திரங்கள் எல்லாம் பண்ணினார்கள். ஆனால் அவர்கள் நமஸ்கரிக்கிற தேவர்கள் மெய்யான தேவர்களானால் இருந்த ஸ்தலத்தை விட்டு அப்பாலே போகிறதுக்கு பயந்திருக்கிறதென்ன ? மெய்யான கடவுள் எங்கும் வியாபித்து இருக்கிறாரென்று சத்தியமாயிருக்க, ஒரு ஸ்தலத்தைவிட்டு அப்பாலே போகாதபடிக்குச் சிந்தாக்கிராந்தனாயிருக்கிறதுக்கு அவகாசமில்லை.

கடைசியிலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலானவர்கள் பிரதான தேவர்களல்லாமல் அக்கியானிகளாலே பூசிக்கப்பட்ட சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள் முதலான கிரகங்களும் பிரதிவி, அப்புத்தேயு முதலான பூதியங்களும் அரசு முதலான விருக்ஷங்களும் அன்னம் முதலான பக்ஷிகளும் விசேஷமான ஸ்தலத்தில் இருக்கிறபடியினாலேயும் அங்கங்கே உத்தர தக்ஷணயனமாய் இருக்கிறபடியினாலேயும் பராபர வஸ்துவினிடத்தில் உண்டான எங்கும் வியாபித்திருக்கிற தத்துவம் முன் சொல்லப்பட்ட வஸ்துக்களுக்கில்லையென்று பிரசித்தமாகும்.

பூர்வ காலத்திலே சூரியனை வணங்கிறவர்களுக்கு இப்படிப்பட்ட ஆராதனைக்குக் காரணமேதென்றால், சாஸ்திரியானவர் கேட்கையிலே அக்கியானியாயிருந்து பகல் நேரத்திலே சூரியனானது என்னைப் பிரகாசித்ததினாலே, சூரியனுக்குப் பயந்து நமஸ்காரம் பண்ணுகிறேன். இராத்திரி காலத்திலே சூரியன் என்னைக் காணாததினாலே, என்னுடைய இச்சையின்படியே நடக்கிறேன். சந்திரனை வணங்கிறவன் சொன்னதேதென்றால், இராத்திரி காலத்திலே பிரகாசிக்கிற சந்திரனுக்குப் பயந்து சும்மா இருக்கிறேன்; ஆனால் பகல் நேரத்திலே சந்திரன் காணபியாததினாலே, என்னுடைய மனதின்படியே நிற்கிறேனென்றான்.

ஆனால் அக்கியானிகள் பராபரனுடைய மகிமையை அறியாமல் இந்த அபத்தமான ஆலோசனை பண்ணினார்களென்று ஆச்சரியமில்லை. கடவுளுடைய எங்கும் வியாபித்திருக்கிற தனத்தை முழு மனதோடே சந்திக்கிறவர்களெங்கும் வியாபித்திருக்கிற கடவுளுக்குப் பயந்து அவருடைய சித்தத்துக்கேற்க நடக்கவேணுமொழிய மற்றப்படியல்ல. சர்வேசுரன் எங்கும் வியாபித்திருக்கச் செ

யதே, ... பயந்திருக்க வேணும். பராபர வஸ்துவானவர் எங்கும வியாபித்திருக்கிற தத்துவத்தை வெளிப்படுத்தும்போது, ஞானத்தினலேயும் பெலத்தினலேயும் சர்வ லோகத்துக்குங் காரண மாயிருந்து எங்கும் இருக்கிருரென்று அருளிச்செய்தோம்.

ஆனல் இனிமேல் வருகிற சல்லாபங்களிலே பிர்மா, விஷ்ணு, ருத்திரன் முதலான தேவர்களுக்கு ஞானமும் பெலமும் இல்லாதி ருக்கிறதுந் தவிர எல்லாத்துக்குங் காரணமாய் இருக்கமாட்டார் களென்று ஸ்திரமான நியாயங்களைக்கொண்டு ஒப்பிவிக்கப்போகிற தினலே, எந்த விதமாக பராபர வஸ்துவினுடைய அளவில்லாத தனத்தை வெளிப்படுத்தினலும் இந்தச் சீர்மையிலுண்டான சனங் கள் வணங்குகிற தேவர்களுக்கு அளவில்லாததனமும் எங்கும் வியா பித்திருக்கிற தத்துவமும் பரிச்சேதமாய்ச் செல்லாதென்று மூன் ருத சத்தியமாகும்.

---

## பராபர வஸ்துவின் அநாதி. எ-ம் சல்லாபம்.

---

சூரியனுடைய கதிர்கள் எதிராய் நிற்கிற மேகங்களுக்குள்ளே பிரவேசம்பண்ணி சித்திரக்காரர் தாங்கள் அந்த சூட்சத்தின் நிமி த்தமாகக் கூட்டுகிற வர்ணங்களை அறியாமலும் தூரிக்கை கவிரா சம் உதவியில்லாமலும் இப்படிப்பட்ட மேகங்களை அலங்காரமான நிறங்களைக் கொண்டு சிங்காரித்ததினலே, அற்புதமான பிரகாச வளையமாகிற பச்சை வில்லை கண்களுக்குக் காண்பித்து பச்சை, சிவ ப்பு, குங்குமமாகிற மூன்று பிரதான வர்ணங்களினலே விநோத மாய் இருக்கிற இந்தச் சோதி சக்கரத்தை எல்லாரும் பார்த்துக் கொண்டிருக்கிற சமையத்திலே அவர்களோடேகூட நிற்கிற சத்திய போதக சுவாமியவர்கள் தம்முடைய சிஷாக்களைப் பார்த்துத் திரு வுளம்பற்றினதாவது:

மனுஷருக்கு மோசம் வருத்துவிக்கிற புரோகிதரைப்போலே இந்த அதிசயமான பிரகாச வளையத்தை நீங்கள் பார்க்கவேண்டாம். அவ்வண்ணமே புரோகிதராலே சொல்லப்படுகிற நிமித்தங்கள் முழு பயித்தியங்களாய் இருக்குதென்று சவன நிவாரணத்திலே

கெட்டியுள்ள நியாயங்களினாலே ஒப்பிவிக்கப்பட்டதாயிருக்கிறது. ஆனால் இந்த அற்புதமான சோதி சக்கரம் பராபர வஸ்துவினுடைய அநாதி தனத்தை எவ்வளவாகிலுங் கண்டுபிடிக்கிறதுக்கு உசிதமான திருஷ்டாந்தரமாயிருக்கிறதென்றறிவீர்களாக.

அதேதென்றால், பிரகாச வர்ணங்களினாலே அலங்கரிக்கப்பட்ட இந்த வளையத்தைப் பத்தும்பத்தாய் விசாரித்தால், அதிலே துவக்கமும் முடிவும் இல்லாததினாலேயும் எங்கே பார்த்தாலும் இந்தச் சோதி சக்கரம் ஒருகண்டசீராய் எங்கும் பிரகாசிக்கிறதினாலேயும் ஆதியந்தமில்லாத பராபர வஸ்துவினுடைய அநாதி முழுதும் அளவறுக்கப்படக்கூடாதிருந்தாலுங் கொஞ்சத்துக்குள்ளேயானாலும் முன் சொல்லப்பட்ட உவமையைக்கொண்டு கடவுளுடைய நித்தியத்தை வெளிப்படுத்தலாம்.

அதெப்படியென்றால், இந்தப் பிரகாச வளையத்திலே துவக்கமும் முடிவும் இல்லாதிருக்குமாப்போலே, பராபர வஸ்துவினிடத்திலே துவக்கமும் முடிவும் இல்லாமல் முன்னே இல்லையென்றும் பிறகு இருக்கிறாரென்றுஞ் சொல்லாமல் ஊழியுள்ள காலம் எப்போதுமெப்போதும் அநாதியாய் இருக்கிறாரென்று சத்தியமாகும். இந்தச் சத்தியத்தை மூன்று நியாயங்களினாலே சங்க்ஷேபமாக ஒப்பிவிப்போம்.

அதெப்படியென்றால், பராபர வஸ்துவானவர் வேறே காரணத்தினாலே வராமல் தானாயிருக்கச் செய்தே, அவசியமாய் அநாதியாயிருக்கிறாரென்று பிரசித்தமாகும். அதேதென்றால் கடவுளான சர்வேசுரனானவர் அநாதியாயிராமல்போனால், முன்னே இல்லாமல் பிறகு வந்தவரென்று சொல்லும்போது வேறே காரணத்தினாலே வந்தாரென்று தப்பில்லாத நியாயமாகும். ஆனால் முன்னாலே பண்ணப்பட்ட பிரசங்கத்தின் நிமித்தமாக பராபர வஸ்துவானவர் தானாயிருக்கிறாரென்று கெட்டியுள்ள நியாயங்களினாலே ஸ்தாபித்ததுக்குப் பிற்பாடு அவசியமாய் எப்போதுமெப்போதும் ஆதியந்தமில்லாமல் அநாதியாயிருக்கிறாரென்று சொல்லவேண்டியிருக்கிறது.

இரண்டாவது, பராபர வஸ்துவானவர் எல்லாத்துக்கும் ஆதிகாரணமாயிருக்கச் செய்தே, அவசியமாய் அநாதியாயிருக்கிறாரா

ழிய முறைப்படியல்ல. மூன்றாவது, சகலமான ஞான சாஸ்திரிகள் பராபர வஸ்துவானவர் சகல நன்மைச் சுரூபியாயிருக்கிறாரென்று சங்கேதம் பண்ணினதினாலே, கனமான நன்மையாகிற அநாதித்தனம் அவரிடத்திலிருக்கிறதென்று சந்தேகமில்லை.

இதெல்லாம் இப்படியிருக்கையிலே, இலட்சங், கோடி, சங்கம், விந்தம், பதுமம், சமுத்திரம், வெள்ளம், பிரளையம், குமுகம், கற்பகம், தற்பனை, அனந்த முதலான கணக்கெல்லாங் கூட்டி மனதின்படியே பெருக்கினாலும் அதின் கணக்கெல்லாத்துக்கு முன்னே பராபர வஸ்துவானவர் இருக்கிறார். சர்வலோகங்களெல்லாம் கணக்குப் புஸ்தகங்களினாலே நிறைந்திருக்கிறதென்று விதித்தாலும் இந்த எண்ணிக்கைக்குத் துவக்கமும் முடிவும் உண்டாயிருக்கிறபடியினாலே, பராபர வஸ்துவினுடைய அநாதிதனத்தை வெளிப்படுத்தமாட்டாது. ஆனபடியினாலே பரமண்டலங்களிலே பதித்திருக்கிற நட்சத்திரங்களுடைய விலக்கத்தையும் மரங்களிலுண்டான இலைகளுடைய எண்ணிக்கையையும் சமுத்திரத்தினுடைய கரையிலே கிடக்கிற மணல்களுடைய எண்ணிக்கையையும் விடக் கடவுளுடைய அநாதிதனம் மிகவும் அதிசயித்திருக்கிறதுந் தவிர அளவில்லாத கணக்குகளைக் கொண்டிருக்கிற சமுத்திரமாயிருக்கிறதென்று பிரசித்தமாகும்.

கடைசியிலே அறியவேண்டியதாவது: பராபர வஸ்துவினுடைய அநாதித்தனத்துக்குத் துவக்கமில்லாதிருக்குமாப்போலே இனிமேல் இருக்கப்போகிற நித்தியத்துக்கு முடிவு ஒருக்காலுங் காணப்போகிறதில்லையென்று சத்தியமாகும். இந்த அநாதித்தனத்தினுடைய சுபாவத்தை வருணிக்கத்தக்கதாக அநேக மகாத்துமாக்கள் கூடி அநேகம் பிரயாசப்பட்டாலும் அதை முழுதும் அளவறுக்கமாட்டாமலிருக்கிறதுந்தவிர எவ்வளவாகிலும் அதினுடைய விஸ்திரணத்தை வெளிப்படுத்துவது மிகவும் அருமையாயிருக்கிறதென்று எழுதிவைத்தார்கள்.

ஆழமுங் கரையுங் காணாத மட்டில்லாத அநாதித்தனத்திலே மிகவும் அதிசயமான விசேஷத்தைக் காணலாமென்று ஞான வித்தியாபாரகர் சொல்லுகிறார்கள். அதெப்படியென்றால் உண்டாக்கப்பட்ட வஸ்துக்களுக்கு மூன்று வகைக்காலம் உண்டாயிருக்கிறது. போன காலமும் வர்த்தமான காலமும் பவுஷியகாலமும். இந்த மூ

ன்றுவகைக்காலமும் ஒருமிக்க இராமல் படைக்கப்பட்ட பொருள்க ளுடைய காலங்களின் பிரமாணமாயிருக்கிறது. ஆனல் பராபரவ ஸ்துவினுடைய அளவில்லாத அநாதித்தனத்திலே போன காலம் இருக்கிற காலம், வருகிற காலம் ஒரு க்ஷணத்திலேதானே பின்ன பேதமில்லாமலிருக்கிறது.

அவ்வண்ணமே சாங்கோபாங்கமாக வட்ட ரூபமாகப் பண்ணி யிருக்கிற பலகைமேலே நின்ருலும் அந்த ஒரு வஸ்துவின்பேரிலே உண்டையிலேயுண்டான சகல வங்கிஷங்களுடைய கனமெல்லாம் இந்த வணுமேலே தாங்கியிருக்குமாப்போலே போனகாலம், வர்த்த மான காலம், பவுஷியகாலம் சகலமான காலங்களெல்லாம் அநாதி த்தனத்நிமித்தமாக ஒரு க்ஷணத்துக்குள்ளே பராபர வஸ்துவினி டத்திலே அடங்கியிருக்கிறது. இப்படிப்பட்ட அதிசயமான விசே ஷங்களைத் தியானிக்கிற புத்திக்கூர்மையுள்ளவர்கள் பராபர வஸ்து வின்பேரில் தோத்திரம் பண்ணி அவரோடேகூட முகிவில்லாத காலம் மட்டில்லாத பாக்கியத்தை அநுபவிக்கத்தக்கதாக ஆசையா யிருப்பார்கள்.

இதெல்லாமிப்படியிருக்கையிலே, உலோகத்தார் வணங்கிற தேவர்கள் அநாதியாயிராமல் மனுஷரைப்போலே முன்னே இரா மல் பிறகே வந்தார்களென்று பிரசித்தமான விசேஷமாகும். அதே தென்ருல், பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலான தேவர்கள் பாரச த்தியினலே வந்தார்களென்று சொன்னலும் உத்தாரம் பராபரவஸ் துவினலே வந்தார்களென்று சொன்னலும் உத்தாரம் வேறே கார ணத்தினலே வந்திருக்கச்செய்தே, அநாதியாயிராமல் அவர்களுடை ய ஸ்திதியினுடைய துவக்கமாயிற்று. ஆனல் இந்தச் சீமையிலு ண்டான அநேகஞ் சாஸ்திரிகள் சொல்லுகிறுப்போலே பிர்மா, விஷ் டுணு, ருத்திரன் முதலான தேவர்கள் தோன்றின வகையைப் பத்து ம்பத்தாய் விசாரிக்கும்போது பிர்மா, விஷ்டுணு, ருத்திரன வருமுன் னமே வஸ்துக்கள் உண்டாக்கப்பட்டதாயிருந்தது.

அதெப்படியென்ருல், பராபரத்தில் பரத்தைத் தோன்றுவித் து, பரத்தில் சிவத்தைத் தோன்றுவித்து, சிவத்தில் சத்தியைத் தோ ன்றுவித்து, சத்தியில் பூதாதியைத் தோன்றுவித்து, பூதாதியில் நா தத்தைத் தோன்றுவித்து, நாதத்தில் விந்துவைத் தோன்றுவித்து,

விந்துவில் சதாசிவத்தைத் தோன்றுவித்து, சதாசிவத்தில் மயேசுரத்தைத் தோன்றுவித்து, மயேசுரத்தில் ருத்திரனைத் தோன்றுவித்து, ருத்திரனில் விஷ்டுணுவைத் தோன்றுவித்து, விஷ்டுணுவில் பிர்மாவைத் தோன்றுவித்து, பிர்மாவில் ஆத்துமத்தைத் தோன்றுவித்து. இதெல்லாமிப்படியிருக்கையிலே அவசியமாய் அந்தச் சாஸ்திரிகள் சொல்லுகிறுப்போலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலான தேவர்கள் அநேகம் வஸ்துக்களின் பிறகு உண்டாக்கப்பட்டவர்களாயிருக்கிறபடியினலே, அவர்களுக்குத் துவக்கம் இருந்ததென்று பிரசித்தமாகும்.

இந்தப்பிரகாரமாக முப்பத்திமுக்கோடி தேவர்களுடைய தாய்தகப்பன் பேர் அங்கங்கே சொல்லியிருக்கிறது. ஆனபடியினலே தாய் தகப்பனுள்ளவர்கள் முன்னே இராமற் பிறகே பிறந்தார்களென்று திஷ்டாந்தமான சத்தியமாயிருக்கக்கொள்ள முப்பத்திமுக்கோடித் தேவர்கள் அநாதியாயிருக்கமாட்டார்களென்று அங்கீகரிக்கக்கடவீர்களாக.

இதுக்கப்பால் அறியவேண்டியதாவது: லயமாய்ப்போகிற வஸ்து அநாதியாயிருக்கமாட்டாது. ஆனபடியினலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலான தேவர்கள் லயமாய்ப்போகிறதினலே அநாதியாயிருக்கமாட்டார்கள். இந்த விஷயத்தை நன்ருய்க் கண்டுபிடிக்கிறதற்கு உலோக சக்கரத்திலே யெழுதியிருக்கிற தேவர்களுடைய கடைசியான வயது நன்ருய்ப் பராமரிக்கவேணும். அதெப்படியென்ருல் யுகம் பதினெட்டு வருஷம் நூற்றுபபத்துகோடியும் இருநூற்றுஓம்பது லட்சமும் நூற்றி முப்பத்திரண்டாயிரத்து எண்ணூறு வருஷம் எண்பத்தெட்டு பிரகாரம் குலாலன்றிருக்கைபோலேயும் சக்கரம்போலேயும் சுத்திடில் தேவேந்திரனுக்கு ஒரு நொடி. இந்தப் பிரகாரத்திலே வருஷம் அறுபது கொண்டது ஆண்டு; ஆண்டு நூருயிரம் கொண்டது ஒரு யுகம், யுகம் பதினெட்டு கொண்டது ஒரு சகம், சகம் இருபதாயிரத்து எழுநூறு மீண்டால், தேவேந்திரனுக்குப் பரம ஆயுசு.

இப்படிக்கொத்த நாள் இருபதினயிரத்து எழுநூறு சிலவு மீண்டால், பிர்மாவுக்கு ஒரு நொடி, இருநூற்று இருபது கோடியும் ஐஞ்ஞூற்றுப் பதினறு லட்சமும் இருநூற்று அறுபத்தோராயிர

த்து அறுநூறு வருஷம். மூன்றுலட்சத்து அறுபத்தாராயிரத்து அறுநூறு சிலவு மீண்டால், பிர்மாவுக்குப் பரம ஆயுசு. அப்படிக் கொத்த நாள் இருபதினாயிரத்து எழுநூறு சிலவு மீண்டால், ரோமசமாமுனிக்கு ஒரு ரோமம் உதிரும் இப்படிக்கொத்த நாள். இருபத்தெட்டுக்கோடி சிலவு மீண்டால், ரோமசமாமுனிக்குப் பரம ஆயுசு. அப்படிக்கொத்த நாள் இருபத்தெட்டு கோடி சிலவு மீண்டால், மீனசமாமுனிக்குப் பரம ஆயுசு. அப்படிக்கொத்த நாள் இருபத்தெட்டு சிலவு மீண்டால், பாதலோசன் மாமுனிக்கு ஒரு நாள். அப்படிக்கொத்த நாள் எண்பத்தெட்டுச் சிலவு மீண்டால், பாதலோசன் மாமுனிக்குப் பரம ஆயுசு. இப்படிக்கொத்த நாள் இருபத்தெட்டுச் சிலவுமீண்டால், துருவாசமாமுனிக்கு ஒரு நாள். அப்படிக்கொத்த நாள் எண்பத்தெட்டு சிலவு மீண்டால், துருவாசமாமுனிக்குப் பரம ஆயுசு. அப்படிக்கொத்த நாள் இருபத்தெட்டுச் சிலவு மீண்டால், கமண்டல மாமுனிக்கு ஒரு நாள். இப்படிக்கொத்த நாள் எண்பத்தெட்டுச் சிலவு மீண்டால், கமண்டலமாமுனிக்குப் பரம ஆயுசு.

இக்தப்பிரகாரமாக அநேகம் பேர்போன ரிஷிகளுடைய வயதிலே யோசித்ததற்குப் பிற்பாடு இப்படிக்கொத்த ரிஷிகளுடைய பரம ஆயுசு விஷ்டுணுவுக்கு ஒரு நாள். இப்படிக்கொத்த நாள் மாதம் வருஷம் ஆண்டு முதலான கணக்கு விஷ்டுணுவுக்குப் பரம ஆயுசு. இந்தப் பரம ஆயுசை அநேகம் விசை பெருக்கினதற்குப் பிற்பாடு ருத்திரனுடைய ஒரு நாள். ருத்திரனுடைய நாளை அநேகம் விசை பெருக்கினல் ருத்திரனுடைய பரம ஆயுசு.

இந்தப் பிரகாரமாக மற்றுண்டான தேவர்களுடைய வயதிலே யோசிக்கலாம். இந்த விசேஷங்களைப் பத்தும்பத்தாய் ஆராய்ந்தோமானல் முப்பத்திமுக்கோடி தேவர்களுக்கு இராசாவாயிருக்கிற தேவேந்திரனும் பிர்மாவும் ருத்திரனும் விஷ்டுணுவும் இறந்துபோனல் அவசியமாய் அநாதியாயிராமல் தேவர்களாயிருக்கமாட்டார்கள். அவ்வண்ணமே சாகாதபடிக்கு அவர்களுக்குப் பிலனில்லாதே போனல், அநாதியாயிருக்கமாட்டார்களென்றார்.

அத்தருவாயிலே உபதேசியானவன் சுவாமியவர்கள் பாதத்திலே விண்ணப்பம் பண்ணினதாவது: உலோகத்தார் வணங்கிற தேவர்களுடைய மரணத்தின் விஷயத்திலே சரப்பாகத்திலே ஒரு

விநோதமான கதையைச் சொல்லியிருக்கிறதெப்படியென்றால், பூர்வ காலத்திலே அசுரர்களுக்குந் தேவர்களுக்குங் கனமான சண்டை வந்ததாம். ஆனால் அசுரர்கள் தேவர்களைச் சங்கரித்துக் கொன்றுபோட்டார்கள். அந்த யுத்தத்திலே தப்பிப்போன சில தேவர்கள் பிர்மாவினுடைய மகனான கசனென்கிற மாமுனி கிட்டப் போய் சுக்கிருசாரியன் வைத்திருக்கிற அற்புதமான சஞ்சீவியை உபாயத்தினாலே வாங்கத்தக்கதாக மன்றாடினார்கள்.

கசனேவென்றால், தேவர்களுடைய வார்த்தையைக் கேட்டு சுக்கருசாரியனுடைய காலிலே விழுந்து நமஸ்கரித்துக் குருவுக்குச் சிஷனானவன் பண்ணத்தக்க ஊழியமெல்லாம் பண்ணிக்கொண்டு ஆயிரம் வருஷம் இருந்தான். அதுக்குள்ளேதானே அசுரர்கள் பிர்மாவினுடைய மகனை மூன்று விசை கொன்றுபோட்டார்கள். முந்த முந்த இவனை வெட்டித் துண்டந்துண்டமாய்ப் பண்ணி நாய், நரிகளுக்கிரையாகப் போட்டார்கள். கசன்பேரிலே மிகவும் பிரியமாயிருக்கிற தேவனை அழுகையோடே தன்னுடைய தகப்பனாகிற சுக்கிருசாரியனை வேண்டிக்கொண்டதினாலே, சுக்கிருசாரியன் சஞ்சீவி முகாந்தரத்தினாலே கசனை அழைத்து அந்த க்ஷணத்திலே தானே நாய், நரிகளுடைய வயற்றிலே யிருந்த மாங்கிஷங்களெல்லாம் திரும்ப ரூபமாய் வந்து முன்னிருந்த வகையோடே எழுந்திருந்தான்.

பின்னையும் வேறே சமையத்திலே அவர்கள் கசனைக் கண்டுபிடித்துப் பாறையிலே தேய்த்து இலவலேசமிராமற் பொடிபண்ணிச் சமுத்திரத்திலே கரைத்துப்போட்டுப் போனார்கள். திரும்ப சுக்கிருசாரியன் அழைத்தவுடனே, மிருத சஞ்சீவிப் பெலத்தினாலே சமுத்திரத்தின் சேற்றிலே கலங்கிப்போன மாங்கிஷங்களெல்லாம் ரூபமாய் கசன் வந்தான். கடைசிலே காட்டுக்குள்ளே இந்தக் கசனைத்தான் அவர்கள் பிடித்துக் கொன்று பன்னிரெண்டுதரஞ் சங்கரித்தாலும் பிழைத்தான். இனி பிழையாததுபோலே பண்ணவேணுமென்று கசனைக் கொன்று அவன் சரீரத்தைச் சுட்டு சாம்பல் பண்ணி அந்தச் சூரணத்தைக் கொண்டுவந்து சுக்கிருசாரியன் கொள்ளுகிற பானத்திலே கலந்து அவன் அறியாததுபோலே கொடுத்துவிட்டுப் போனார்கள்.

ஆனால் சுக்கிருசாரியன் கசனைத் தேடி சஞ்சீவி முகாந்தரத்தினாலே அழைப்பிக்கும்போது, குருவினுடைய வயற்றுக்குள்ளே இருக்கிற கசன் முனீசுரன் மெள்ளவே இப்படியென்றான்: வாரீர் குருவையனே வுற்கெற்பத்துக்குச் சீஷனாயிருக்கிறேன்; எப்படியாகிலும் என்னை இரட்சிக்க வேணுமென்று கெற்பத்துக்குள்ளே யிருக்கிற கசன் விண்ணப்பம் பண்ணினதினாலே, சுக்கிருசாரியன் சஞ்சீவி முகாந்திரயாக பிரத்தியிலே வரப்பண்ணி சஞ்சீவியைக் கொடுத்தனுப்பினான்.

கசனோவென்றால், சொற்கத்துக்குப் போய் சாம்பலாய்ப்போன தேவர்களுடைய அடையாளத்தைக் காணாமல் ஆயிரம் வருஷம் இலயமாய்ப்போன தேவர்களுடைய சாம்பல்மேலே சஞ்சீவியினுடைய சில பொடியைத் தெளித்தவுடனே, ஆயிரம் வருஷத்துக்கு முன்னே செத்துப்போன தேவர்களெல்லாரும் அந்தச் சஞ்சீவியினுடைய பலத்தினாலே யெழுந்திருந்தார்கள். இந்தப் பிரசித்தமான கதையிலே தேவர்கள் சாகிறதுமல்லாமல் முழுதும் இலயமாய்ப் போனார்களென்று காண்பிக்கிறது. ஆனபடியினாலே தேவரீர் திருவுளம்பற்றினாப்போலே, இலயமாய்ப் போகாதபடிக்குப் பிலனில்லாதவர்கள் அநாதியாயிருக்கமாட்டார்களென்று பிரசித்தமாகும்.

---

## சர்வேசுரன் சர்வத்துக்கும் வல்லவர்.
## அ-ம் சல்லாபம்.

---

மறுநாள் ஆகாயத்திலே கருப்புள்ள மேகங்களெங்கும் பாவியிருக்கிறதினாலே, சூரியன் காண்பியாமல் மந்தாரமாயிருக்கிறதைக்கண்டு ஒரு பிரகாரமாய் எல்லாருந் துக்கமாயிருந்தார்கள். அத்தருவாயிலே குருசுவாமியவர்கள் திருவுளம்பற்றினதாவது: சர்வ லோகத்துக்குஞ் சந்தோஷமும் அலங்காரமுமாயிருக்கிற சூரியனானது காண்பியாத நாளையிலே எல்லாருஞ் சலித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஞானச் சூரியனாகிற பராபர வஸ்துவானவரை அறியாதவர்கள் இந்தப் பூலோகத்திலே எப்படிச் சந்தோஷமாய் இருப்பார்களென்று அருளிச்செய்தவுடனே, ஒரு உபதேசி விண்ணப்பம பண்ணினதாவது:

ஒரு நாளையிலே சூரியனைக் காணாததினாலே, எங்களுக்குத் துக்கம் வந்ததானால் பூர்வ காலத்திலே உலகத்தார் சொல்லுகிறாப் போலே ஆயிரம் வருஷஞ் சூரியனுதையம் பண்ணாமலிருந்ததினாலே அந்தக் காலங்களிலே பயங்கரமான இருட்டுக்குள்ளே இருந்த மனுஷர் அளவில்லாத கஸ்தியை அனுபவித்தார்களென்று சந்தேகமில்லை. அதெப்படியென்றால், துரோபதையானவள் பஞ்ச இராசாக்களோடே கலியாணம் பண்ணுகிறதற்கு முன்னே பொல்லாதவனோடே விவாகம் பண்ணி அவன் சொன்னாப்போலே கேட்டு அவனுக்குக் கீழ்ப்படிந்து வெகு தருமங்களைச் செய்தாளாம். ஒரு நாளையிலே வியாதிக்காரனாயிருக்கிற தன்னுடைய புருஷனை யெடுத்துக் கொண்டு தேவதாசி வீட்டுக்குப் போகிறதற்கு இராத்திரி காலத்திலே சுமந்திருக்கிறபோது, கழுவிலே தபசுபண்ணுகிற ரிஷியினுடைய பாதத்தைத் தொட்டதிலே தபசு பண்ணுகிறவனுக்கு மகா கஸ்தி உண்டாச்சுதாம். இப்படிப்பட்ட கஸ்தி நிமித்தமாக சூரியனுதையம் பண்ணுகிறதுக்கு முன்னே தன்னைத் தொட்டவள் சாகக் கடவதென்று சொன்னானாம்.

இந்த வார்த்தையைக் கேட்டதுக்கு துரோபதையானவள் சூரியனானது உதையம்பண்ண வேண்டாமென்று சாபமிட்டாளாம். இப்படிப்பட்ட சாபத்தினுடைய பெலத்தினாலே ஆயிரம் வருஷஞ் சூரியன் உதையம்பண்ணாமலிருந்தது. அந்தக்காலத்தில் இருந்த மனுஷர் தேவேந்திரனையும் முப்பத்தி முக்கோடி தேவர்களையுஞ் சூரியனுதையமாகிறதுக்கு மன்றாடினதினாலே, இப்படிப்பட்ட தேவர்கள் என்ன உபாய தந்திரம் பண்ணினாலும் அவர்களாலே ஆகாதேபோச்சுது. ஆனபடியினாலே இந்தத் தேவர்களும் மற்றுமுண்டான தேவர்களும் பிர்மாவோடே கூடியிந்தக் காரியத்திலே வியர்த்தமாய் ஆலோசனை பண்ணினதுக்குப் பிற்பாடு இந்தக் காரியத்திலே தங்களுக்குப் பெலனில்லையென்று கண்டு எல்லாருந் துரோபதையின் அண்டைக்கு வந்து சூரியன் உதையம்பண்ணத்தக்கதாக உத்தாரங்கொடுக்க மன்றாடினார்கள்.

இந்த அபத்தமான கதையை வெவ்வேறே விதமாக அனேகம் பேர்கள் சொன்னாலும், உலோகத்தாருடைய வேதப் புராணங்களிலே பழகினவனான பிராமணனானவன் சொன்னதின்படியே நான்

சொன்னேன். ஆனால் எந்தப் பிரகாரமாக முன் சொல்லப்பட்டதைச் சொன்னாலுஞ் சூரியன் உதையம் பண்ணுகிறதுக்குச் சகலமான தேவர்களுக்கும் பிலனில்லாமற்போனதென்று எல்லாருஞ் சொல்லுகிறதுந் தவிர சேது மகா புராணத்திலே எழுதியிருக்கிறதென்றான்.

அத்தருவாயிலே குருசுவாமி அவர்களிருந்து அருளிச்செய்ததாவது: இத்தனை பிலக்குறைச்சல் கொண்டிருக்கிற தேவர்களை உலோகத்தார் வணங்கிறதெப்படி? மெய்யான தேவத்துவத்தைக் கொண்டிருக்கிறவருக்குக் கூடாத காரியமில்லையென்று பிரசித்தமாகும். இப்படிப்பட்ட மட்டில்லாத பிலத்தை வருணிக்க வாய்ச்சாலகரான சாஸ்திரிகள் எல்லாருங் கூடினாலும் நன்றாய் வெளிப்படுத்தமாட்டார்களானால் பராபர வஸ்துவினிடத்திலே விளங்கிற அளவறுக்கப்படாத வலுமையை நீங்களெவ்வளவாகிலும் கண்டுபிடிக்கிறதற்குக் கடவுளான சர்வேசுரனானவர் உண்டாக்கின வஸ்துக்களிலேயும் உண்டாக்கலான பொருட்களிலேயும் மிகவுங் [illegible]ண பிக்கிற பிலத்தை நம்மோடே கூட பராமரியுங்கள்.

ஆனால் பராபர வஸ்துவினுடைய அளவில்லாத சத்துவத்தை எவ்வளவாகிலும் கண்டுபிடிக்கிறதற்கு உலகத்தினுடைய [illegible]லங்காரத்தையும் ஒழுங்கையும் பரிட்சிக்கக்கடவீர்களாக. ஆனபடி[illegible]றைலே கண்களைத் திறந்து பரமண்டலத்திலேயும் பூமண்டலத்திலேயும் உண்டான எண்ணிக்கைக்குள்ளடங்காத வஸ்துக்களுடைய சிங்காரத்தையும் வரிசையையும் உற்றுப் பராமரித்து அதுகளை உண்டாக்கினவராயிருக்கிற ஆண்டவர் மட்டில்லாத சத்துவத்தைக் கொண்டிருக்கிறாரென்று பிரசித்தமாய்க் காண்பிக்குமானால் இப்படிப்பட்ட உலகத்தினலங்காரத்தையும் ஒழுங்கையும் இரண்டாஞ் சல்லாபத்தைக்கொண்டு விஸ்தீரணமாய் உங்களுக்கு வசனித்ததினாலே, இம்மாத்திரஞ் சொல்லிக்காட்டினதுபோதும்.

இதுக்கப்பால் அறியவேண்டியதாவது: ஒன்றுமில்லாமலிருக்கையிலே, அளவறுக்கப்படாத பிலத்தைக்கொண்டிருக்கிற பராபர வஸ்துவானவர் உலகமாகட்டென்கிற வார்த்தை திருவுளம்பற்றினவுடனே உலகமெல்லாம் உண்டாயிற்று. இந்தப் பூலோகத்திலுண்டான இராசாக்களும் பிரபுக்களுஞ் சாமார்த்தியமுள்ள கெட்டி-

க்காரரெல்லாருங்கூடி ஆலோசனை பண்ணி ஒரு புல்லு முத லாய் உண்டாக்கமாட்டார்கள். இதுவுந்தவிர ஆகாயத்திலே ஆதா ரமில்லாமல் ஒரு உண்டை நிற்கப்பண்ணமாட்டார்களானால், பராப ர வஸ்துவானவர் சந்திர சூரியன் கிரகங்களையும் நட்சத்திரங்களை யும் பிரத்திவி, அப்பு, தேயு, வாயு முதலான பூதியங்களையும் இந் தப் பூதியங்களிலுண்டான மட்டில்லாத வஸ்துக்களைப் படைத்த துந் தவிர சர்வலோகம் ஆதாரமில்லாமல் நிற்கப்பண்ணுகிறார். இதல்லாமல் இப்படிப்பட்ட உலகத்தை ஒரு வார்த்தைமாத்திரம் அருளிச்செய்கதினாலே, உண்டாக்கினாப்போலே ஒரு க்ஷணத்திலே நிர்மூலமாக்குகிறதற்கு வல்லவராயிருக்கிறார்.

மனுஷரோவென்றால், வஸ்துக்களுடைய வங்கிஷங்களைப் பண் ணுகிறதற்குப் பிலத்தைக்கொண்டிருந்தாலும் ஒன்றுமில்லாமலிரு ந்து ஒரு வஸ்து இருக்கச் செய்கிறதற்கு அவர்களுக்குத் தத்துவ மில்லை. பின்னையுஞ் சகலமான பொருட்களையும் தம்முடைய சித்த த்தின்படியே நடத்தத்தக்கதாக அளவில்லாத சத்துவத்தைக் கொ ண்டிருக்கிற பராபர வஸ்துவானவர் இன்னம் அதிகமாய் உலகங்க ளை உண்டாக்கிறதற்கும் அழிக்கிறதற்கும் நடத்துகிறதற்கும் பிலத் தைக் கொண்டிருக்கிறாரென்று சந்தேகமில்லை. ஆனபடியினாலே இப்போது சர்வேசுரனுக்குச் சித்தமுண்டானால், ஒரு க்ஷணத்திலே மேற்ற உலகத்தைச் சிஷ்டித்து இப்போதிருக்கிற உலகம் அதி லொரு மணல்போலிருக்கச்செய்யலாம்.

இந்தப் பிரகாரமாக முகிவில்லாத காலம் எண்ணிக்கைக்குள் ளடங்காத உலகங்களை உண்டாக்கினதற்குப் பிற்பாடு அதுகளெல் லாம் ஒரு மணலுக்குள்ளே அடக்கம் பண்ணுகிறதற்கு வல்லவரா யிருக்கிறார். இதன்றியே பராபர வஸ்துவானவர் தம்முடைய அளவில்லாத பிலத்தினிமித்தமாக எந்தெந்தக் காலத்திலானாலும் எந்தெந்த ஸ்தலத்திலென்கிலும் தம்முடைய சித்தத்தின்படியே எண்ணிக்கைக்குள்ளடங்காத புத்தியுள்ள வஸ்துக்களையும் புத்தி யில்லாத வஸ்துக்களையும் உண்டாக்கிறபோது, இப்படிப்பட்ட வ ஸ்துகளுக்குள்ளே அந்நியவொந்நியமாய் ஒரு பொருள் நன்மைக ளிலே அதிசயித்திருக்கப்பண்ணலாம். கடைசியிலே இதெல்லாம் படைத்ததற்குப் பிற்பாடு மறுபடியில்லாதபடிக்குச் செய்கிறதுக்கு வல்லவராயிருக்கிறார்.

இதெல்லாம் இப்படியிருக்கிறபோது, உலகத்தார் வணங்கிற தேவர்களிடத்திலே பிலவீனத்தையுங் குறைச்சலையும் அடிக்கடி காணலாமென்கிறதினாலே, அவர்கள் தேவர்களாயிருக்கமாட்டார்களென்று அங்கீகரிக்கக்கடவோம். அதெப்படியென்றால், விஷ்டுணு பரசுராம அவதாரத்திலே சமுத்திரங் காத்தியென்கிற பருவதமட்டாக அலைமோதுகிறதினாலே இப்படிப்பட்ட கடலைத் தள்ளுகிறதற்குப் பிலனில்லாததினாலே, பூசையாகச் சடங்குகளைப் பண்ணினானென்றும் யாகம்பண்ணினவுடனே நெருப்புக்குழியிலே ஒரு சுளகு புறப்பட்டதென்றும் இந்தச் சுளகினாலே பரசுராமனென்கிறபோது திருப்பாற்கடல் பின்னுக்குப் போச்சுதென்றும் மூன்றாவது, அந்தச் சுளகினாலே யெறியத்தக்கதாக பரசுராமனென்கிறபோது கடலுக்குத் தேவனான வருணன் கரையான் அவதாரமாக வந்து சுளகைத் திண்ணவேண்டாமென்று காட்டிலே கூட்டிக்கொண்டுபோய் விட்டான்.

அப்போது ராமனும் இலட்சுமணனும் வாசமாய்க் காட்டிலேயிருக்கும்போது, சூப்புநங்கை இராமன் கிட்டவந்து தன்னோடே கலியாணம்பண்ண அலட்டினதினாலே அவன் மனதொப்பாதன்றியே கரனென்கிறவனோடேயும் தசனென்கிறவனோடேயும் முறைப்பட்டதினாலே, அவர்கள் அனேகஞ் சனங்களோடே வந்து அம்புகளினாலே சூரியனை மறையப்பண்ணினார்களென்றும் இராமனுடைய வில்லைக் காமனென்கிறவன் தனது அம்புகளினாலே முறித்துப்போட்டார்களென்றும் இராமன் ஆயுதமில்லாமல் மிகவுங் கஸ்திப்பட்டுப் பயந்து நடுங்கியிருக்கிற சமையத்திலே ஆகாசிய ரிஷி அற்புதமான ஆயுதங்களைக் கொடுத்தானும்.

இராமனுக்குப் பிலமுண்டானால், இராக்ஷதர் அவனுடைய வில்லை முறித்துப்போடுவார்களோ? அவர்களுக்குப் பயந்திருப்பானோ? அவனுடைய இக்கட்டிலே இரட்சிக்க ஆயுதங்களைக் கொடுக்க வேணுமோ? இதன்றியே இராமன் தன்னுடைய சேனைகளோடே இலங்கைக்குப் போகிறதற்கு அவகாசமில்லாததினாலே, மிகவும் கஸ்திப்பட்டு ஒரு குதிரை முதலாய் இல்லாததினாலே அனுமானுடைய தோளிலே ஏறினானென்று இராக்ஷதனான கும்பகரணனைக் கண்டு பயந்து நடுங்கியிருந்தானென்றும் இராமனுக்கும் இலட்சுமணனுக்கும் மோசம் வராதபடிக்குச் சஞ்சீவியென்கிற மருந்தை அவ

ர்களுடைய நடுவிலே தடவினுனென்றும் இராவணனோடே யுத்தம் பண்ணும்போது இராவணனைச் செயிக்கமாட்டாமல் சபித்துக்கொண்டிருக்கிறபோது சொற்கத்திலே யுண்டான தேவர்களும் ரிஷிகளும் ஆலோசனைபண்ணி ஆகாசிய ரிஷியை ஸ்தானுபதியாக இராமன்கிட்ட அனுப்பிச் சூரியனை வணங்கச் சொல்லிவித்து அம்பை எய்கிற வகையைப் படிப்பித்தார்களாம்.

இந்தப் பிரகாரமாக இராவணன் கட்டாயத்தின்மேலே இராமனுக்கு நித்திரையை வருத்திவிக்கும்போது, இராமன் எல்லாரையும் பார்த்து அவசியமாய் நித்திரைபோக வேணுமென்கிற சமையத்திலே விபூஷணனிருந்து: சுவாமி, தேவரீர் நித்திரை போகிறது புத்தியல்ல; இராவணன் இற்றைவரைக்கும் வராதபோதே பாதாளத்தில் இறங்கி யாதொரு மாய்கையை உபாயமாக வரத்தக்கதாகயிருக்கிறுனுக்கும். வாயுபோலேயும் நெருப்புப்போலேயும் வேறே ரூபமாக வந்தால், நாமிருக்கிறதெப்படி? தேவரீர் நித்திரை போனுல் உம்மை எடுத்துப் பாதாளத்திலே கொண்டுபோவானென்று சொல்லுகையில், இராமனிருந்து என்னைக் கொண்டுபோனுலுங் கொன்றுபோட்டாலும் நித்திரை பண்ணுகிறதைவிட்டிருக்கக் கூடாதென்றுனும்.

அப்போது அனுமான் மடியிலே சாய்ந்துக்கொண்டு நித்திரை போகிறபோது, இராவணன் மாயமாக வந்து இராமனையும் இலட்சுமணனையும் புகையாகப்பண்ணி அவர்களை யெடுத்துக்கொண்டுபோய்ப் பத்திரகாளிக்குப் பலியாக வெட்டத்தக்கதாக உத்தியோகமாயிருக்கும்போது, இந்தப் பலிக்கு வேண்டியிருக்கிற உப்புத் தண்ணீரைக் கும்பச்சி கொண்டுவருகிறபோது, அனுமான் விழித்திருந்து இராமனையும் இலட்சுமணனையும் காணுததினுலே பாதாளத்திலிறங்கி நடந்த செய்தியைக் கும்பச்சி சொல்லக்கேட்டு அவளுடைய உதவியைக்கொண்டு குடத்திலே இருக்கிற தண்ணீர்க்குள்ளே இரகசியமாய் ஒழிந்து இராமனும் இலட்சுமணனும் சாகாதபடிக்கு இவர்களை இரட்சித்தானும்.

இந்த அபத்தமான கதையைக் கேட்கிறவர்கள் இராமனுக்கு அளவில்லாத பெலம் உண்டென்று நித்திரையிலேயானுலும் விசாரிப்பார்களோ? மனதின்படியே இராமனுக்கு நித்திரை வருத்திவிக்கிறவன் அவனைப் புகையாக்கி நரகத்துக்குக் கொண்டுபோனவன்

இராமனைப்பார்க்கப் பிலத்தைக் கொண்டிருக்கிறனென்று சந்தேகமில்லை. இதன்றியே இராக்ஷதர் இராமன் மேலே சேவிக்கிற அநேகம்பேர்களைக் கொன்றுபோட்டதற்குப் பிற்பாடு செத்தவர்களை எழுப்புகிறதற்குப் பிலனில்லாததினலே, இதற்காக பிரமாவை மன்றாடினனும்.

கடைசியிலே இராமனும் இலட்சுமணனும் வரதனும் குசலவர்களோடே யுத்தம் பண்ணும்போது எல்லாரும் வெட்டுண்டுபோனுர்கள். இந்தப் பயங்கரமான செய்தியைக் கேட்ட பேர்போன ரிஷியான வால்மீகர் தன்னுடைய கமண்டலத்திலே வைத்திருக்கிற ஆச்சரியமான தீர்த்தத்தினுடைய பிலத்தினலே யுத்தத்தினுடைய சமர்க்களத்திலே வந்து யானையினுடைய கண்டங்களுங் குதிரைகளுடைய பிணங்களும் இராக்ஷதருடைய சரீரங்களும் கபியனுடைய தேகங்களும் முறிந்து விழுந்ததாயிருக்கிற தேர்களும் குறைந்ததாகயிருக்கிற கொண்டைகள் கண்டங்கண்டமாய் விழுந்துகிடக்கிற நானுவிதமான பத்திசாயுங்களும் மலைகள்போலே இராசியாயிருந்த தலைகளும் வெகு இரற்றினதிகளுமாய் இப்படிப்பட்ட யுத்தம பூமியிலே பார்த்ததற்குப் பிற்பாடு விஷ்டுணு இராமனகப் பிறந்து பிரேதத்தைக் கண்டு மகா கஸ்திப்பட்டு அதின்மேலே தீர்த்தம் புரோசித்துத் திரும்ப எழுந்திருக்கப்பண்ணினன்.

இப்படிப்பட்ட விசேஷங்களைப் பத்தும் பத்தாய் விசாரித்தால், இராமனுக்குப் பரிச்சேதமாய்ப் பிலனில்லையென்று பிரசித்தமாய்க் காண்பிக்கிறது. அவ்வண்ணமே வெட்டுண்டுபோகாதபடிக்கு சத்துவமில்லாதேபோனல், அளவில்லாத கர்த்தத்துவமுண்டென்று சொல்லுகிறதெப்படி? இதெல்லாமிப்படியிருக்கையிலே, பெருமாள் இராமனகப் பிறந்து இத்தனை பிலவீனனயிருந்தால், மற்றுண்டான தேவர்களுக்குப் பரிச்சேதமாய்ப் பிலனில்லையென்று ஒப்பிவிக்கலாம். அதெப்படியென்றால், இராமன் சீதாதேவியோடே வனத்துக்குப் போய்த் தவசு பண்ணும்போது, சீதாதேவி செல்லமாடுகிற சமயத்திலே ஒரு காக்கை வந்து உபத்திரவம் பண்ணவேணுமென்று தன் கால்களினலே உதிரம் பிறப்படச் சீதையினுடைய தனங்களின்மேலே காயப்படுத்தி உபத்திரவம் பண்ணுகையிலே இராமச்சேந்திரன் செபம் பண்ணிக்கொண்டிருக்கிற சமயத்திலே

வில்லம்பு வாய்க்குகிறதற்குக் கூடாமல் தன் கையிலே இருந்த தெ
ற்பபுல்லை மந்திரித்து அந்த காக்கைமேலே போட்டான்.

அது காக்கையைப் பின்றொடர்ந்து துரத்துகையில் பிர்மதே
வனண்டைக்கு வந்து தன்னுடைய விருத்தாந்தத்தைச் சொல்லி
என்னைக் காக்கவேணுமென்று மறையப்போய்க் கூறுகையில், அப்
போது பிர்மா: என் கையினாலாகாது, விஷ்டுணுவண்டைக்குப்
போவென்று சொல்ல, அந்தக் காக்கை விஷ்டுணுவண்டைக்குப்போ
ய் அபையமென்று சொல்லுகையில் விஷ்டுணு: என் கையினாலே
ஆகாது ஈசுரனண்டைக்குப் போவென்று அனுப்பினனென்று இரா
மாயணத்திலே சொல்லியிருக்கிறது.

இந்த அபத்தமான கதைகளை உலோகத்தார் கொண்டாடுகிற
போது, தங்களுடைய புத்திக் குறைச்சலைக் காண்பிக்கிறார்களொ
ழிய மற்றப்படியல்ல. அதேதென்றால் ஒரு காக்கையை முதலாய்
உடனே கொன்றுபோடுகிறதற்கு இராமனுக்குப் பெலனில்லாதே
போச்சுது. ஒரு காக்கையை நிர்மூலமாக்குகிறதற்குத் தெற்பப்பு
ல்லை மந்திரிக்கவேணுமோ? பின்னை இத்தனை பலவீனமுள்ள மந்
திரிக்கப்பட்ட புல்லு நிமித்தமாக காக்கையை யிரட்சிக்கிறதற்கு
பிர்மாவுக்கும் விஷ்டுணுவுக்கும் ருத்திரனுக்கும் பெலனில்லாதே
போனால், பெலக்குறைச்சலுள்ள மனுஷருக்கும் வற்தமான தேவர்க
ள் மகாப் பெலவீனராயிருக்கிறார்களென்று சந்தேகமில்லையென்றார்.

இந்தப் பிரசங்கத்தைக் கேட்டவர்களுக்குள்ளே ஒருத்தனிரு
ந்து விண்ணப்பம் பண்ணினதாவது: சகலமான வேதப்புராணங்க
ளிலே மும்மூர்த்திகளுக்கு அத்தியந்த பெலமுண்டென்று சொல்லி
யிருக்கிறது. அதெப்படியென்றால், பிர்மாவுக்குச் சகலமான வஸ்
துக்களை உண்டாக்குகிறதற்குப் பெலமுண்டென்றும் சகலமான
வஸ்துக்களையும் இரட்சிக்கிறதற்கு விஷ்டுணுவுக்கு தத்துவமுண்டெ
ன்றும் சகலமான வஸ்துக்களைச் சங்கரிக்கிறதற்கு ருத்திரனுக்குச்
சத்துவமுண்டென்றும் எல்லாருஞ் சொல்லுகிறார்கள். இதைப்
பார்க்க அளவில்லாத பெலம் உண்டோ? என்று விண்ணப்ப
ம் பண்ணுகையில்,

குருசுவாமியவர்களிருந்து: நீங்கள் சொன்ன விசேஷத்தினாலே
தானே பிர்மா, விஷ்டுணு, ருத்திரனுக்குச் சத்துவப் பெலக்குறைச்ச

லாயிருக்கிறார்களென்று பிரத்தியட்சமாய் ஒப்பிவிப்போம். அதெப்படியென்றால், பிர்மா ஒரு உலோகத்தை யுண்டாக்கினரென்று விசாரித்துக்கொள்ளுங்கள். இப்படிப்பட்ட உலோகத்தை இரட்சிக்கிறதற்கு அவன் கையிலே ஆகாமல் விஷ்டுணுவினுடைய பெலன் வேணும். பின்னையும் இப்படிப்பட்ட உலோகத்தை நிர்மூலமாக்குகிறதற்கு ருத்திரனுக்கு மனதுண்டானால், பிர்மாவினுடைய சத்துவமும் விஷ்டுணுவினுடைய சத்துவமும் ஏதுக்குதவும். இதன்றியே உலகத்தை உண்டாக்குகிறதற்கும் இரட்சிக்கிறதற்கும் ருத்திரனுக்கு மனதுண்டானல், அவனுடைய கையிலேயாகாது. ஆனபடியினாலே அவனுக்குப் பெலக்குறைச்சலுண்டாயிருக்கிறபடியினாலே, அவர்களுக்கு அளவில்லாத சத்துவமில்லாமல் சிஷ்டிக்க, இரெட்சிக்க, சங்கரிக்கப் பெலத்தை ஒருமிக்கக் கொண்டிருக்கிற பராபரவஸ்துமாத்திரம் அளவில்லாத பெலத்தைக் கொண்டிருக்கிறாரென்றும் அவர் யேகதேவனாயிருக்கிறாரென்றும் சொல்லவேணுமொழிய மறப்படியல்லவென்றார்.

அத்தருவாயிலே உபதேசங் கேட்க வந்தவர்களுக்குள் ஒருத்தனிருந்து சந்தேகஞ் சொன்னதாவது: பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் இவர்கள் மூவருந் தேவனாயிருக்கக் கூடாதோவென்று சொல்ல குருசுவாமியவர்களிருந்து: பிர்மாவுக்கும் விஷ்டுணுவுக்கும் ருத்திரனுக்கும் உண்டான விரோதங்களையும் சண்டைகளையும் வற்மங்களையும் தர்க்கங்களையும் கர்த்தத்துவத்தின்பேரிலே ஆசைகளையும் அந்நியொன்னியமான காரியங்களையும் மருத்துவங்களையும் வேடங்களையும் பத்தும்பத்தாய் விசாரித்தால் பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் வெவ்வேறே பேர்களாயிருக்கிறார்களென்றுந் தங்களுக்குள்ளே மகா துவேஷமாயிருக்கிறார்களென்றும் பிரசித்தமாய்க் காண்பிக்கிறது.

இந்தப் பிரசங்கத்தைக் குருசுவாமியவர்கள் முகித்தவுடனே, உபதேசிகளுக்குள்ளேஒருத்தனிருந்து குருசுவாமியவர்களைப் பார்த்துச் சொன்னதாவது: தேவரீராலே பண்ணப்பட்ட பிரசங்கத்தினிமித்தமாக இரண்டு காரியங் கெட்டியாக மனதிலே தரிக்கிறது. அதின்முதலாவது: பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் தங்களுக்குள்ளே அன்னிய துவேஷமாயிருந்து சண்டை, வெட்டுக் குத்து நிமித்தமாக ஒரு பொருளாயிராமல் மூன்று விரோதமான பொருள்களாயிருக்கிறார்களென்று பிரசித்தமாய்க் காண்பிக்கிறது. இரண்டாவது

பிர்மாவானவன் தலை வெட்டுண்டுபோனதினாலேயும் விஷ்டுணு நெற்றியிலே குத்துப்பட்டதினாலேயும் ருத்திரன் பயந்து ஒளிந்துக்கொண்டதினாலேயும் மகாப் பெலக்குறைச்சலாயிருக்கிறார்களென்று சந்தேகமில்லை. ஆனால் தேவரீருடைய உத்தாரப்படியேஇன்னம் உலோகத்தாருடைய தேவர்களிடத்திலே பிரசித்தமாய்க் காண்பிக்கிற விசேஷமான சில பெலக்குறைச்சல் அடையாளங்களைச் சொல்லிக்காட்டுவேன்.

அதெப்படியென்றால், சொற்கத்திலேயிருக்கிற தேவர்களும் மனுஷராலே சபிக்கப்பட்டு இப்படிப்பட்ட சாபத்தைத் தள்ளமாட்டாமல் தங்களுக்கு அவமானமும் பொல்லாப்பும் வராதபடிக்கு முழுமனதோடே மனுஷரை மன்றாடினார்கள். அவ்வண்ணமே தேவேந்திரன் கெவுதமனுடைய ஸ்திரியோடே தாறுமாறாய்த் திரிந்ததினாலே இந்த ரிஷியினாலே தேவேந்திரன் சபிக்கப்பட்டுப் பெரியவர்களுடைய சமுகத்திலே சொல்லப்படாத ஆக்கினைப் பட்டதுமல்லாமல் இப்படிப்பட்ட அபராதங் குறையத்தக்கதாக தேவேந்திரன் கூடினமாத்திரம் கெவுதமனை மன்றாடினான்.

அந்தப்பிரகாரமாக சொற்கத்திலேயுண்டான பிரதான இரண்டு தேவர்கள் கன்னியாஸ்திரியான வேதமணியைக் கட்டாயமாய்ப் பிடிக்கத்தக்கதாக வரும்போது, அவளுடைய தகப்பனாராலே சபிக்கப்பட்டுப் பசாசுகளாய்ப்போனார்கள். ஆனால் மிகுந்த தாழ்ச்சியோடேயும் வணக்கத்தோடேயும் ரிஷியை வேண்டிக்கொண்டதினாலே அநேகம் வருஷத்துக்குப் பிறபாடு ஒரு விசேஷமான தீர்த்தத்தினாலே அந்தப் பசாசுத்தனம் போச்சுதாம்.

பிர்மா ஒரு தபோதனராலே சபிக்கப்பட்டு அவனுக்குத் தேவாலயமில்லையென்று அனேகம் உலோகசாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். இதன்றியே ருத்திரன் தபசு பண்ணின ரிஷிகளாலே சபிக்கப்பட்டுச் சந்நியாசிகள் முன்பாகச் சொல்லவொண்ணாத ஆக்கினை அவனுக்கு வந்ததாம். இந்தத் தேசத்தாரோவென்றால், அந்த நாள் துவக்கி லிங்கத்தை வணங்கத் துவக்கினார்களாம். இந்தப்பிரகாரமாக விஷ்டுணு அநேகம்விசை சபிக்கப்பட்டதினாலே, அவனுக்கு வெகு பொல்லாப்புகள் வந்திருந்தாலும் கிருஷ்ண அவதாரத்திலே விசேஷமாய் அவன்பேரிலே பலித்த சாபத்தை விஸ்திரணமாய் வெளிப்படுத்துவேன்.

அதெப்படியென்றால், கிருஷ்ணன் ஸ்திரீ மதுரபாதவெ ன்கிற ஊரிலேயிருந்து சந்தோஷமாகத் தன்னுடைய பெண்சாதி களோடே காலம் போக்கடிக்கும்போது அவர்களுக்குள்ளே ஒருத் தி வீட்டிலே தேவாசமென்கிற வேறு மகாரிஷி வரும்போது அவ ளும் அனேகம்பேர்களும் இந்த ரிஷியைச் சோதிக்கத்தக்கதாக அரி சி திட்டுகிற குந்தாணியைச் சீலையினாலே மூடிக்கொண்டு நாலு பெ ண்பிள்ளைகளும் சலித்திருக்குமாப்போலே இந்தக் குந்தாணியைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அத்தருவாயிலே அவள் ரிஷியைப் பார்த்துச் சொன்னதாவது: இந்தப்பிள்ளை பெறத்தக்கதாக வாதைப் படுகிற இந்தப் புண்ணியவதி பிள்ளை பெறுவாளோ, அல்லது செத் துப்போவாளோ, அல்லது ஆண்பிள்ளையோ, பெண்பிள்ளையோ, எ ந்தப்பிள்ளை பிறக்குமென்று கேட்டதற்கு அந்த ரிஷி: யிது அரிசிதி ட்டுகிற உரலல்லவோ ? அதினுடைய பிள்ளை ஒரு உலக்கையல்ல வோ? அந்த உலக்கையினாலே ஸ்திரிகிருஷ்ணனும் அவனுடைய பிள் ளைகளும் செத்துப்போவார்களென்று சாபித்துப்போட்டுப் போனா னும்.

இப்படிப்பட்ட வர்த்தமானத்தை கிருஷ்ணனானவன் கேட்கும் போது, மிகுந்த கஸ்தியோடே பிரலாபித்து: ஐயோ! நான் நிர்ப்பாக் கியன்; இந்தச் சாபத்தினிமித்தமாக நானும் என்னுடைய பிள்ளைக ளும் செத்துப்போகிறோம்; ஆனால் இந்தச் சாபத்துக்குக் கூடினமாத் திரம் தப்பிப்போகும்படிக்கு உபாயமெல்லாம் பண்ணவேணும்; அதெப்படியென்றால், இந்த உலக்கையைப் பொடியாக அரைக்கச் சொல்லி அந்தப் பொடிகளைச் சமுத்திரத்திலே போடக் கட்டளையி ட்டான். அலைகள் கரையிலே யிந்தப் பொடிகளை யொதுக்கின தினாலே, அதுகள் முள்ளுள்ள வீப்பல்லுகளாக முளைத்தது. அத்தருவாயிலே கிருஷ்ணனுடைய பதினாயிரத்து நூற்றெட்டு பி ள்ளைகளெல்லாம் வெறிகொண்டு சமுத்திரக்கரையிலே தங்களுக்கு ள்ளே சண்டைக்கு நின்று முள்ளுக்களினாலே பெறிகிறபோது, எல் லாரும் இறந்துபோனார்கள். பின்னையும் கிருஷ்ணன் காட்டுக்குப் போய் அரசமரத்தின்மேலே இருக்கிறபோது, முன்சொல்லப்பட்ட உலக்கையின் ஒரு துண்டாலே அம்பு பண்ணின வேடன் வந்து செம்மண்ணெறட்டியிருக்கிற கிருஷ்ணனுடைய கால்களை சாவலென் றெண்ணிக்கொண்டு அம்பினாலெய்ததினாலே, அந்த அம்பு கிருஷ்ண னுடைய காலிலே பட்டதினாலே கிருஷ்ணன் செத்துப்போனானும்.

இந்த அபத்தமான கதையினலேயும் முன் சொல்லப்பட்ட பாவங்களினலேயும் சொற்கத்திலேயிருக்கிற தேவர்களுக்கும் மும் மூர்த்திகளுக்கும் பரிச்சேதமாய்ப் பெலனில்லையென்று பிரசித்தமா ய்க்காண்பிக்கிறது. அவ்வண்ணமே மனுஷர் தேவர்களைச் சாபித்தத ற்குப்பிற்பாடு இப்படிப்பட்ட சாபத்தினிமித்தமாகத் தேவர்கள் ச லித்துக் கொண்டு பிரலாபித்துத் தங்கள்பேரிலே இந்தச் சாபம் பலியாதபடிக்கு உபாயதந்திரமெல்லாம் பண்ணினலும், அவர்கள் மேலே கட்டாயமாகப் பலிக்கச்செய்தே தேவர்களாயிராமல் மனுஷ ருக்கு வசமாயிருக்கிறுர்களென்று பிரசித்தமாகும். கடைசியிலே அறியவேண்டியதாவது: முன்சொல்லப்பட்ட உலக்கையை எல் லாருங்கூடி கிருஷ்ணன் கட்டளையிட்டதின்படியே அரத்தினலே இராவிப் பொடியாகத்தக்கதாகப் பிரயாசப்பட்டாலும் அவ்வுலக் கையினுடைய ஒரு சின்னத்துண்டை யிராவக்கூடாமேபோச்சுது. ஆனபடியினலே கிருஷ்ணனனவன் தன் கையிலேயானதெல்லாம் வியர்த்தமாய்ப் பார்த்தற்குப் பிற்பாடு கடலிலே தூரப் போடச் சொன்னலும் திரும்பக் கரையிலே வந்ததாம். இதெல்லாம் இப்படி யிருக்கையிலே, உலக்கையினுடைய சின்னத் துண்டை முதலாய் இராவமாட்டாத கிருஷ்ணனுக்கு அளவில்லாத பெலனேது ? அவனு க்குத் தேவத்துவம் எப்படிச் செல்லும் ?

ஆனல் இப்படிப்பட்ட கிருஷ்ணனுடைய மரணத்தைச் சில பேர்கள் வேறேவிதமாகச் சொல்லுகிறுர்களென்று அறிந்திருக்கி ேறோம். அதெப்படியென்றல், கிருஷ்ணனுடைய காலிலே இரத்தின த்தைப்பார்க்கப் பிரகாசிக்கிற ஒரு புஷ்பமிருந்ததாம். இந்தப் புஷ்ப த்திலே கிருஷ்ணனுடைய உயிர் முழுதும் அடங்கியிருக்கிறதினலே, மற்றுண்டான அவையவங்களிலே கிருஷ்ணனுக்குக் காயப்பட்டா லும் வெட்டுண்டு குத்துப்பட்டாலும் சாகமாட்டானும். இதெல்லாம் இப்படியிருக்கையிலே, கிருஷ்ணனனவன் தன்னை வெட்டத்தக்கதா கச் சத்துருக்கள் உபாயம் பண்ணுகிறுர்களென்று அறிந்து பட்ட ணங்களிலேயும் பட்டிக்காடுகளிலேயும் இருக்கிறதற்கு மிகவும் ப யந்து ஆற்றுக்குள்ளே ஒளிந்துகொண்டிருக்கிற சமயத்திலே மீன் பிடிக்கிறவன் வந்து கிருஷ்ணனுடைய காலிலே பிரகாசிக்கிற புஷ்ப த்தைக்கண்டு பெரிய மச்சத்தினுடைய ஒளிவுள்ள சிலாம்பென்று

விசாரித்து அம்பினலே எய்து கிருஷ்ணனைக் கொன்றுபோட்டானும்.

கிருஷ்ணன் மெய்யான தேவனானல் சத்துருக்களுக்குப் பயந்திருக்கிறதென்ன? பூமியிலே இருக்கிறதற்கு சவகாசமில்லாமலிருக்கிறதென்ன? ஆற்றுக்குள்ளே ஒளிந்திருக்கிறதென்ன? மீன் பிடிக்கிறவனுடைய அம்புக்குத் தப்பிப் போகாமலிருக்கிறதென்ன? எந்த விதமாக இந்தக் கிருஷ்ணனுடைய சாவைச் சொன்னாலும் அவனிடத்திலே மிகவும் பிலக்குறைச்சல் உண்டாயிருக்கிறதென்று பிரசித்தமாகும்.

ஆனல் உலோகத்தார் சொல்லுகிற விசேஷத்திலே இன்னம் பெருமாளுடைய பெலவீனம் அதிகமாய்க் காண்பிக்கிறதென்று சந்தேகமில்லை. அதெப்படியென்றால், பில்லிசூனியக்காரன் சீரங்கத்திலே வந்து பில்லிசூனிய மந்திரங்களின் பிலத்தினலே பிரதான விக்கிரகத்திலே யிருக்கிற தேவத்துவத்தினுடைய பாதியைத் தன்னுடைய கும்பத்திலே வைத்து அதற்குப் பிற்பாடு இரக்கம் வந்ததினலே, திரும்ப உத்தரித்தானும். அவ்வண்ணமே பில்லிசூனியக்காரன் மந்திரங்களின்படியே பெருமாளைக் கட்டாயத்தின்பேரிலே கீழ்ப்படுத்தியிருந்தால், பெருமாளுக்குப் பெலனேதென்று சொன்னன். இந்தக் கதைகளை உபதேசியானவன் சொன்னவுடனே, அவனும் அவனேடேகூட இருக்கிறவர்களும் சுவாமியவர்களுடைய ஆசிர்வாதத்தை வாங்கிக்கொண்டு எல்லாரும் பிறப்பட்டுப்போனர்கள்.

## பராபர வஸ்துவின் அளவில்லாத ஞானம்.

## கூ-ம் சல்லாபம்.

ஞான உபதேசங் கேட்கத்தக்கதாகக் குறித்த ஸ்தலத்திலே யெல்லாரும் வந்து குருசுவாமியவர்கள் எழுந்தருளிவருகிறதற்கு முன்னே உபதேசிகளுக்கும் உபதேசங் கேட்கவந்தவர்களுக்கும் கனமான தர்க்கம் உண்டாயிற்று. அனபடியினலே குருசுவாமியவர்கள் இவர்களுடைய சத்தத்தைக் கேட்டவுடனே, எந்தக் காரியத்தின்பேரிலே நீங்கள் தர்க்கம் பண்ணுகிறீர்களென்று கேட்க உபதேசி விண்ணப்பம் பண்ணினதாவது:

இந்தச் சனங்கள் ஆறு சாஸ்திரமுண்டென்று சாதிக்கிறார்கள். நானோவென்றால் தேவரீர் பண்ணின பிரசங்கங்களைக் கேட்டதினாலே, இந்தச் சீமையிலே விளங்கிற சாஸ்திரங்களல்லாமல் அனேகம் வேறே சாஸ்திரங்களுண்டென்று சொன்னேன். அத்தறுவாயிலே குருசுவாமியவர்கள் திருவுளம்பற்றினதாவது: இந்தச் சீமையில் உண்டான சாஸ்திரிகளுடைய மனது நோகப்பண்ண நமக்குத் தாற்பரியமில்லாதிருந்தாலுஞ், சுவாபமாயுண்டானதை மாத்திரஞ் சொல்லிக்காட்டுவோம். அதெப்படியென்றால், இந்தச் சீமையிலே ஒரு மெய்யான சாஸ்திரம் உண்டோ, இல்லையோவென்று நமக்குச் சந்தேகமுண்டாயிருக்கிறதுந் தவிர சாஸ்திரமென்கிற வார்த்தைக்குச் சுபாவமான அர்த்தத்தை எண்ணிக்கைக்குள்ளடங்காத மனுஷரைக் கேட்டாலும், இதைப் பனிரெண்டு வருஷத்துக்குள்ளே ஒருத்தனாலும் நம்முடைய புத்திக்குப் பொருந்தியிருக்கிற பிறத்தியுத்தாரத்தைச் சொல்லக் காணோம். ஆனால் சாஸ்திரமென்கிற வார்த்தைக்கு அபிப்பிராயத்தையும் அர்த்தத்தையும் அறியாதவர்கள்—ஆறு சாஸ்திரத்தை எப்படி அளவறுத்துக்கொண்டிருப்பார்கள்.

இதல்லாமல் இந்தத் தேசத்தார் வித்துவாங்கிஷரையுங் கிரந்தப் பாஷை அறிந்திருக்கிறவர்களையுங் கனமான சாஸ்திரிகளைப் போலே கொண்டாடுகிறார்களென்று நாம் அனேகம் விசை கேட்டதினாலே, இந்தத் தேசத்தாருக்குப் பரிச்சேதமாய் சாஸ்திரத்தினுடைய அர்த்த முதலாய்த் தெரியாதென்று எண்ணிக்கொண்டிருக்கிறோம். அவ்வண்ணமே சில கிரந்த வார்த்தைகளையும் அனேகம் பொய்களோடே கூடியிருக்கிற சில சுலோபங்களையுமறிகிறதுக்கும் மெய்யான சாஸ்திரத்துக்கும் அளவில்லாத தூரமுண்டென்று பிரசித்தமாகும். அதெப்படியென்றால் கவிசுரர் சில இலட்சண வார்த்தைகளினாலே வாருணித்ததினாலேயும் ஒன்றில் சில கிரந்த வார்த்தைகளினாலே வெளிப்படுத்தினதினாலேயும் பிரயோசனமென்ன?

ஒரு செம்புப்பணத்தின்பேரிலே யொரு சுலோபத்தைச் சொன்னதினாலேயானாலும் நாலைந்து கிரந்த வார்த்தை சொன்னதினாலேயாகிலும் அந்தச் செம்புப்பணம் நல்ல பணமாய்ப்போகுமோ? இதன்றியே யாதொருத்தன் நூறு விராகன் கடன்வாங்கி முறிகொடுத்

ததுக்குப் பிற்பாடு நாலைந்து கவி சொன்னதினாலேயுங் கிரந்தப் பர் ஷையிலே விஸ்தீரணமான பிரசங்கத்தைப் பண்ணினதினாலேயுந் தன்னுடைய கடனைத் தீர்த்துப் போட்டானோ? தான் கொடுத்த முறிப்பெலத்தை முறித்துப் போட்டனோ? கம்பன் பாடின விருத்தங்களை எல்லாம் சொன்னாலும் நூறுவகைப் பாஷையிலே பேசினாலும் நியாய நீதியின்படியே தீர்வை சொல்லுகிறவர்கள் அவனுக்கு நியாயம் உண்டென்று சொல்லுவார்களோ? இல்லையே.

ஆனால் யாதொருத்தன் சாஸ்திரத்தின்படியே பேசினால், தப்பில்லாத கிரமத்தோடே பூரண நியாயங்களினாலே நிறைந்திருக்கிற மூன்று வசனங்களைச் சொன்னதினாலே இந்தச் சாஸ்திரத்தினுடைய பிலத்தினாலே புத்திக்கு முதலாய்க் கட்டாயம் பண்ணி ஆக்ஷேபிக்கப்படாத வசனங்களினாலே தங்களுடைய அபிப்பிராயத்தை ஒப்பிவிப்பார்களென்று குருசுவாமி அவர்கள் சொல்லுகையில்,

உபதேசம் கேட்கிறவர்களுக்குள் ஒருத்தன் இருந்து விண்ணப்பம் பண்ணினதாவது: புரோகிதரும் பஞ்சாங்கக் காரரும் இந்தப் பூலோகத்திலே வரப்போகிற காரியத்தைச் சொல்லுகிறதுந் தவிர சோதி மண்டலங்களில் உண்டான சந்திர சூரியக் கிராணங்கள் சம்பவிக்கிறதுக்குமுன்னே சொல்லுகிறார்களென்று அநுபவசித்தியினாலே கண்டுபிடிக்கிறோம். இலௌகீக சாஸ்திரங்களுக்குள்ளே இதுக்குச் சரியான சாஸ்திரம் உண்டோவென்று சொன்னதுக்கு குருசுவாமி அவர்கள் அருளிச்செய்ததாவது:

பஞ்சாங்கக்காரர், புரோகிதர் முதலானவர்கள் பிரசித்தமான தப்பறைக்காரராய் இருக்கிறார்களென்று கெட்டியுள்ள நியாயங்களினாலே சவன நிவாரணத்தை உண்டாக்கினவர் ஒப்பிவித்தாரானால் இப்படிப்பட்ட பிரசித்தமான நியாயங்களை இங்கே வெளிப்படுத்துகிறதற்குச் சமயம் இல்லாததினாலே இம்மாத்திரம் சொல்லிக் காட்டினது போதும். பின்னையும் இந்தச்சீமையில் உண்டான புரோகிதர்கள் இனிமேல் வரப்போகிற சந்திர சூரியகிராணங்களைச் சொன்னாலும் இப்படிப்பட்ட கிராணங்களுக்கு மெய்யான காரணங்களை அறியாததினாலே சாஸ்திரிகள் என்கிற பேர் அவர்களுக்குச் செல்லாது. அதேதென்றால்மெய்யான சாஸ்திரிகள் காரி

யங்களைக் குறிக்கப் பார்த்துக் காரணங்களையும் குறித்துக் காரியங்களையும் சொல்லுவார்கள்.

இதுக்கப்பால் அறிய வேண்டியதாவது: தப்பில்லாத சாஸ்திரத்துக்குக் காரியங்களையும் காரணங்களையும் சொல்லுகிறதுந்தவிர இப்படிப்பட்ட காரியங்களுக்கும் காரணங்களுக்கும் உண்டானத் தொந்தத்தையும் சம்பந்தத்தையும் ஒப்பிவிக்கத்தக்கதாக ஆக்ஷேபிக்கப்படாத மூன்று வசனங்களைத் தப்பில்லாத ஒழுங்கோடே ஸ்தாபிக்க வேணுமென்று மகாப் புத்திக் கூர்மையுள்ள வித்தியாபாரகர்கள் எழுதி வைத்தார்கள். இப்படிப்பட்ட விசேஷங்களை இந்தச் சீமையில் உண்டான பெரியவர்கள் முதலாய் அறியாததினாலே அவர்களுககுச் சாஸ்திரம் ஏது? ஆனால் இந்தத்தேசத்திலே விளங்குகிற தாறுமாறான சாஸ்திரம் அல்லாமல் இங்கே உண்டான சாஸ்திரிகள் அறியாத வேறே தொண்ணூறு சாஸ்திரங்கள் உண்டென்று ஒப்பிவிக்கலாம். இப்படிச் சாஸ்திரங்களை ஒப்பிவிக்கிறதற்கு இப்போது சமயம் இல்லாததினாலே இம்மாத்திரம் போதும்.

ஆனால் மனுஷருக்குள்ளே யுண்டான மகாப் பேர்ப்போன வித்தியாபாரகருடைய சாஸ்திரத்தையும் பராபர வஸ்துவினிடத்திலே பிரகாசிக்கிற மேலான சாஸ்திரத்தையும் பத்தும் பத்தாய் விசாரித்தால் பிர்மாதிகளுடைய சாஸ்திரங்கள் எல்லாம் அக்கியானம்போலே காண்பிக்குமென்று தப்பில்லாத சத்தியமாகும். அவ்வண்ணமே வித்தியாபாரகருடைய சாஸ்திரம் யோசனை நிமித்தமாக வருகிறதென்கிறதினாலே இப்படிப்பட்ட சாஸ்திரத்திற்கும் கடவுளிடத்திலே விளங்குகிற மட்டில்லாத பிரகாசமுள்ள ஞானத்துக்கும் அளவில்லாத தூரமாய் இருக்கிறதென்று பிரசித்தமாகும்.

அதேதென்றால் உண்டாக்கப் பட்டவர்களுடைய சாஸ்திரங்கள் எப்போதும் அக்கியானத்தோடே கலந்திருக்கிறது. இதெல்லாம் ஒரு உவமையினாலே வெளிப்படுத்துவோம்: அதெப்படி யென்றால், இராத்திரி காலத்திலே எண்ணிக்கைக்குள் அடங்காத நட்சத்திரங்கள் பிரகாசித்தாலும் அந்தப் பிரகாசமெல்லாம் இருட்டை நீக்கிக் கண்டிப்புள்ள வஸ்துக்களுடைய பற்பல குணங்களை காண்பிக்கிறதற்குப் போதாது ஆனால் சூரியனானது உதையம் பண்ணி

ண உடனே சகலமான நட்சத்திரங்களினால் உண்டான பிரகாசத்தை மறைக்கிறதுந்தவிர அந்தகாரமெல்லாம தள்ளிப்போட்டு சர்வலோகத்தில் உண்டான பொருள்களுடைய சுபாவத்தையும் குணங்களையும் வெளியாக்கி யெங்கும் பிரகாசிக்கிறது.

அத்தன்மை போல ஆசாரிய புருஷனுடைய சாஸ்திரங்கள் நிமித்தமாக வருகிற பிரகாசமெல்லாம் அக்கியானத்தோடே கலந்திருக்கிறபடியினாலே அநேகம் வஸ்துக்களுடைய சுபாவத்தை அளவறுக்கிறதற்குப் போதாது. ஆனால்ப்பரஞ்சோதியாகிற பராபர வஸ்துவினுடைய மட்டில்லாத பிரகாசமுள்ள ஞானமானது அந்தகாரமெல்லாம் நீக்கிச் சர்வலோகத்தையும் அதில் உண்டான சகலமான வஸ்துக்களுடைய சுபாவங்களையும் குணங்களையும் சாங்கோபாங்கமாக அளவறுத்துக் கொண்டிருக்கிறதென்று தப்பில்லாத சத்தியமாகும்.

அதேதென்றால் பராபர வஸ்துவானவருக்கு முன் சொல்லப்பட்ட அளவில்லாத ஞானம் இல்லாதே போனால் அநேகம் குறைச்சல் அவரிடத்தில் உண்டென்று சொல்லலாம. ஆனால் கடவுள் தானாய் இருந்து கடவுளிடத்திலே நன்மையினுடைய குறைச்சல் இருக்கிறதற்கு வேறே காரணம் இருக்கக் கூடாதென்கிறதினாலே அவரிடத்திலே அக்கியானம் சற்றாகிலும் இராமல் அவசியமாய் மட்டில்லாத ஞானம் இருக்க வேண்டியது. ஆனதினாலே தம்முடைய சுபாவத்தினாலே சர்வலோகத்திலே எங்கும் வியாபித்திருக்குமாப் போலே தம்முடைய அளவறுக்கப்படாத ஞானத்தினாலே சகலமான பொருள்களை அளவறுத்துக் கொண்டிருக்கிறார்.

இந்தப் பிரகாரமாக போன காலங்களிலேயும் பவுஷிய காலங்களிலேயும் உண்டானதெல்லாத்தையும் முழுதும் அறிந்திருக்கிறார். அவ்வண்ணமே மனுஷர் தங்கள் புத்திக்குள்ளேயும் மனதுக்குள்ளேயும் மறைந்திருக்கிற விசாரங்களும் ஆசைகளும் இருட்டுக்குள்ளே உண்டான வர்த்தமானங்களும் அவருடைய புத்தி சன்னிதானத்திலே பிரசித்தமாய் இருக்கிறது. மரங்களுடைய இலைகளையும் சமுத்திரத்தினுடைய மணல்களையும் ஆகாயத்தினுடைய அணுக்களையும் உச்சிதமாய் தப்பில்லாமல் எண்ணிக்கை அறிந்து கொண்டிருக்கிறார்.

இப்படிப்பட்ட பிரசங்கத்தைக் கேட்டவர்களுக்குள்ளே ஒருத்தன் இருந்து சந்தேகமாய் ஒரு விண்ணப்பத்தைப் பண்ணினதாவது: பராபர வஸ்துவானவர் வரப்போகிறதெல்லாம் அறிந்திருந்தால் பாவிகள் பண்ணப்போகிற தோஷ துரோகங்களை யேற்கனவே அறிந்திருக்கிறபடியினாலே இப்படிப்பட்ட பாவங்கள் அவசியமாய் இருக்குமென்று சந்தேகமில்லை. ஆனபடியினாலே மனுஷருக்குச் சுதந்தரமுள்ள மனசில்லையென்றும் பராபரவஸ்துவினுடைய ஒப்பில்லாத ஞானம் முன் சொல்லப்பட்டப் பாவங்களுக்குக் காரணமாய் இருக்குமென்றும் காண்பிக்கிற தென்றான்.

அத்தறுவாயிலே சுவாமியவர்கள் திருவுளம் பற்றினதாவது: பாவிகளினிமேல் தங்களுடைய சுதந்தரமுள்ள மனது நிமித்தமாக பாவங்களைச் செய்யப் போகிறதினாலே ஏற்கனவே தம்முடைய மட்டில்லாத ஞானத்திலே சர்வேசுரன் அறிந்திருக்கிறதுந் தவிர அவருடைய ஞானத்தினாலே இப்படிப்பட்ட பாவங்கள் வாராதென்றும் தப்பில்லாத சத்தியமாகும். அவ்வண்ணமே பூர்வகாலத்திலே நடந்த வர்த்தமானம் இப்போது நான் நினைத்திருக்கிறதற்குக் காரணமாய் இருக்குமல்லாமல் இப்போது என்னிடத்தில் உண்டான நினைவு பூர்வகாலத்திலே நடந்த வர்த்தமானத்துக்குக் காரணமாய் இருக்கமாட்டாது. அத்தன்மைபோலே பாவிகளினிமேல் செய்யப்போகிற பாவங்கள் இப்போது சர்வேசுரனுடைய ஞானத்தினாலே வருமென்று எப்படி சொல்லலாம்? இப்படிப்பட்ட பாவங்கள் இருக்கப் போகிறதென்கிறதினாலே ஏற்கனவேதானே பராபரவஸ்துவானவர் தம்முடைய மட்டில்லாத ஞானத்தினாலே அறிந்திருக்கிறாரொழிய மற்றப்படியல்ல.

அவ்வண்ணமே கண்ணாடி முன்பாக உண்டான வஸ்துக்களுடைய பிறத்திவிம்பங் கண்ணாடியிலே காண்பித்திருக்குமாப்போலே சகலமான காலங்களில் உண்டான வர்த்தமானங்கள் என்னப்பட்டயாவும் பராபரவஸ்துவினுடைய ஞானக் கண்ணாடியாகிற மட்டில்லாத ஞானத்திலே காண்பிக்கும். ஆனால் இத்தைவரைக்கும் நம்மாலே சொல்லப்பட்ட பிரசங்கத்தின் நிமித்தமாகக் கடவுளுடைய அளவறுக்கப்படாத ஞானம் எவ்வளவாகிலுங் துதிக்கப்பட்டாலும் இதெல்லாம் விளையாட்டுப்போலே இருக்கும்.

அவ்வண்ணமே பராபரவஸ்துவானவர் போனதையும் உண்டானதையும் இருக்கப்போகிறதையும் நன்ருய் அறிந்திருக்கிறதுந் தவிர இருக்கலான மட்டில்லாத வஸ்துக்களையும் அதினுடைய சுபாவங்களையும் குணங்களையும் அறிந்திருக்கிறதுந்தவிர சகல நன்மைகளைக் கொண்டிருக்கிற தம்முடைய சுபாவத்தை சாங்கோபாங்கமாய் அநாதியாய் அளவறுத்துக் கொண்டிருக்கிருர். இப்படிப்பட்ட திவ்வியமான ஞானசத்தியத்தை வெளிப்படுத்தத்தக்கதாக மனுஷரெல்லாங்கூடி வருந்தினுலும் நன்ருய்ச் சொல்லமாட்டார்கள். இதெல்லாம் இப்படியிருக்கையிலே இந்தச் சீமையில் உண்டான சனங்கள் வணங்குகிற தேவர்களிடத்திலே ஞானவகையிலே யெண்ணிக்கைக்குள்ளடங்காத குறைச்சல் உண்டாயிருக்கிறபடியினுலே அவர்களுக்குத் தேவதத்துவம் இல்லையென்று பிரசித்தமாகும்.

எப்படியென்ருல் ஆதிகாரணர் சர்வலோகத்தை உண்டாக்கச் சித்தமாய் இருக்கும்போது முந்த முந்தப் பிர்மாவைப் படைத்து இப்படிப்பட்ட பிர்மாவானவன் எப்படிப் பிறந்தானென்று தான் தானே அறியாமல் நெடுங்காலத்திலே ஆலோசித்தானும். இதன்றியே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் தங்களுக்குள்ளே கர்த்தத்துவத்தின் பேரிலே கனமான தர்க்கம் பண்ணும்போது ருத்திரன் இவர்களைப்பார்த்துச் சொன்னதாவது: மெய்யான தேவனெல்லாம் அவசியமாய் அறிந்திருக்கிருர்கள். ஆனபடியினுலே நம்முடைய தலையும் ஒரு ஸ்தலத்திலே யொளித்துப் போட்டு வேறே ஸ்தலத்திலே நம்முடைய கால்களையும் மறைத்துப் போடுவேன் இப்படிப்பட்ட அவையவங்களைக் கண்டுபிடிக்கிறவன் மெய்யான தேவனுய் இருக்கிருர்களென்று சொல்லுகையில்.

எல்லாரும் சம்மதித்ததற்குப் பிறபாடு விஷ்டுணு தன்னுடைய சுபாவமான ஞானத்தினுலே சிவனுடைய கால்கள் இருக்கிற ஸ்தலம் கண்டுபிடிக்க மாட்டாமல் பன்றி அவதாரமெடுத்து மூஞ்சியினுலே பூமியைக் கீறி வியர்த்தமாய் நெடுங்காலம் போக்கினதின் பின்பு மகா அசுத்த வேஷத்தோடே பிறப்பட்டுக் காலைக் காணுமல் தன்னுடைய அக்கியானத்தையும் புத்திக் குறைச்சலையும் பிரசித்தமாய்க் காண்பித்தானும்.

பிர்மாவோவென்றால் தன்னிடத்திலே வெகுவாய் ஆலோசித்ததற்குப் பிற்பாடு அன்னம் அவதாரம் எடுத்து ஆகாயத்திலே பறக்கப் பறக்க அப்புறம் போகமாட்டாமல் தவித்து ருத்திரனுடைய தலையைக் காணாததினாலே வெகு கஸ்திப்படுகிற சமையத்திலே ஈசுரன் தலைமேல் இருந்த தாழம்பூ பூமியிலே விழுகிறதை பிர்மா கண்டு ருத்திரனுடைய தலை எங்கே இருக்குமென்று அந்தப் பூவைக் கேட்குமிடத்தில் இன்னம் வெகு உயரத்தில் இருக்கிறதென்று சொல்லிற்றதாம்.

இதெல்லாம் இப்படி இருக்கையிலே பிர்மா, விஷ்டுணு முதலான தேவர்களுக்கு அளவில்லாத ஞானம் உண்டென்று சொல்லக்கூடுமோ? இப்படிப்பட்ட வர்த்தமானத்தைக் கேட்டவர்களுக்குள்ளே ஒருத்தன் இருந்து பிர்மாவுக்கும் விஷ்டுணுக்கும் அக்கியானமுண்டென்று சொன்னாப்போலே ஆச்சுதே. ஆனால் ருத்திரனிடத்தில் இப்படிப்பட்ட நியாயத்தில் குறைச்சல் இருக்கிறதென்று ஒப்பிவிக்கக் காணோமென்றான்.

அத்தருவாயிலே உபதேசிகளுக்குள் ஒருத்தன் இருந்து குருசுவாமியவர்களைப் பார்த்துச் சொன்னதாவது: இந்தப் புண்ணியவான் சொன்ன சந்தேகத்துக்குத் தேவரீர் உத்தரவின்படியே அடியேன் பிரத்தி யுத்தாரஞ் சொல்லுவேன். அதெப்படியென்றால் முன் சொல்லப்பட்ட தேவத்துவத்தின் பேரிலே அந்த தர்க்கத்தினாலே ருத்திரன் தனக்குத் தாழம்பூ விரோதம் பண்ணுமென்றும் பிர்மாவுக்குச் சாட்சியாயிருக்குமென்றும் அறியாதேபோனான். அதெப்படியென்றால் வருங்காரியத்தை அறிந்திருந்தால் தன்னுடைய தலையிலே இருக்கிற தாழம்பூப் பூமியிலே விழாதபடிக்கு உபாயம் பண்ணுவான்.

இதல்லாமல் எண்ணிக்கைக்குள்ளடங்காத காரியங்களிலே ருத்திரனவன் தன்னுடைய அக்கியானத்தைப் பரிபூரணமாய் ஒப்பித்தான். அதெப்படியென்றால் பூர்வகாலத்திலே ருத்திரனைக் குறித்து தவசு பணணின பரம ஈசுரன் தன் கையினாலே சகல வஸ்துக்களைச் சாம்பலாக்கிறதற்குச் சிவன் கையிலே வரத்தை வாங்கினதுக்குப் பிற்பாடு சிவன் பேரிலே தானே சோதினைப்பார்க்க உத்தியோகமாயிருந்ததினாலே ருத்திரன் லயமாப் போகத்திரிந்தான். ஆ

னபடியினுலே ருத்திரன் வருங்காரியத்தை அறியாததினுலே தன்னு டைய அக்கியானத்தையும் புத்திக்குறைச்சலேயும் காண்பித்தான்.

இதன்றியே ருத்திரன் தன் பெண்சாதியாகிற பார்வதியினு டைய குமாரனுன விநாயகனேடே பேசுகிறதைக்கண்டு தனக்குத் துரோகம் பண்ணுகிருளென்று விசாரித்துக்கொண்டு விநாயகனே வெட்டப்போகிற சமையத்திலே பார்வதி விநாயகன் பிறந்த வகைய றியாத ருத்திரனுக்கு அறிவித்ததினுலே சும்மாயிருந்தானும். ஆ னுல் வேறே சமையத்திலே கோப மாற்கத்தினுலே விநாயகனே இ ன்னுனென்று அறியாமல் அவனுடைய தலையை வெட்டினுனும். இந் தச் செய்தியை அறிந்த பார்வதி துக்க சமுத்திரத்தில் அமிழ்ந்தியி ருக்கிருளென்று கண்டு தானுங் கஸ்திப்பட்டு அறியாமற் செய்தே னென்று சொல்லி யானையினுடைய தலையை வெட்டி விநாயகனு டைய பிரேதத்தோடே பொருத்தித் திரும்பி எழுப்பினுனும்.

அப்போது இராமாயணத்தினுடைய கதையைச் சம்பூரணமா க அறிந்த வேருெரு உபதேசி குரு சுவாமி யவர்களுடைய ஆசிர் வாதத்தை வாங்கி எல்லாரையும் பார்த்துச் சொன்னதாவது: இந்த த்தேசத்தார் மிகவும் கொண்டாடுகிற புஸ்தகங்களுக்குள்ளே இரா மாயணம் பிரதான பிறபந்தமாயிருக்கிறதென்று சந்தேகமில்லே. ஆனுல் இப்படிப்பட்ட புஸ்தகத்தைப் பத்தும்பத்தாய் விசாரித்தா ல் பெருமாள் எடுத்த இராம அவதாரத்திலே பிறந்த நாட்டுவக்கிச் சாகுமட்டும் அளவில்லாத அக்கியானத்தைக் காண்பித்தானெழிய மற்றப்படியல்ல.

விவேகிகளான மனுஷருக்குச் சுபாவமாய் உண்டான புத்தி முதலாய்க் காட்டவில்லேயென்று பிரத்தியட்சமாய்க் காண்பிக்க லாம். அதெப்படியென்றுல் இராமன் விசுவாமித்திரன் கிட்ட வந் ததற்குப் பிற்பாடுச் சகலமானசனங்களேச் செயிக்கிறதற்கும் அதி சயமான காரியங்களேச் செய்கிறதற்கும் தானறியாத வானமந்தி ரங்களேப் படிப்பித்தான். அதெப்படியென்றுல் ராம லட்சுமண னும் விசுவாமித்திரனும் இரெண்டு காதம் நடந்து சாயுங்காலஞ் சாயு நதியினுடைய தென் கரையிலே சேர்ந்து அங்கே விசுவாமித்தி ரன் ராம லட்சுமணரைப்பார்த்துப் பசி, தாகம், இளேப்பு வுடம்பு நோய் இந்த வாதை இல்லாததுபோலே மந்திர உபதேசம் பண்ணி னுன்.

இந்த நதியில் ஸ்நாணம் பண்ணிவரச் சொன்னதினாலே, கங்கை பூர்வகமாய் ஸ்நாணத்தைப்பண்ணி சுகிய புத்திரராயிருந்த ராமலட்சுமணனுக்குப் பெலே யென்கிற வித்தையும் அதி பெலே யென்கிற வித்தையும் இரண்டு மந்திரங்களைச் செபம் பண்ணினால் படுத்துக் கொண்டிருந்தாலும் எச்சரிக்கை தப்பி மறந்திருந்தாலும் இராச உபாஸைகள் இல்லாததுபோல துதிசெய்யப் பயமில்லாததுபோலேயும் ஆகப்போகிறதும் இரும்பவும் ஐசுவரியம் உண்டாய் தயை தாக்ஷணியம் உண்டாய்ப் புசபெலபராக்கிரமத்திலே மூன்று லோகத்துக்குள்ளே உனக்குச் சரியானவர்கள் இல்லாததுபோல் ஆகப் போகிறதென்றும் விசுவாமித்திரன் சொல்லுகையில் சந்தோஷப்பட்டு வெகு பய பத்தியோடே விசுவாமித்திரனுக்கு நமஸ்காரம் பண்ணினார்களென்று எட்டாம் சற்கத்திலே எழுதியிருக்கிறது.

இதெல்லாம் இப்படியிருக்கையிலே இராமனுக்குப் பெலமும் சூரத்தனமும் செயமும் உண்டானால் இதெல்லாம் விசுவாமித்திரன் படிபித்த மந்திரத்தினாலே வந்த தொழிப மற்றப்படியல்ல. இது நிமித்தமாக வித்தைகளை அறியாத இராமன் நன்றியறிந்த பிரகாரம் விசுவாமித்திரன் பேரிலே தோத்திரம் பண்ணினான். இதன்றியே இராம லட்சுமணன் இவர்கள் அப்புறம் போய் ஒரு கனமான மலையையும் வனத்தையும் கண்டு விசுவாமித்திரன் உடனே கேட்டதாவது: அநேகம் விருக்ஷங்களும் கொடிகளோடே கூடின மொழுஞ்சுகளும் பக்ஷிகளும் மிருகங்களுண்டாய் வெகு அழகாய் விளங்குகிற இந்த வனமானது இந்த வனாந்திரத்திலே யார் இருப்பார்கள் இங்கே யாகம் பண்ணுகிறதற்கு விக்கினம் பண்ணுகிறவர்கள் ஆரென்று கேட்கையில் விசுவாமித்திரன் ராம லட்சுமணனோடு சொன்னதாவது: பூர்வகாலத்தில் இந்த ஆச்சிரமத்திலே விஷ்டுணுபூகம் நூறு பரியந்தம் அநேகம் வருஷம்தவசு பண்ணிக்கொண்டிருந்தானென்று சொன்னானென்று எட்டாம் சற்கத்திலே எழுதியிருக்கிறது.

• ஆனபடியினாலே ராமனாகப் பிறந்த விஷ்டுணு இந்த ஆச்சிரமத்திலே அநேகம் வருஷம் இருந்ததற்குப் பிற்பாடு அந்தமலை பதினாயிரம் விசை கண்டு அதுக்குப் பின் இந்த மலையென்ன வனமென்னவென்று கேட்கும்போது தன்னுடைய அக்கியானத்தைச் சம்பூரணமாய்

ஒப்பிவித்தான். அவ்வண்ணமே யாதொருத்தன் அறுபது வருஷம் ஒரு ஸ்தலத்திலே குடியாயிருந்ததுக்குப் பிற்பாடு இந்த ஸ்தலம் ஆரதென்று கேட்டால் சனங்கள் என்ன சொல்லுவார்கள். ஆனால் முன் சொல்லப்பட்ட மலையிலேயும் வனத்திலேயும் யூகம் நூறு பரியந்தம் தவசு பண்ணினதற்கும் பிற்பாடு இந்த ஸ்தலத்தினுடைய விசேஷத்தைக் கேட்கும்போது அவனுக்கு அளவில்லாத ஞானம் உண்டென்றுச் சொல்லக்கூடுமோ ?

இந்தப் பிரகாரமாக இராமாயணத்திலே விஷ்ணு இந்தப் பூலோகத்தில் உண்டான விசெஷங்களைப் பரிச்சேதமாய் அறியாததினாலே அறிந்தவர்களை இடைவிடாமற் கேட்டாலும் ஆனால் பாசுராமனோடே தெசரதராமன் யுத்தம் பண்ணினதையும் இந்த இரண்டு அவதாரத்தையும் எடுத்த விஷ்ணுவினுடைய அக்கியானத்தைச் சொல்லிக்காட்டுவோம். அதெப்படியென்றால் தெசரதராமன் சீதாதேவியோடே கலியாணம் பண்ண ஐயோத்திபா பட்டணத்திலே வரும்போது அவனுக்கு எதிராகப் பரசுராமன் வந்து எண்ணிக்கைக்குள்ளடங்காத சேனைகளைப் பயங்கரமான கோடாலிகளினாலே வெட்டினதற்குப்பிற்பாடு வெகு பராக்கிரமசாலியான பரசுராமனை எல்லாரும் கண்டு பயப்பட்டுப் பய நிவாரணமான மந்திரத்தைச் செபித்துக்கொண்டு வந்தார்கள்.

அதின் பிறகு ரகுராமனும் பரசுராமனும் சண்டைக்கு நின்ற பிற்பாடு பரசுராமன் சொன்னதாவது: நீ முறித்துப் போட்ட வில்லு எப்படியிருந்தது என்று நான் அறியேனோ? இப்படிப்பட்ட வில்லு தெசரதராமனுடைய அளவிலே வெகு காலமிருந்து சிரணமாய்க் கரையான் பிடித்துப்போக சற்றிலே இருந்து வந்த புழுத்த வில்லை முறித்துப்போட்டது எது ஆச்சரியம் ? இதோ என் கையிலிருக்கிற வில்லு விஷ்ணுவின் கையிலிருந்தது; அந்த வில்லை விஷ்ணு ருசிகானென்கிறவனுக்குக் கொடுத்தான். அந்த ருசிகான் செமதக்கினிக்குக் கொடுத்தான். அந்த செமதக்கினி எனக்கு வாழ்த்திக் கொடுத்தான். இப்போ செமதக்கினியினுடைய வில்லு நீ பிடித்து நாணை யேற்றிச் குணத்தோணியைப் பண்ணி அம்பைத் தொடுத்து காதுமட்டும் இழுத்தால், நீ பிலவானுமென்று பரசுராமன் சொல்லுகையில் வில்லை இழுத்துக்கொண்டு நாணையேற்றிச் சீ

வகன் ஓசை பண்ணி அம்பைத்தொடுத்து காது மட்டாக இழுத்தான் என்று இராமாயணத்திலே சொல்லியிருக்கிறது.

இப்படிப்பட்ட கதையை விதித்தவன் விஷ்டுணுவைப் பரியாசம் பணணத்தக்கதாக வுத்தியோகமாயிருக்தானென்று காண்பிக்கிறது. அவ்வண்ணமே ரகுராமனிலேயும் அவதாரம் பண்ணிக்கொண்டிருக்கையிலேயே விஷ்டுணுவை அறியாமல் இருக்கிறது சொல்லக்கூடாத அக்கியானமும் அவத்தமுமாய் இருக்கிறதென்று சந்தேகமில்லை. விஷ்டுணுவை அறியாமல் விஷ்டுணுவின் பேரிலே தூஷணமான வார்த்தையைச் சொல்லுவானேன்? விஷ்டுணுவை அறியாமல் விஷ்டுணுவோடே யுத்தம்பண்ணுவானேன்? இப்படிப்பட்ட விஷ்டுணுவுக்கு அளவில்லாத ஞானமும் தேவதத்துவமும் உண்டென்று சொல்லுகிறவனேர்?

இதன்றியே தேசதர ராமன் மிகுந்த துக்கத்தோடேயும் அழுகையோடேயும் இராமனைப் பனிரெண்டு வருஷம் தவசுபண்ணத்தக்கதாக வனத்துக்குஅனுப்ப ஆலோசனை பண்ணுகிறதை இராமன் கேட்கும்போது இதெல்லாம் அறியாமற் தன்னை இந்த நாளையிலே பட்டத்திலே வைக்கிறானென்று விசாரித்தான். அதன் பிறகு இராமச்செந்திரன் வனத்திலிருக்கும்போது தனக்குத் தகப்பனாயிருக்கிற தெசதர ராமன் செத்துப்போன செய்தியை அறியாமற் தன்னுடைய அண்டைக்கு வந்த வரதனைப்பார்த்துக் கேட்டதாவது: தெசதர ராமன் நன்றாய் இருக்கிறானோவென்று கேட்டதற்கு அந்த வரதன் மகாக் கஸ்தியோடு சுவாமி நீர் பிறப்பட்டு வந்த ஏழாநாளையிலே நீர் விட்டு வந்த வேதனையினாலே தெசதரன் சுவர்கஸ்தனானானென்று சொல்ல கேட்டக் க்ஷணத்திலே இடி விழுந்தால் எத்தனையோசையோ அந்த அடவிலே இராமச்செந்திரன் மூர்சாக்கெதனாய் விழுந்தானென்று இராமாயணத்திலே சொல்லியிருக்கிறது.

இதெல்லாம் இப்படி இருக்கையிலே இராமனாகப் பிறந்த விஷ்டுணு தன்னுடைய தகப்பன் வதையிலே இருக்கிறானென்றும் செத்துப்போனானென்றும் அறியாமல் இருக்கச்செய்தே உங்களுடைய இக்கட்டுகளையும் ஆபத்துகளையும் அறிவானேன்? இப்படிப்பட்டவனுக்கு அளவில்லாத ஞானம் உண்டென்று சொல்லக்கூடுமோ? இந்தப்பி

ரகாரமாக ராமலட்சுமணனும் தவசு பண்ணிக் காட்டிலே வாசமா யிருக்கும்போது இராவணனோடே சகோதரமான சூர்ப்பு நங்கை இராமன் அண்டையிலே வந்து அவனை யுற்றுநன்றாய்ப் பார்த்ததற் குப்பிறகு இராமன் யாரென்று கேட்டானும்.

அதின் பிறகு சூர்ப்பு நங்கை காயப்பட்டு இலங்கைக்குப் போய்த் தன்னோடேகூட பிறந்தவனாயிருக்கிற இராவணனோடே முறையிட்டு இராமனுடைய அழகு அலங்காரமான பெண்சாதியான சீதா தேவியை உபாய தந்திரமாகப் பிடிக்கவேணுமென்று துற்புத்தி சொன்னதினாலே இராவணன் தன்னுடைய மாமனாராகிற மாரிசன் கிட்டப்போய் அவனுடைய மருமகளுக்குச் சம்பவித்த அவமான ரோசக்கேடுகளைக் காண்பித்து ஆலோசனைபண்ணினதாவது: நீ பெண்மான் ரூபமாக சம சீதாதேவிக்கிட்டப்போய் விளையாடு; அவள் இத்தாலே சந்தோஷப்பட்டு எப்படியானாலும் இந்த மானைப் பிடித்து எனக்குத் தரவேணுமென்று இராமனை மன்றாடுவாள் இதினிமித்தமாக இராமன் உன்னைப் பின் தொடர்ந்து பிரயாசப்படுகிற சமயத்திலே தூர வோடிப்போக அத்தறுவாயிலே சீதாதேவியைப் பிடிக்கத்தக்கதாக உச்சிதமான உபாயத்தை பண்ணுவேனென்று சொன்னானும்.

அப்படிதானே மாரிசன் பெண்மான் ரூபத்தை யெடுத்துப் பஞ்சாரியென்கிற காட்டிலேபோய்ச் சீதை யண்டையிலே வந்து விளையாடுகிறபோது இத்தாலே சந்தோஷித்த சீதாதேவி எப்படியானாலும் இந்த மானைப் பிடித்துக்கொடுக்க இராமனைப் பிரார்த்தித்துக்கொண்டாள்; அப்போது இராமன் அம்பும் வில்லும் எடுத்துக்கொண்டு இலட்சுமணனை சீதாதேவிக்குக் காவலாக இருக்கச்சொல்லி; போகிறபோது இலட்சுமணன் இருந்து இந்த மானை மெய்யான மானல்லவென்றும் இராக்ஷதருடைய உபாய தந்திரமென்றும் அநேகம் விசை சொன்னாலும் இராமன் எல்லாம் சட்டைபண்ணாமல் மானைத்துடர்ந்து பிடிக்கமாட்டாமல் அம்புகளினாலே எய்ய மானுக்குக் காயம் உண்டாயிற்று.

அப்போது மனுஷன் போலே ஐய்யோ இலட்சுமனா இலட்சுமனா என்று கூப்பிட்டது. இப்படிப்பட்ட வார்த்தையைக் கேட்ட சீதாதேவி இலட்சுமணனை அழைத்து இராமன் கிட்டப்போகச்

சொல்லுகையில் இலட்சுமணன் இருந்து உனக்குமோசம் வராமல் இராமன் என்னை இங்கே காவலாகக் கட்டளை யிட்டானே. அங்கே போகிறதெப்படியென்று சொல்லும்போது சீதாதேவி அபத்தமான பிரத்தி யுத்தாரத்தை சொன்னதினாலே இலட்சுமணன் வெட்கப்பட்டு தன்னுடைய காதுகளைப் போத்திக்கொண்டுத் தன்னுடைய தமையனார் அண்டைக்குப்போனான். அந்தச்சமயத்திலே இராவணன் சீதாதேவியை அறிந்திருக்கிற ஒரு மகா முனியினுடைய ரூபத்தை எடுத்ததுந்தவிர சில விராக்ஷதர் ஐயோத்திய பட்டணத்திலுண்டான பெரியவர்களுடைய சுரூபத்தையும் எடுத்துக்கொண்டு எல்லாரும் ஆயத்தமாயிருக்கிறது; நீ இந்தத்தேர்மேலே ஏறு, உன்னுடைய புருஷன் பிறகாலே வருவானென்று சொன்னதை சீதாதேவி விசுவாசித்துத் தேர்மேல் ஏறினாளாம்.

ஆனால் சீதையினுடைய உத்தாரம் இல்லாமல் அந்தத் தேர் நடவாதென்கிறதினாலே இராவணன் கையில் கொண்டு வந்த சங்குமாவிலங்கையோடு இவளுக்குக் காண்பித்து இதென்ன, இதென்ன என்றான். சிதை சங்குமாவிலங்கை ஓடு என்று சொன்னாள். அந்த வார்த்தை சொன்னவுடனே அந்தத்தேர் ஆற்றின் வழியாக இலங்கைக்குப்போச்சுது. அதின் பிறகு இராமனும் இலட்சுமணனும் சீதாதேவி இருந்த ஸ்தலத்துக்கு வந்து எங்கு முற்று பரிக்ஷீக்கிறபோது அவளைக்காணாததினாலே இராமன் மயங்கிப்போய்த் தன் கையிலிருந்த ஆயுதங்களை விட்டெறிந்து போட்டு பெருமூச்செறிந்து மூர்ச்சைபோய் விழுந்து கிடந்ததற்குப் பிற்பாடு இலட்சுமணன் தேற்றரவு சொன்னாலும் ரிஷிகள் ஆறுதலான சில கதைகளைச் சொன்னாலும் இராமன் அளவில்லாத கஸ்தியை அநுபவித்து அழுகையோடே தன்னுடைய பெண்சாதி உயிரோடிருக்கிறாளோ இல்லையோவென்று அவர் அவனைக் கேட்டானாம்.

இந்தக் கதையிலே சர்வ அக்கியானத்தைக் காண்பித்தானொழிய மற்றபடியல்ல. அதெப்படியென்றால் இராமன் சூர்ப்பு நங்கை தமையனிடத்தில் முறையிட்டாளென்றும் இராவணன் ஆலோசனை பண்ணினானென்றும் பெண்மான் மெய்யான மானல்லவென்றும் அதிலே மாரிசன் மறைந்திருக்கிறானென்றும் இராவணன் முனி வேஷத்தோடே வருவானென்றும் தேர்ப்பாகனி லங்கை

யிலிருந்து சீதையினுடைய ஆச்சிரமத்துக்குத் தேரை நடத்துவானென்றும் இராவணன் சீதா தேவியைக் கபடமாகத் தேர்மேல் ஏற்றி வைத்தானென்றும் திரும்பி இராவணன் சீதாதேவியோடே இலங்கைக்கு வந்தானென்றும் பரிச்சேதமாய் இராமன் முன்னறியாதே போனனே?

இதிலே அறியவேண்டிய இரெண்டு விசேஷமுண்டு. அதின் முதலாவது: இராமனைப் பார்க்க இலட்சுமணன் இருந்த காலத்திலே தமையனுக்கு உச்சிதமான புத்தி சொன்னாலும் இராமன் இராக்ஷருடைய கபடங்களைக்கண்டு பிடியாமலும் தனது தம்பியினுடைய நல்ல வார்த்தைகளைக் கேளாமலும் பரமார்த்தனுப்ப் போன மானைத்துடர்து போனன். இரண்டாவது இராமனைப் பார்க்க இராவணன் கெட்டிக்காரனயிருந்து வருங்காரியத்தை எண்ணிக்கொண்டு ஒழுங்கோடே செய்தான்.

இதெல்லாம் இப்படி இருக்கையிலே இராமனகப் பிறந்த விஷ்டுணுவுக்கு அளவில்லாத ஞானம் உண்டென்று விசாரியாமல் மற்ற மனுஷருக்கு உண்டான புத்தி அவனுக்கில்லாதே போச்சுது. அதெப்படி யென்றல் இராமனும் இலட்சுமணனும் காடுகளெல்லாம் சீதாதேவியைத் தேடிப்பார்க்கிறபோது ரிஷிகள் கிட்டப்போய் அவர்களைக் கேட்டதுமல்லாமல் மான்களோடேயும் மயில்களோடேயும் பறவைகளோடேயும் மரங்களோடேயும் தன்னுடைய பெண்சாதியாயிருக்கிற ஸ்தலத்தையும் அவளுடைய வர்த்தமானத்தையும் கேட்டானும்.

கடைசியிலே அறியவேண்டியதாவது: சில யாகங்களிலே இராவணன் கபடமாகச் சீதையைப் பிடிக்கிற வர்த்தமானம் வேறே விதமாய் சொல்லி இருந்தாலும் எப்போதும் இராமனுடைய பரமார்த்தனமும் அக்கியானமும் மிகவும் காண்பிக்கிறதென்று பிரசித்தமாகும். . அதின்பிறகு இராமன் தன் அண்டைக்கு வந்த அனுமானை அறியாதே போனன். பின்னையும் தனக் கூழியம்பண்ணத்தக்கதாகத் துணிந்திருக்கிற சுக்றீபனுக்கு எதிராளியான வாலியைக் கொன்றுபோடுவேனென்று இராமன் வார்த்தைப்பாடு கொடுத்ததற்குப் பிற்பாடு சுக்றீபனும் வாலியும் தங்களுக்குள்ளே அகோரமான யுத்தம் பண்ணுகிறபோது சுக்றீபனுக்கு உதவியாய் வந்த இரா

மன் வாலியாரென்றும் சுக்ரீபனென்றும் அறியாமல் வாலியை யெய்யாமல் சுக்ரீபனை மகா விதனப்படுத்திக் குறையுயிராகவெய் துக் குத்துயிராய்க் கிடக்கிறவன் மேலே பருவதத்தைப் போட்டானும்.

ஆனபடியினலே தன்னைச் சேவிக்கிறவர்களுக்கு உதவியாய் இராமலும் அவாகளை அறியாமலும் வாதைப் படுத்திக்கொண்டிருக்கிற இராமன் உங்களை அறிவானே! உங்களுக்கு உதவியாய் இருப்பானே! இந்தப்பிரகாரமாக இராமன் இலங்கையிலே இருக்கும்போது அகோரமான கும்பகறணனைக் கண்டு இராக்ஷதனாகயிருக்கிறனென்று அறியாமல் சர்வ லோகத்திலுண்டான பருவதங்களுடைய கூட்டமோ இல்லையோவென்று சந்தேகப்பட்டதினலே விபூஷணன் உண்டான செய்தியை அறிவித்தான். இப்படியே இராவணனுடைய மகன் இந்திரசெயித்து சீதை ரூபமாக வந்து இராமனுக்கு மயக்கம் வருத்திவித்து இந்த வர்த்தமானத்தை அறியாத இராமனுக்கும் இலட்சுமணனுக்கும் ஒழுங்காக வெளிப்படுத்தினனும்.

இப்படிப்பட்ட இராமன் இராவணனோடே யுத்தம்பணணும் போது இராவணனுடைய ஒரு தலை வெட்டின உடனே வேறே தலை முளைத்ததினலே இராவணனைச் செயிக்கிற வகை அறியாததினலே சலித்துக்கொண்டிருக்கிற சமையத்திலே சொற்கத்தில் உண்டான தேவர்கள் ஆலோசனை பண்ணிச் செயங்கொள்ளுகிற வகை படிப்பிக்கத்தக்கதாக ஆகாச ரிஷியை இராமன் அண்டைக்கு அனுப்பினர்களாம். அதற்குப்பிற்பாடு இராமன் இராக்ஷதரை யெல்லாம் சங்கரித்து முத்து இரத்தினங்களினலே அலங்கரிக்கப்பட்ட பல்லாக்கிலே சீதாதேவியை அழைப்பித்து சூரிய பிரகாசத்துக்கு ஒப்பாயிருக்கிறளென்று கண்டு தனக்குத் துரோகம் பண்ணினளென்று அநியாயமாய் விசாரித்து அந்த சௌந்திரியம் பாம ரிஷியினுடைய ஆசிர்வாதத்தினலே வந்ததென்று அறியாதே போனனும்.

ஆனல் சீதாதேவி தன் பேரிலே குற்றமில்லையென்று சகலமான தேவர்களுடைய முன்பாகப் பிரசித்தமாய் ஒப்பிவித்ததற்குப் பிற்பாடு அவளுக்குக் கைகொடுத்து ஐயோத்திய பட்டணத்திலே ஓட்டோலகராய்ப் பிரவேசம் பண்ணி அதிலே அநேகவருஷகாலம்

இராட்சியபாரம் பண்ணினதற்குப் பிற்பாடு ஒரு நீசனுனவண்ணுன் தாறுமாருகப் பேசினதினுலே திரும்பச் சந்தேகப்பட்டு கெற்பிணியாயிருக்கிற சீதாதேவியை கிஷ்டூரமாய்த் துரத்தி விட்டான்.

கடைசியிலே இராமன் தன்னுடைய பிள்ளைகளாகிற குசலவனை அறியாமலும் அவர்கள் நடத்தின காரியங்களை அறியாமலும் அவர்களோடே யுத்தம் பண்ணியவர்களாலே வெட்டுண்டுப் போனதற்குப் பிற்பாடு வால்மீகருடைய தீர்த்தத்தினுலே யெழுந்திருந்து அதுக்குமுன்னே சீதாதேவிச் செத்துப்போனுளென்று விசாரித்தும் அவள் உயிரோடிருக்கிருளென்று சந்தோஷப்பட்டு அறியாமல் செய்தேனென்று சொல்லி தன் பெண்சாதியையும் பிள்ளையையும் அயோத்தியப்பட்டணத்திற்குக் கூட்டிப்போனுன்.

இப்படிப்பட்ட அபத்தமான விசேஷங்களை பத்தும் பத்தாய் விசாரிக்கிறவன் விஷ்டுணுவுக்கு அளவில்லாத ஞானம் உண்டென்று சொல்லாமல் மட்டில்லாத அக்கியானம் உண்டென்று எண்ணிக்கொண்டிருப்பானெழிய மற்றபடியல்ல. இந்தக்கதையையும் உபதேசி சொன்னவுடனே யெல்லாரும் பிறப்பட்டுச் செபம்பண்ணப் போனுர்கள்.

---

## பராபரவஸ்துவின் மட்டில்லாத விமரிசை

## ௰- ம் சல்லாபம்.

---

ஞான உபதேசத்தைக் கேட்கத்தக்கதாக எல்லரருமாய் இருக்கிற சமையத்திலே ஒருத்தனிருந்து சொன்னதாவது: இங்கே நான் வருகிறதற்கு முன்னே, ஒரு குயவன் விநாயகனுடைய விக்கிரகத்தை மிகுந்த பிரயாசத்தோடே வனைந்து அதினுடைய துதிக்கை தாறுமாருய் இருந்ததினுலே, கோபம் பொறுக்கமாட்டாமல் அந்தப் பிள்ளையாருடைய உருவையும் மற்ற விக்கிரகங்களையும் உடைத்துப் போட்டானென்று நான் கண்டேனென்று சொல்லுகையில்,

உபதேசிகளுக்குள்ளே ஒருத்தனிருந்து குருவானவரைப் பார்த்து விண்ணப்பம் பண்ணினதாவது: இந்தக் குயவன் கொஞ்சப் ப

த்தியைக் கொண்டிருந்ததினாலே, இந்த விக்கினேசுரனுடைய விக்கிரகத்தை இரண்டு மூன்றுவிசை சோதனை பார்த்ததுக்குப் பிற்பாடு நன்றாய் அவன் அறியாமலிருக்கிறது ஆச்சரியமல்ல. ஆனால் பிர்மாவைக்குறித்து உலகத்தார் சொல்லுகிற சாமர்த்தியத்தினுடைய குறைச்சலை ஆராய்ந்து பார்க்கும்போது, வெகு விநோதம் காண்பிக்கிறது.

அதெப்படியென்றால், பிர்மாவானவன் ஆதிமனுஷனை உண்டாக்கும்போது, அவையவங்களை உண்டாக்கினதுக்குப்பிறகு ஒரு கண்ணும் காலுமாத்திரம் இருக்கிறபடியினாலே நடக்கமாட்டாமல் நொண்டுகிறானென்று கண்டு இதெல்லாம் ஆகாதென்று ஆலோசனை பண்ணித் தான் உண்டாக்கின மனுஷனை அழித்துப்போட்டு மூன்று கண்ணோடேயும் மூன்று காலோடேயும் வேறே மனுஷனைப் படைத்தானாம். பினனையும் பார்க்கிறதுக்கு மூன்று கண் விக்கினமாய் இருக்கிறதென்றும் மூன்று காலோடே நடக்கக்கூடாதென்றும் கண்டு திரும்பத் தான் உண்டாக்கின மனுஷனை நொக்கு நொக்காய் நொறுக்கிக் கடைசியிலே குறைவில்லாத மனிதனைச் சிஷ்டித்தானுமென்று சொன்னதுக்கு,

குருசுவாமி அவர்கள் திருவுளம்பற்றினதாவது: இப்படிப்பட்ட அதிகக் குறைச்சலைக் கொண்டிருக்கிற தேவர்களை ஆராதிக்கிறவர்கள் பிர்மா முதலான பேர்களுக்குத் தேவதத்துவம் உண்டென்று எப்படிச் சொல்வார்கள்! அவ்வண்ணமே மெய்யான தேவனுயிருக்கிற பராபர வஸ்துவானவர் மனுஷருக்குண்டான புத்தியை மிகவும் அதிசயிக்கிறதுந்தவிர உண்டாக்கின சகல பொருள்களிலே தப்பில்லாத கிரமத்தையும் விமரிசையும் காண்பித்தாரென்று பிரசித்தமாகும். இந்தப்பிரகாரமாகப் பரமண்டலத்தில் உண்டான சந்திர சூரிய நட்சத்திரங்களையும் கிரகங்களையும் சிஷ்டிக்கிறதிலே தம்முடைய மட்டில்லாத பிலத்தையும் கரைகாணுத கிருபாகடாட்சத்தையும் காண்பிக்கிறதுந்தவிர மட்டில்லாத கீர்த்தி சோபனப் பிரதாபத்தினாலே விளங்கிற தம்முடைய சாங்கோபாங்க விமரிசையையும் சாமார்த்தியத்தையும் பிரகாசிப்பிக்கிறானென்று மகாப் புத்திக் கூர்மையுள்ள கிரந்தக் கர்த்தாக்கள் எழுதினதுந்தவிர அநுபவசித்தியினாலே முதலாய்க் கண்டுபிடிக்கிறோம்.

அவ்வண்ணமே சந்திர சூரியன் முதலான கிரகங்களுடைய உத்தார தேக்ஷிணயனத்தி னிமித்தமாகப் பூலோகத்தில் எண்ணிக்கைக்குள்ளடங்காத வஸ்துக்கள் புதிதாய்த் தோன்றுகிறதுக்கும் பரிக்கிரதுக்கும் காரணமாயிருக்கும். இதன்றியே ஆகாயத்திலே பறக்கிற பக்ஷிகளையும் பூமியிலே திரிகிற மிருகங்களையும் சமுத்திரத்திலே நீந்துகிற மச்சங்களையும் பத்தும் பத்தாய் விசாரித்தால், அதுகளிலே அளவில்லாத விமரிசை பிரத்தியட்சமாய்க் காண்பிக்கிறதென்று சத்தியமாகும்.

கடைசியிலே பெரிய உலகத்தினுடைய குறிப்பிடமாகிற சின்ன உலகமாகிற மனுஷனை ஆராய்ந்து பரிக்ஷிக்கிறபோது, நரசீவனுடைய சுபாவத்தையும் அதிலே உண்டான பிரதான மூன்று பெல்ன்களையும் சரீரத்தினுடைய சரணகாரதியாகிற அவையவங்களையும் மாங்கிஷங்களையும் நாடிகளையும் சகல ஆதாரங்களையும் நரம்புகளையும் அங்கங்களையும் இணக்கங்களையும் தொந்தங்களையும் எண்ணிக்கைக்குள்ளடங்காத சிஷ்டிகளையும் உற்று விசாரித்துப்பார்த்தால் அளவறுக்கப்படாத விமரிசையினுடைய அற்புதமான இலட்சணங்களையும் காணலாம். இதெல்லாம் மனிதருடைய சரீரமும் ஆத்துமமும் பிழைக்கிறதுக்குப் பராபர வஸ்துவானவர் பராமரிக்ஷித்த எண்ணிக்கைக்குள்ளடங்காத உபாயங்களை நினைத்தால், நிகரில்லாத விமரிசையைக்கொண்டிருக்கிற பராபர வஸ்துவின்பேரிலே தோத்திரம் பண்ணவேணுமொழிய மற்றப்படியல்ல.

ஆனல் இதெல்லாம் இரண்டாம் சல்லாபத்திலே விஸ்தாரமாய் வெளிப்படுத்தினதினலே, இம்மாத்திரம் சொல்லிக்காட்டினது போதும். இப்படிப்பட்ட மட்டில்லாத சாமார்த்தியத்தினுடைய அடையாளங்களைப் பார்க்கும்போது, கடவுள் இதெல்லாம் சிஷ்டிக்கிறதிலேயும் இரட்சிக்கிறதிலேயும் குறித்த கருத்தை அடையப் பண்ணுகிறதிலேயும் ஆலோசனை பண்ணிக்கொண்டுச் சிலதுகளை மாத்திரம் உண்டாக்கினதுக்குப் பிறகு அதனுடைய குறைச்சல்களைத் தள்ளினரென்று அங்கீகரிக்கக்கடவோமல்ல.

அவ்வண்ணமே ஒன்றுமில்லாதிருக்கையில், ஆகட்டுமென்கிற வார்த்தையை திருவுளம்பற்றினவுடனே, உலகம் ஆரம்பித்தது. இத

ன்றியே சந்திர சூரியன் ஆகட்டுமென்று அருளிச்செய்ததுக்குப் பிற்பாடு சந்திரன் சூரியன் பிரகாசிக்கிறதுக்குப் பிலனில்லையென்று பார்த்து இரண்டு மூன்று விசை சோதித்ததுக்குப் பிறகு கடைசியிலே நன்றாய் உண்டாக்கினரென்று சொல்லவும் எண்ணவும் கூடாது. இந்தப் பிரகாரமாக மற்றும் உண்டான வஸ்துக்களைச் சிஷ்டிக்கிறதிலேயும் இரெட்சிக்கிறதிலேயும் நடத்துகிறதிலேயும் யோசிக்கக்கடவோம்.

ஆனபடியினாலே மெய்யான தேவனாயிருக்கிற பராபர வஸ்துவானவர் தாம் உண்டாக்கின வஸ்துக்களிலேயும் நடத்துகிற காரியங்களிலேயும் அளவறுக்கப்படாத ஞானத்தையும் ஒப்பில்லாத சாமார்த்தியத்தையும் கரைகாணாத விமரிசையையும் பிரசித்தமாய்க் காண்பித்திருக்கச் செய்தே, பயித்தியத்தோடே கலந்திருக்கிற அபத்தமான காரியங்களை நடத்துகிறவர்களுக்குத் தேவத்துவம் உண்டென்று சொல்லக்கூடுமோ ?

அதெப்படியென்றால், பேர்போன இராக்ஷதனான இராவணன் பன்னிரண்டு வருஷம் தவசு பண்ணினதுக்குப்பிறகு அதுக்குப் பலனாகக் கைலாசத்தை அசைத்துச் சுமந்துகொண்டுபோகத்தக்கதாகத் துணிந்திருந்த சமையத்திலே கைலாசம் சாய்ந்திருந்ததினாலே; பரமேசுபரியும் அவளோடே கூடியிருக்கிற மோட்சவாசிகளும் பயந்து தத்தளித்ததை ருத்திரன் கண்டு தனது காலின் விரலினாலே கைலாசத்தை, நிறுத்தினானும். அத்தருவாயிலே இராவணன் கைலாச மலையைக் கின்னரமாகவும் தன் உடலைக் கின்னரக்கயிறுகவும் கட்டிப் பாடுகிறபோது, பரமேஸ்பரியும் பரமேஸ்வரனும் வெகு சந்தோஷப்பட்டுத் தங்கள் முன்பாக அவனை அழைப்பித்து உனக்கு என்ன வேணுமென்று கேட்டதினாலே, இராவணன் சிவ லிங்கத்தையும் பரமேஸ்பரியையுங் கேட்டதுக்கு ருத்திரன் அதிலே சம்மதித்து லிங்கத்தையும் பரமேஸ்பரியையும் இராவணனுக்குக் கொடுத்தானும்.

இதுக்குச் சரியான பயித்தியம் உண்டோ? யாதொருத்தன் நாகசரம் [illegible]ன்றாய்ஊதினதினாலேயும் நாகசனக்காரனுக்காகவாகிலும் தாம்பூர் [illegible]சிக்கிறவனுக்காகவாகிலும் கூலிபாகத் தன் பெண்சாதி

யாகிலும் மகளையென்கிலும் வெகுமானம் கொடுத்தால், சனங்கள் என்ன சொல்லுவார்கள்? ஆனால் ருத்திரன் சங்கீத வெத்தனத்தை நன்றாய்த் தட்டிப்பாடின இராவணனுக்கு தன்னுடைய இஸ்திரியைக் கொடுத்ததுந் தவிர தன்னுடைய மோட்ச ஸ்தலத்திலுண்டான சகலமான பாக்கியங்களையும் கொடுக்க மனதாயிருந்தான். இதெல்லாம் பத்தும் பத்தாய் விசாரிக்கும்போது ருத்திரனுக்கு அளவில்லாத புத்தியும் விமரிசையும் உண்டென்று சொல்லக் கூடுமோ? பயித்தியக்காரர் முதலாய்ச் செய்யாத காரியங்களை நடத்துகிறவனுக்குத் தேவத்துவம் உண்டென்று சொல்லுவார்களோ?

இந்தப் பிரகாரமாக விஷ்டுணு பரசுராம அவதாரத்திலே சமுத்திரத்தை அப்பாலே தள்ளுகிறதுக்குத் தான் பூசை பண்ணின யாகக் குழியிலே ஒரு சுளகைக் கண்டு அதைக் கையிலே பிடித்துக் கொண்டு சாகரத்திலெறிகிறபோது கடல் பின்னுக்கு வாங்கிப் போச்சுதென்றும் பின்னையும் விஷ்டுணுவைப் பார்க்க மகா சூக்ஷக்காரனாயிருக்கிற வருணன் கறையான் அவதாரமெடுத்து விஷ்டுணுவினுடைய சுளகைத் தின்று போட்டதென்று பரசுராமன் கதையிலே யெழுதியிருக்கிறது. கடலைத் தள்ளுகிறதுக்கு விஷ்டுணுவுக்குச் சுளகில்லாமல் வேறே யெத்தனமில்லையோ? இப்படிப்பட்ட மந்திரவாளைக் கறையான் அரித்துப்போட்டதென்று சொல்லுகிறவன் விஷ்டுணுவைப் பரியாசம்பண்ண மனதாய் இருக்கிறானேயொழிய மற்றப்படியல்ல. விஷ்டுணுவுக்கு அளவில்லாத விமரிசையும் சாமார்த்தியமும் உண்டானால் இந்த அபத்தங்களைச் செய்வானோ?

இதுக்கப்பால் அறியவேண்டியதாவது: முன் சொல்லப்பட்ட பரசுராமனும் தெசதாராமனும் ஒரு விஷ்டுணுவாயிருந்தாலும் இப்படிப்பட்டவர்களிடத்திலே மனுஷ அவதாரம் பண்ணின விஷ்டுணுவானவன் காண்பித்த புத்திக்குறைச்சலை உற்றுக்கேளுங்கள்: பரசுராமன் காட்டிலேயிருக்கும்போது தேசதா ராமன் முன் சொல்லப்பட்ட காட்டிலே வந்து பரசு ராமன் இன்னானென்று அறியாதவனாய் அவனோடே அகோரமான யுத்தம் பண்ணினானென்றும் இப்படியே விஷ்டுணுவோடே சண்டைக்கு நிற்கும்போது, ரிஷிகள் வந்து மோசம் போகாதபடிக்கு விலக்கினார்களென்றும் சொல்லுகிறார்களே. இதுக்குச் சரியான மதிப்பிராங்கிஷம் உண்டோ?

தினந் தினந் தன்னுடைய வஸ்திரங்களைத் தேடினால், இப்படி ப்பட்டவனைப் பரியாசம் பண்ணுவார்களே. எத்தனை யறியாதவன் அப்படிப்பட்டவனென்று பரிக்ஷித்துப்பாருங்கள். யாதொரு வியாதிக்காரன் பித்தத்தின் மிகுதியினாலே மயங்கிப்போய் பயித்தி யக்காரனைப் போலே தன்னை அறியாமல் சில அபத்தமான வார் த்தைகளைப் பிதற்றுகிறதுந் தவிர மதிப்பிருங்கிஷத்தைக் காண்பி க்கிற சில காரியங்களை நடத்துவானென்று அநுபவசித்தியினாலே க ண்டுபிடிக்கிறோமானால், விவேகியுமாய் தாஷ்டிகனுமாயிருக்கிற மகா த்துமாவானவன் தன்னை அறியாதிருக்கிறானென்றும் தன்னோடே ச ண்டைக்கு நிற்கிறானென்றுந் தன்னுடைய வலதுகையினாலே இட துகையைப் பிடிக்கிறானென்றும் தன்னுடைய இடதுகாலைக்கொண் டு வலது காலை உதைக்கிறானென்றும் ஒருக்காலும் காணோம். இப் படிப்பட்ட பயித்தியம் விஷ்டுணுவுக்குச் செல்லுமொழிய மற்றப் படியல்ல.

ஆனால் விஷ்டுணு பயித்தியக்காரனாயிருக்கிறானென்று நாம் சொல்லும்போது, உலகத்தாருடைய புஸ்தகங்களிலே இப்படிப்ப ட்ட விசேஷத்தை நாம் வாசித்ததினாலே சொல்லுகிறோமொழிய ம ற்றப்படியல்ல. அதெப்படியென்றால், பூர்வகாலத்திலே இரணியன் சகலமான தேவர்களைச் செயித்துக்கொண்டு எல்லாரும் தன் னை வணங்கச் சொல்லித் தனது குமாரன் பிறகாலநாதன் விஷடுணு வை நமஸ்கரித்ததினாலே அவனைக் கொன்றுபோடத்தக்கதாக உத் தியோகமாயிருக்கும்போது, விஷ்டுணுவானவன் நரசிங்கத்து அவ தாரத்தை யெடுத்து இரணியன் மேலே விழுந்து நகங்களினாலே வ யிற்றைக் கிழித்துக் குடலைப் பிடுங்கி மாலைபோட்டுக்கொண்டு அ வனுடைய இரத்தத்தையெல்லாம் குடித்துப்போட்டு முழுப் பயி த்தியக்காரனாயிருந்தானென்றும் இப்படிப்பட்ட வெறியோடே அ நேகம் வருஷம் திரிந்தானென்றும் நரசிங்கக் கதையிலெழுதியிருக்கி றது.

இப்படிப்பட்ட அபத்தமான விசேஷத்தை நாம் சொன்னோ மானால், உலகத்தார் தங்களுடைய தேவர்களை தூஷணித்தோமென் று சொல்லுவார்களானால், அவர்கள் தானே வெட்கமில்லாமல் வெட்டவெளியாக இந்த மதிப்பிருங்கிஷத்தை விஷ்டுணுவின்பேரி

லே யாரோபித்தால் அதின் பிறகு பராபரவஸ்துவானவருக்கு உண்டான அளவில்லாத விமரிசையும் ஈகரில்லாத சாமார்த்தியமும் விஷ்டுணுவுக்கு உண்டென்று சொல்லவும் கருதவும் கூடுமோ? முழுப் பயித்தியக்காரனுயிருக்கிறவனை மகா விவேகியாயிருக்கிறுனென்று சொல்லலாமோ?

விஷ்டுணுவங்கையிலே உலோகத்தார் யோசித்தாப்போலே, ருத்திரனுடைய காரியங்களில் யோசிக்கிறுர்கள். அது எப்படியென்றுல், ருத்திரன் பயித்தியக்காரனை சோகியாக இலங்கையிலே போய் தனது பயித்தியத்தினுலே செய்த அபத்தங்களை இராக்ஷதர் பொறுக்கமாட்டாமல் அவனை அநேகம் விசை அடித்ததுக்குப் பிறபாடு இராவணனுக்கு முனபாகக்கூட்டிக்கொண்டு போனுர்களாம். ஆனுல் அப்பேரது இராவணன் அவனைப் பார்த்து: இந்தத் தேசத்திலிராமல் வேறே தேசத்துக்குப் போ; இல்லாவிட்டால் அசுரர்களுடைய மதிப்பிருங்கிஷத்தினிமித்தமாக உன்னைக் கொன்றுபோடுவார்களென்றுனும், அதுக்கு ஈசுரன் பயித்தியத்தோடு கலந்திருக்கிற பிரத்தியுத்தாரத்தைச் சொன்னதினுலே, அவரைப் பரியாசஞ்செய்ததும் தவிர ஆடுகளை மேய்க்கச் சொன்னுர்களென்று இராமாயணத்திலே சொல்லியிருக்கிறது:

இதெல்லாம் இப்படியிருக்கையிலே ருத்திரனிடத்திலே காரியங்களை நடத்துகிறதுக்கு ஒப்பில்லாத புத்திக் கூர்மையும் அளவறுக்கப்படாத சாமர்த்தியமும் உண்டென்று சொல்லுகிறவனுர்? இதன்றியே பூர்வகாலத்திலே பேர்போன பற்பமாரிஷி ருத்திரனைக்குறித்து அகோரமான தபசு பண்ணினதுக்குப் பிறகு ஈசுரன் இந்தத் தபோதனர் கிட்டவந்து எந்தெந்த வஸ்துவின்பேரிலே உன் கைப்பட்டதானுல் உடனே சாம்பலாய்ப் போமென்று சொல்லி வரத்தைக் கொடுத்தானும்.

பற்பமாரிஷியோவென்றுல் ருத்திரன் சொன்ன வார்த்தையை மெய்யோ பொய்யோவென்று பரீக்ஷிக்க வரத்தைக்கொடுத்திருந்த ருத்திரன் மேலே கையைவைக்க உத்தியோகமாயிருக்கிற சமையத்திலே சாம்பலாய்ப்போகிறதுக்குப் பயந்து நடு நடுங்கிற ஈஸ்பரன் பில்விசூனிய தந்திரத்தினுலே மாயமாய்ப் போய்த் தன்னைப் பின்

சென்று வருகிற ரிஷியினுடைய சாபத்துக்குப் பயந்ததினாலே ஐ விரலிக்காய்க்குள்ளே ஒளித்துக்கொண்டான்.

அந்த விசேஷத்தைக் கேட்ட உபதேசியானவன் குருசுவாமி அவர்களைப்பார்த்து விண்ணப்பம் பண்ணினதாவது: அந்தச் சமையத்திலே தானே ருத்திரன் பயத்தினாலே க்ஷோபித்தெழுந்திருந்து தீவிரமாய்ப்போய்த் தேவரீருடைய சமுகத்திலே மனுஷர் வாக்கினாலே சொல்லப்படாத ஸ்தலத்தில் ஒளிந்திருந்தானென்று உலகத்தார் தானே சொல்லுகிறார்கள்.

அப்போது குருசுவாமியார் எந்த ஸ்தலத்துக்குப்போனாலும் பாரமல்ல ஆனதினால் இதில் அறியவேண்டிய விசேஷமாவது: விஷ்டுணுவென்கிறவன் நிர்மூலமாய் ருத்திரன் போகத் திரிகிறதைக்கண்டு உபாய தந்திரத்தினாலே பறபமாரிஷிக்கு அவலட்சணமான மோகினி வேஷத்தினிமித்தமாக மோசம் வருத்துவித்ததுக்குப் பிற்பாடு ஈசுரனிருக்கிற ஸ்தலத்துக்குப்போய் அவனைப் பார்த்துச் சொன்னதாவது: பயித்தியக்காரா விலயமாய்ப்போகத் திரிந்தாயே. யெந்தப் புத்திக்குறைச்சலாலே பறபமாரிஷிக்கு வரத்தைக் கொடுத்தாயென்று புத்தி சொன்னானும்.

கடைசியிலே சகலமான தெவர்களுடைய அபத்தமான ஆலோசனையை உற்றுக்கேளுங்கள்: விஷ்டுணு இராமாவதாரம் பண்ணுகிறதுக்கு முன்னே இராவணனைச் சங்காரம் பண்ணுகிறதுக்குச் சகலமான தேவர்களோடே ஆலோசனை பண்ணும்போது பிரதான தேவர்களைக் குரங்குகளாய்ப் பிரப்பிக்கக் கட்டளையிட்டானும். ஆனபடியினாலே விஷ்டுணு கட்டளையிட்டதின்படியே தேவேந்திரன் அங்குதனாய்ப் பிறந்து சூரியன் சுக்கிறீபனாகப் பிறந்து வாயுதேவன் அநுமந்தனாகப் பிறந்தான், வருணன் சுஷேணனாகப் பிறந்தான், குபேரன் கெந்தமாதனாகப் பிறந்தானென்று இராமாயணத்திலே ஆறும் சற்கத்திலே யெழுதியிருக்கிறது.

ஆனால் இப்படிப்பட்ட ஆலோசனையைப் பத்தும் பத்தாய் விசாரித்தோமானால், இதிலே மகாப் புத்திக் குறைச்சலைக் காண்பிக்கிறதென்று பிரசித்தமாகும். அவ்வண்ணமே இராவணனானவன் தேவர்களையெல்லாம் பிடித்துக் கீழ்ப்படுத்திச் சொற்கத்துக்குப்

போய்த் தேவேந்திரனை முதலாய்த் தனக்கு ஊழியம்பண்ணக் க ட்டளையிட்டதின்பிறகு இப்படிப்பட்ட தேவர்கள் குரங்குகளாய்ப் போனதுக்கு பிறகு அதிகமான பராக்கிரமத்தோடேயும் சூரத்தன த்தோடேயும் யுத்தம் பண்ணுவார்களோ? இப்படிப்பட்ட குரங் குகளை இராவணன் கண்டதினாலே மயங்கிப்போய்ப் பயந்தோடிப் போவானேன்?

அவனோடே கூடப்பிறந்தவனாகிற கும்பகாணன் அறுநூறு குரங்குகளாகவந்த தேவர்களை ஒருமிக்க நசுக்குவானென்று பெரு மூச்சு வாங்கிறதினாலே யெண்ணிக்கைக்குள்ளடங்காத குரங்குக ளை உறிஞ்சிக்கொண்டு பெருமூச்சு விடுகிறதிலே அதுகளை அம்பு களாலே யெய்தானென்றும் சொல்லுகிறார்களே. ஆனபடியினாலே இப்படிப்பட்ட ஆலோசனை புத்தியில்லாதவர்கள் மாத்திரம் பண் ணுவார்களொழிய புத்திமான்களும் விவேகிகளும் இப்படி யோசிக் கமாட்டார்கள்.

இந்த விசேஷத்தைச் சில உவமையினாலே வெளிப்படுத்து வோம். அதெப்படியெனில் அநேகம் சூரத்தனமுள்ள சேவகர் ப யங்கரமான இராக்ஷதரோடே பீரங்கித் துப்பாக்கி வாணங்கள் ம ந்திரவாட்கள் முதலான உச்சிதமான ஆயுதங்களைக்கொண்டு வியர் த்தமாய் அகோரமான யுத்தங்கள் பண்ணினபிறகு இப்படிப்பட்ட வஸ்திரமாகாதென்று சொல்லி கோரை அறுகு முதலான புல்லுக ளைச் சம்பாதித்து அந்த அபத்தமான ஆயுதங்களினாலே இராக்ஷத ரை சங்கரித்து வெல்லலாமென்று ஆலோசனை பண்ணினால் மனுஷர் என்ன சொல்லுவார்கள்?

இந்தப் பிரகாரமாக மதயானையை ஒரு ஸ்தலத்திலே முத லாய் அசையாமல் நிற்கத்தக்கதாக இருப்புச் சங்கிலியினாலே கட் டியும் பிரயோசனமில்லாதே போனால் இந்த அபிப்பிராயத்துக்கு வைக்கல் பழுதை உதவுமோவென்று குரு சுவாமி அவர்கள் திருவு ளம் பற்றின பிறகு உபதேசங் கேட்கிறவர்களைப்பார்த்து அருளிச் செய்ததாவது: நீங்கள் புத்திமான்களாய் இருந்து இந்தத் தேவர்க ளுடைய அபத்தமான ஆலோசனையைக் கேட்டதுக்குப் பிறகு இப் படிப்பட்ட தேவர்களை வணங்குகிறதுக்கு நியாயம் உண்டோ இல்

லேயோவென்று உங்களுக்குள்ளே ஆலோசனை பண்ணுங்களென்று சொன்ன பிறகு குருசுவாமி அவர்களுக்கு ஆசீர்வாதம் கொடுத்துப் போகச் சொல்லிக்கட்டளையிட்டார்.

## பராபரவஸ்துவின் தப்பில்லாத சத்தியம்.

### ௰௪-ம் சல்லாபம்.

திவ்வியமான உபதேசத்தைக் கேட்கிறவர்களுக்குள்ளே ஒருத்தன் குருசுவாமி அவர்களைப் பார்த்து விண்ணப்பம் பண்ணினதாவது: அநேகம் பேர்கள் ஒரு உடமை காணாதே போனால் இப்படிப்பட்ட உடமை யார் வசத்திலிருக்கிறதென்று அறியத்தக்கதாக ஆசையாயிருந்து தினம் தினம் கோணங்கிகளைக் கேட்பார்கள். இந்தப் பிரகாரமாக வருங்காரியத்தை அறியத்தக்கதாக ஆசையுள்ளவன் பில்லிசூனியக்காரன் கிட்டப்போய் இதுக்கு வழியென்னவென்று கேட்கிறார்கள். புரோகிதர், கோணங்கிகள், பில்லி சூனியக்காரர் முதலானவர் சொல்லுகிற விசேஷங்களை விசுவசிக்கலாமோ என்னமோவென்று கேட்டதுக்குக் குருசுவாமி அவர்கள் திருவுளம் பற்றினதாவது:

பஞ்சாங்கக்காரரும் புரோகிதரும் கோணங்கி முதலானவர்களும் பிரதிதினம் பிரசித்தமான தப்பறைகளைச் சொல்லுகிறதினாலே, அவர்களுடைய வார்த்தைகளை நம்புகிறதுக்கு நியாயமில்லை. இதெல்லாம் விஸ்தாரமாய்ச் சவன நிவாரணத்திலே ஒப்பிவிக்கப்பட்டதாயிருக்கிறது. பில்லி சூனியக்காரரோவென்றால் பசாசைக் கொண்டு வருங்காரியத்தை அறியத்தக்கதாகப் பிரயாசப்பட்டாலும் மனுஷரைப் பார்க்கப் பசாசானது கூர்மையுள்ள புத்தியைக் கொண்டிருந்தாலும் சுபாவமாய்த் தப்பறைக்காரனாயிருக்கிறதினாலே மனுஷரை ஏய்க்கிறதுக்கு எண்ணிக்கைக்குள்ளடங்காத உபாய தந்திரங்களைப் பண்ணிக்கொண்டு வருகிறதினாலேயும் சுதந்தரமுள்ள மனதிலே வருங்காரியங்களை நிதானமாய் அறியப்படாதென்கிறதினாலேயும் சிலதுகளை அறிந்திருந்தாலும் அதுகளை வெளிப்படுத்தத்தக்கதாகப் பராபர வஸ்துவானவர் அநேகம் விசை உத்தாரம் கொடாததினாலே, முன் சொல்லப்பட்ட பசாசு அநேகம் விசை பொய் சொல்லுகிறதென்று சந்தேகமில்லை.

இதுக்கான சரித்திரங்களை உங்களுக்குச் சொல்லிக்காட்டுவோம். அதெப்படியென்றால் சில வருஷத்துக்கு முன்னே யுதைய இராச்சியத்திலே செம்ரபாவென்கிற நாமத்தைக் கொண்டிருக்கிறவன் இராச்சியபாரம் பண்ணும்போது அவனுடைய இரண்டு கப்பல் மகா சீன இராச்சியத்திலிருந்து எப்போ வருமென்று மிகுந்த ஆசையோடே பார்த்துக்கொண்டிருக்கிற சமையத்திலே துரைக்குப் பிரியமான வார்த்தை சொல்லத்தக்கதாக ஆசையாயிருக்கிற பூசாரி ஒருத்தன் பில்லி சூனிய தந்திரத்தினாலே தான் வணங்கிற விக்கிரகத்தின் மேலே பசாசை வரப்பண்ணினதுக்குப் பிறகு பசாசு பதினைந்து நாளுக்குள்ளாக சத்தியமாகக் கப்பல் வருமென்று சொன்னதாம்.

அப்போது பூசாரி சந்தோஷப்பட்டு அரண்மனைக்குத் தீவிரமாய்ப்போய்ச் சம்பவித்த செய்தியை இராசாவுக்கு அறிவித்தான். ஆனால் அந்த வருஷத்திலே கப்பல் வராததினாலே இராசாவானவன் பூசாரியை அழைப்பித்து அவனுடைய தோள்மேலேப் பசாசினுடைய விக்கிரகத்தைக்கட்டிப் பசாசும் பூசாரியும் தப்பறை சொன்னதினாலே இரண்டு சவுக்காலே நாலு வீதியிலேயும் பசாசையும் பூசாரியையும் அடிக்கக் கட்டளையிட்டான். இப்படிப்பட்ட இராசாவைப்போல வேறே துரைகள் நியாயத்தின்படியே காரியங்களை நடத்தினால் பசாசினால் மனுஷருக்கு அத்தனை மோசம் வரப்போகிறதில்லை.

ஆனால் பராபரவஸ்து மாத்திரம் தப்பில்லாத சத்திய சுரூபியாய் இருக்கிறார். இந்தப் பராபரவஸ்துவினுடைய பரம சத்தியத்தைக் கண்டுபிடிக்கிறதற்கு அறியவேண்டியதாவது: பரம சத்தியத்துக்கு இரண்டு காரியம் வேண்டியது. அது எப்படியென்றால் ஞானமும் பிரமாணிக்கமும் அவசியமாய் வேணும். ஞானத்தினாலே காரியங்களை எல்லாம் சம்பூரணமாய் அறியவேணும். பிரமாணிக்கத்தினாலே அறிந்ததற்குத் தக்கது சொல்லவேணும். இது நிமித்தமாக உண்டாக்கப்பட்ட வஸ்துக்களுக்குள்ளே சத்தியம் ஒரு பிரகாரமாக உண்டென்று சொன்னாலும் பரம சத்தியம் பராபரவஸ்துவினிடத்திலே மாத்திரம் சுபாவமாய் இருக்கிறதென்று அங்கீகரிக்கக்கடவோம்.

அவ்வண்ணமே கடவுளானவர் தம்முடைய மட்டில்லாத ஞான த்தினாலே சகலமான வஸ்துக்களுடைய சுபாவத்தையும் குணத்தை யும் அளவறுத்துக்கொண்டு வருகிறதுந்தவிர பிரமாணிக்கத்தி னாலே மட்டில்லாத சுபாவமாய் அறிந்ததை அருளிச்செய்கிறதி னாலே அவர் திருவுளம்பற்றின வார்த்தைகள் எல்லாம் தப்பில் லாத சத்தியமாகும். ஆனபடியினாலே மோசம் போகவுமாட்டாத அப்தனாகிற கடவுளானவர் ஒரு வார்த்தைப்பாடு கொடுத்தால் அல் லது திவ்வியமான வசனத்தைத் திருவுளம்பற்றினால் உலகமெல் லாம் போனாலும் தப்பில்லாத சத்தியத்தைக் கொண்டிருக்கிற பரா பரவஸ்துவினுடைய வார்த்தை ஒருக்காலும் போகாது. பராபர வஸ்துவினிடத்தில் மட்டில்லாத ஞானம் உண்டென்று போன பிர சங்கத்தில் ஒப்பிவித்தாப்போல் ஆயிற்றே. தப்பில்லாத பிரமா ணிக்கம் கடவுளிடத்திலே இருக்கிறதென்று எளிதாய்க் கண்டுபிடி க்கலாம். அதேதென்றால் தப்பில்லாத பிரமாணிக்கம் கனமான நன்மையாய் இருக்கிறதினாலே சகல நன்மைச் சுபாவமாய் இருக் கிற பராபரவஸ்துவினிடத்திலே பிரகாசிக்குமென்று முழுமன தோடே அங்கீகரிக்கக்கடவோம்.

இதெல்லாம் இப்படி இருக்கையிலே பிர்மா, விஷ்ணு, ருத்தி ரன் முதலானவர்கள் அடிக்கடி தப்பறைகளைச் சொன்னதினாலே யும் பொய்யாணை இட்டதினாலேயும் வார்த்தைப்பாடு செலுத்தாததி னாலேயும் கபடமாக ஏய்க்கிறதினாலேயும் தேவர்களாய் இராமல் உலக மனுஷரைப்பார்க்கத் தப்பறைக்காரர்களாய் இருக்கிறார்களெ ன்று காண்பிக்கிறது.

அதெப்படியென்றால் பூர்வகாலத்திலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் மும்மூர்த்திகளுக்குத் தேவ தத்துவத்தின்பேரிலே கன மான தர்க்கம் உண்டாயிற்றதாம். அவனவன் தன்னைப் பெரியவனெ ன்று சொல்லி மற்றவர்களை எல்லாம் சட்டைபண்ணாததினாலே ருத்திரனானவன் இதற்குப் போகிறவழி ஏதென்று விசாரித்துச் சொன்ன உபாயமாவது: நான்தானே என்னுடைய தலையை ஒரு ஸ்தலத்திலே ஒளித்துப்போட்டு வேறே ஸ்தலத்திலே என்னு டைய காலை ஒளித்துப்போடுகிறேன். இப்படிப்பட்ட அவயவங்களை

உங்களுக்குள்ளே யாதொருத்தன் கண்டுபிடித்தால் அவன்தான் எல்லாருக்கும் தேவனென்று சொல்லுகையில் எல்லாரும் சம்மதித்தார்கள்.

ஆனபடியினாலே பிர்மா அன்ன அவதாரம் எடுத்து ஆகாயத்திலேறி அங்கங்கே பார்த்தாலும் ஒன்றும் காணாததினாலே துக்க சாகரத்தில் அமிழ்ந்தி மிகவும் சிந்தாகிராந்தனாய் இருக்கிற சமயத்திலே ருத்திரனுடைய தலையிலேயிருந்த ஓலைப்பூத் தரையிலே விழுகிறபோது பிர்மாவைக்கண்டு அவனை நமஸ்கரித்து அவன் துக்கமாய் இருக்கிறதற்குக் காரணம் ஏதென்று கேட்டதினாலே பிர்மாவானவன் ருத்திரனுடைய தலையை அங்கங்கே தேடி அதைக் கண்டுபிடியாததினாலே அங்கலாய்க்கிறேன் என்றானாம்.

அத்தருவாயிலே ஓலைப்பூ நான்தான் ருத்திரனுடைய தலையிலே இருந்ததினாலே ருத்திரனிருந்த ஸ்தலத்தை உமக்குச் சொல்லிக்காட்டுவேன். அதெப்படியென்றால் இதுக்கும் அதுக்கும் செவ்வே பார்த்தால் ருத்திரனுடைய தலையைப்பார்க்கலாம். ஆனால் தேவரீர் கால்வாசிமாத்திரம் பறந்ததினாலே இன்னம் வெகுவாய்ப் பிரயாசப்படவேணுமென்று சொல்லிற்றாம். அப்போது பிர்மா வெகு கஸ்திப்பட்டு தனக்கதிகமாய்ப் பெலனில்லையென்று கண்டு இந்தக் காரியத்திலே ஓலைப்பூவைப் பொய்சாக்ஷி சொல்லத்தக்கதாகக் கேட்கையிலே ஓலைப்பூ சம்மதித்ததாம்.

ஆனபடியினாலே சிலநாளைக்குப் பிற்பாடு மும்மூர்த்திகள் குறித்த ஸ்தலத்திலே பிர்மா, விஷ்ணு, ருத்திரன் வந்தபிறகு ருத்திரன் என்கிறவன் பிர்மாவையும் விஷ்ணுவையும் பார்த்துச் சொன்னதாவது: இனி எங்களுக்குள்ளே கர்த்தத்துவத்தின்பேரில் சண்டை வரப்போகிறதில்லை. அதேதென்றால் நீங்கள் என்னுடைய பாதத்தையும் சிரசையும் கண்டுபிடிக்கமாட்டாமல் வியர்த்தமாகப் பிரயாசப்பட்டதினாலே நான்தான் எல்லாத்துக்கும் தேவனென்று சொல்லுகையில், பிர்மா அப்படியல்ல; நான்தான் ஆகாயத்திலேறிப் பறக்கும்போது உன்னுடைய தலையிருக்கிற ஸ்தலத்துக்குப்போய் உன்னுடைய தலையைக் கண்டதுமல்லாமல் உன்னுடைய தலைமேலிருந்த ஓலைப்பூவைப் பார்த்தேன்; இதற்கு ஓலைப்பூ

சாக்ஷியாய் இருக்குமென்று சொன்னான். அப்போது எல்லாருக்குமுன்பாக ஓலைப்பூ பிர்மா சொன்னது சத்தியந்தானென்று சொல்லிற்றும்.

அந்தச் சமயத்திலே ருத்திரன் பயங்கரமான கோபமார்க்கத்தோடே பிர்மாவையும் ஓலைப்பூவையும் பார்த்து பிர்மாவே நீ பிரத்தியட்சமான தப்பறையைச் சொன்னதினாலே மனுஷர் உன்னுடைய ஸ்தோத்திரத்திற்காக தேவாலயம் கட்டப்போகிறதில்லையென்று சபித்ததற்குப்பிறகு ஓலைப்பூவை எறிந்துபோட்டுத் தனது சமூகத்திலே ஒருக்காலும் வரவேண்டாமென்று விலக்கினாலும். அந்தச் சாபத்தின் நிமித்தமாக ருத்திரனை வணங்குகிற ஆண்டிகள் ஓலைப்பூவின்பேரிலே பரிபூரண அருவருப்பாய் இருந்து அந்தப் புஷ்பத்தைக்கொண்டு லிங்கத்திற்கு ஒருக்காலும் அர்ச்சனை பண்ணப்போகிறதில்லையாம். பின்னையும் ருத்திரன் சாபத்தின் நிமித்தமாக பிர்மாவுக்கு ஒரு தேவாலயமும் இல்லையாம்.

அத்தறுவாயிலே உபதேசங்கேட்கிறவர்களுக்குள் ஒருத்தனிருந்து குருசுவாமியைப் பார்த்து விண்ணப்பம் பண்ணினதாவது: பிர்மாவானவன் பிரசித்தமான தப்பறை சொன்னதினாலே சபிக்கப்பட்டால் ருத்திரன்தானே சத்தியத்தின்பேரிலே பிரியமாயிருந்து பிரமாணிக்கனாய் இருக்கிறானென்று காண்பிக்கிறதென்றான்.

அப்போது குருசுவாமி அவர்களிருந்து ருத்திரனைப்பார்க்கத் தப்பறைக்காரன் இல்லையென்று சந்தேகமில்லை. ஆனால் அவன் சொன்ன பொய்யாணைகளும் தப்பறைகளும் இங்கே வெளிப்படுத்துகிறதற்கு விஸ்தீரணமாய் இருக்கிறதினாலே அவனுடைய பொய்ச் சத்தியங்களுக்குள்ளே ஒன்று இரண்டுமாத்திரம் இங்கே சொல்லிக் காட்டுவோம். அதெப்படியென்றால் பார்வதியானவள் தன்னுடைய புருஷனாகிற ருத்திரன் அனேகம் தாறுமாறுகளைப் பண்ணினானென்றும் அடிக்கடி பரஸ்திரீ வீட்டுக்குப் போயிருக்கிறானென்றும் மோகத்தினுடைய துற்கந்தச் சேற்றிலே அமிழ்ந்தி இருக்கிறானென்றும் பார்த்து அவனைக் கடினமாய்க் கோபித்ததினாலே ருத்திரனானவன் பயந்து தேவதாசிகள் வீட்டில் தான் ஒருக்காலும் போகிறதில்லையென்று ஆணை இட்டானாம்.

அதின் பிறகு தன்னுடைய துர்குணத்தின் நிமித்தமாகப் பரஸ்திரீகளோடே தாறுமாறுய்த் திரிந்ததினுலே இந்த வண்டத் தனத்தைக் கண்ட பார்வதியானவள் தனதண்டைக்கு ருத்திரன் வருகிறபோது மகா கோபத்தோடே கதவை அடைத்தாளாம். பிர த்தியிலே இருக்கிற ருத்திரன் மகா கஸ்திப்பட்டு அறியாமல் செய்தேனென்று சொல்லிக் கூப்பிட்டாலும் பார்வதி சிவனுடைய வார்த்தையைக் கேளாமல் சலஞ்சாதியாய் இருந்தபடியினுலே ருத்திரனுக்கு ஒத்திக்கையாக அநேகம் தேவர்கள்வந்து ஸ்தாணுபதிகளைக்கொண்டு காரியத்தை முகித்துப் போட்டதாவது: ருத் திரன் செய்த குற்றங்களுக்காக அடிபடப் பாத்திரமாய் இருந்தா லும் மனுஷர் அவனைப் பரியாசம் பண்ணுதபடிக்குப் பார்வதியோ டே இருக்கிற தாதிகள் ருத்திரனுடைய பிறகே திரிகிறவர்களை அடி க்க எல்லாரும் சம்மதித்தார்கள். இதற்கடையாளமாக வருஷந்தோ றும் திருநாள் கொண்டாடுகிறபோது தேவதாசிகள் மட்டைகளி னுலே ருத்திரனுடைய ஸ்தானத்திலேயிருக்கிற பிராமணரை அடி க்கிறுர்களென்று பிரசித்தமாகும்.

இந்தப்பிரகாரமாக ருத்திரன் பரம ஈசுரனைப்பார்த்து எந்தெந் தக் காரியத்தைத் தொட்டாலும் அதைச் சாம்பலாக்குகிற வரத்தை பரம ஈசுரனுக்குக் கொடுத்தபிறகு ருத்திரன் தன்னுடையபேரிலே இப்படிப்பட்ட வரத்தைச் சோதிக்க வருகிற பரம ஈசுரனுக்குப் பய ந்து ஐவிரலிக்காய்க்குள்ளே புகுந்துகொண்டிருந்தானும். அத்த றுவாயிலே மோகினி வேஷத்தோடே வந்த விஷ்டுணுவைப் பரம ஈசுரன் கண்டவுடனே புணர்ச்சி பண்ணத்தக்கதாக அபேட்சையா ய் இருந்ததினுலே விஷ்டுணு பின்வாங்கிறைப்போலே நீ மகா அசுத் தமாயிருந்து உன்னுடைய தவசின் மிகுதியினுலே காக்கை முத லான பட்சிகள் உன்னுடைய தலைமேலே எச்சமிட்டதினுலே ஆற் றுக்குப் போய்த் தலையைத் தேய்த்துக்கொண்டு நன்றுய் ஸ்நானம் பண்ணிவாவென்று சொன்னுனும். அத்தறுவாயிலே பரம ஈசுரன் நதிக்குப் போய்த் தண்ணீரிலே இறங்கித் தன்னுடைய தலையைத் தொட்டவுடனே சாம்பலாய்ப் போனுன்.

அப்போது ருத்திரன் ஒளிந்துக்கொண்டிருக்கிற ஸ்தலத்து

க்குப் போய் நடந்த செய்திகள் எல்லாத்தையும் அவனுக்கு அறிவித்த பிறகு விஷ்டுணு எடுத்த மோகினி வேஷத்தை ருத்திரன் பார்க்க ஆசையாயிருந்து அப்படிப்பட்ட வேஷத்தைத் தனக்குக் காண்பிக்க மன்றாடுகையிலே விஷ்டுணு ருத்திரனைப் பார்த்துச் சொன்னதாவது: உன்னுடைய குணத்தை அறிந்திருக்கிறேன்; அந்த வேஷத்தோடே நீ என்னைக் கண்டவுடனே மோகத்தினுடைய வெறியைப் பொறுக்கமாட்டாமல் உன்னுடைய பொல்லாத இச்சைக்கு நான் சம்மதிக்கிறதுக்கு உபாயம் பண்ணுவாய் என்றான். இதுக்கு ருத்திரன் இருந்து நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டாம்; அப்படி வரப்போகிறதில்லையென்று வார்த்தைப்பாடு கொடுத்தானும். ஆனபடியினாலே முன் காண்பித்த மோகினி வேஷத்தோடே விஷ்டுணுவானவன் ருத்திரன் கிட்ட வந்தவுடனே ருத்திரன் விஷ்டுணுவை மோகித்துப் பயித்தியக்காரனைப்போலே பின்துடர்ந்து கட்டாயத்தின்மேலே மதுனம் பண்ணி அவர்களுக்கு அரிகரி புத்திரன் பிறந்தானும்.

கடைசியிலே விஷ்டுணுவும் பிரமாணிக்கனாயிராமல் ரிஷிகளுடைய ஸ்திரீகளைக் கெடுக்கிற நீசமான கபடு பண்ணினதுந்தவிர ருத்திரனைப்போலே ஆணையை மீறி வார்த்தைப்பாடு தப்பி சுத்த தப்பலறக்காரன் என்கிற பேருக்குப் பயப்படாமல் வெட்கமும் இலட்சையுமில்லாமல் துற்கந்த மோகச்சேற்றிலே அமிழ்ந்திருந்தான்.

இதன்றியே விஷ்டுணு இராம அவதாரத்திலே சீதாதேவியோடே விவாகம்பண்ணின நாளையிலே சீதை இராமனுடைய காலைப் பிடிக்க மாட்டேனென்றதினாலே விஷ்டுணு இதுக்குக் காரணத்தைக் கேட்கையில் சீதாதேவி தேவரீர் இராசதானிப்பட்டணத்திலே வரும்போது உம்முடைய பாதத்தினாலே கல்லைத் தொட்டவுடனே இப்படிப்பட்ட பாறை இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட மகா அழகுள்ள பெண்பிள்ளைகளாய்ப் போனதினாலே, வச்சிரம் கெம்புகளைக் கொண்ட மோதிரங்களைத் தரித்த என் கையினால் உம்முடைய பாதத்தைத் தொடும்போது, இப்படிப்பட்ட விலையேறப்பெற்ற இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட இந்தச் சொற்கத்துப்

பெண்களைக் கண்டவுடனே என்னைச் சட்டைபண்ணுமல் அவர்க ளோடே சிக்குவீரென்று நான் பயந்து உம்முடைய வார்த்தையை க் கேளாமல் சும்மா இருக்கிறேன்.

ஆனால் தேவரீர் இப்படி வாராதென்று எனக்கு உத்தாரங்கொடு த்து ஆணையிட்டால் தேவரீர் சொன்னப்போலே கேட்பேனென்று சொன்னாள். அப்போது இராமன் சீதையைப் பார்த்து பிரத்தியுத் தாரம் சொன்னதாவது: நான் எந்தெந்தக் காரியம் வந்தாலும் உ ன்னைவிட்டுப் பிரியத்தக்கதில்லை என்று அக்கினிபகவான் ஆணை யென்று விளக்கைச் சாக்ஷிவைத்துத் தப்பில்லாத வார்த்தைப்பாடு கொடுத்தானும். அதின்பிறகு ஒரு நீசனான வண்ணான் அபத்தம் சொன்னதினுலே குற்றமில்லாத சீதாதேவியைத் தள்ளினுனும ல்லோ? ஆனபடியினுலே விஷ்டுணுவுக்குப் பிரமாணிக்கமேது? சத் தியமேது?

இந்தப்பிரகாரமாக விஷ்டுணு வாமன் அவதாரத்திலே பெலி யைக் கபடமாகக் கொன்றுபோட்டான். அதெப்படியென்றால் பெ லியாகிற இராக்ஷதன் யாகம் பண்ணும்போது யாராகிலும் எ ந்தெந்தக் காரியத்தைக் கேட்டாலும் இல்லையென்காமல் கொடுப் பேனென்று வார்த்தைப்பாடு கொடுத்திருக்கையிலே விஷ்டுணு வா மன் அவதாரத்தை எடுத்துப் பெலியினுடைய யாகசாலைக்கு வந்து மூன்றடி பூமி கேட்டதினுலே பெலி முழுமனதோடே சம் மதித்தான். அப்போது வாமன் பூமியை அளக்கத்தக்கதாகக் காலை நீட்டுகிறபோது பெலியினுடைய சீர்மையெல்லாம் அடங்கினதும ல்லாமல் பூமியெல்லாம் ஒரடிக்குள்ளே அடக்கி இரண்டாம் அ டியை பெலிமேலேவைத்து தேய்த்துப்போட்டானும். ஆனபடியி னுலே விஷ்டுணுவுக்குப் பிரமாணிக்கம் உண்டானுல் இந்த அபத்த மான கபட்டினுலே மனுஷரை எய்த்துப்போடலாமோ? இராக்ஷ தனை சங்கரிக்க மனதுண்டானுல் இந்த அபத்தமான கபட்டினுலே பொய் சொல்லாமல் செயிக்கக்கூடாதோ?

பின்னையும் இராமன் சுமேதியாகம் பண்ண உத்தியோகமாய் இருக்கும்போது அதுக்கான குதிரைகளையும் சேனைகளையும் தெரி ந்துகொண்டு எங்கும் அனுப்புகையில் வாமனென்கிறவன் இப்படிப்

பட்டயாகக் குதிரையைப் பிடித்து வாழைமரத்திலே கட்டி இராமனுடைய இராணுவங்களைச் சங்கரித்து மிஞ்சினவர்கள் போய் நடந்த வர்த்தமானமெல்லாம் இராமனோடே சொல்லிக் கொண்டிருக்கையிலே இராமனிருந்து நான் அதிஷ்டனாயிருக்கிறேன். இப்படிப் பட்ட தீட்சை பெலத்தினாலே ஒருக்காலும் யுத்தம் பண்ணத்தக்கதில்லையென்று வரர்த்தைப்பாடு கொடுத்தான். ஆனதினாலே எனக்கு யுத்தம் பண்ணுகிறதுக்குக் கர்த்தத்துவமில்லையென்று சொன்னானும்.

இதெல்லாம் இப்படி இருக்கையிலே இராமன் தன்னுடைய சேனைகளுக்கு வெகு தோர்வை வந்ததென்று கேட்டதினாலே வலியத் தானே புறப்பட்டு அகோரமான உத்தம பண்ணும்போது செத்தானும். ஆனபடியினாலே விஷ்டுணு மனுஷருக்குப் போய் சொல்லி எய்த்துப்போடுகிறதுந்தவிர தான் வணங்குகிற தேவர்களுக்குக் கொடுத்த வார்த்தைப்பாட்டை மீறினானென்று பிரசித்தமாகும்.

இப்படியே ரங்கனாகிற விஷ்டுணு வேசிமேலே ஆகாத பக்ஷமாய் இருந்து அவளுக்கு விலையேறப்பெற்ற மோதிரத்தைக் கொடுத்ததுக்கு பிற்பாடு விஷ்டுணுவுடைய பெண்சாதி தன்னுடைய புருஷனாகிற ரங்கநாதன் பரஸ்திரீகளோடே தாறுமாறாய்த் திரிகிறானென்று அசுகையினால் அறிந்து அவனுடைய கையிலே முன் சொல்லப்பட்ட மோதிரமில்லாததினாலே அவசியமாய் வெள்ளாட்டிக்குக் கொடுத்தானென்று விசுவசித்தாள். ஆனபடியினாலே மிகுந்த கோப மிகுதியினால் இரங்கனாதனோடே சண்டைக்கு நிற்கையில் ரங்கநாதன் பயந்து பெண்சாதியை மயக்கத்தக்கதாக மோதிரம் மணலுக்குள்ளே விழுந்ததென்று பொய் சொன்னான்.

ஆனால் அவனுடைய வார்த்தையை நம்பாமல் தப்பறை சொன்னானென்று ஒப்புவிக்கத்தக்கதாகச் சல்லடை கொண்டுவந்து மணலெல்லாம் சலித்துப் பார்த்ததுக் கடையாளமாக இப்போ வருஷந்தோறும் ரங்கநாதன் கோவிலிலே சல்லடை இடுகிறார்கள்.

அதெப்படியென்றால் பங்குனி மாதத்திலே ரங்கநாதனுடைய விக்கிரகத்தைப் பல்லக்கிலே வைத்துக்கொண்டு உறையூர் நாச்சியாரம்மன் கோவிலுக்குக் கூட்டிக்கொண்டுபோய்த் திரும்ப வரு

கையில் அவனுடைய குலஸ்திரீயாகிற ஸ்ரீரங்கநாச்சியார் கோவில் வாசலிலே பார்த்துக் கொண்டிருக்கிற பல ஸ்திரீகள் ரங்கநாதன் இராத்திரி வெள்ளாட்டி வீட்டுக்குப் போனுனென்றும் இங்கே வர வேண்டாமென்றும் அநேகம் விசை சொல்லுகிறதுமல்லாமல் அந்தக் குற்றத்துக்கு அவதாரமாகப் பழத்தினுலேயும் பந்தினுலே யும் எறிவார்கள். இரங்கனுதனுடைய ஸ்தானத்திலிருக்கிற பிராமணர் இராத்திரி அங்கே போகவில்லையென்றும் கிட்டவிருந்தே னென்றும் இது முதலான அநேகம் தப்பறைகளைப் பிரசித்தமாகச் சொல்லி எத்தனை பிரயாசப்பட்டாலும் சலஞ்சாதியாயிருக்கிற ஸ்ரீரெங்கநாச்சியாருக்காகப் பேசுகிற தேவதாசிகள் இங்கே வரவே ண்டாமென்றும் வெள்ளாட்டி வீட்டுக்குப் போனுனென்றும கூப் பிட்டுத் தள்ளுவார்கள்.

பின்னையும் ஸ்ரீரெங்கநாச்சியாருடைய பெரிய ஆள்வாரென்கிற தகப்பனுடைய வேஷத்தோடே வருகிற ஒருத்தன் மகளுக்கு எத்த னை புத்தி சொன்னுலும் மருமகனுக்குப் பொறுத்தல் கொடுக்கச் சொல்லி மகளை மன்றுடினுலும் அவனுடைய வார்த்தைகளை மகள் சட்டைபண்ணுமல் அவசியமாய் வெள்ளாட்டி வீட்டுக்குப் போ னுனென்றும் அவன் இங்கே வரவேண்டாமென்றும் கோபத்தோ டே சொல்லுவாள்.

இந்தப்பிரகாரமாகப் போகவும் வாவும் ஒருசாமம் சிலவழிந்த பிறகு ஸ்ரீரெங்கனுச்சி தன் புருஷனுக்குக் கொடுத்த மோதிரத்தைக் காணுததினுலே வெள்ளாட்டிக்குக் கொடுத்தானென்று சொல்லு கையில் இரங்கனுதனிருந்து நான் ஒருத்தருக்கும் கொடுக்கவில்லை; வழியிலே வருகிறபோது மணலிலே விழுந்து போச்சுதென்று சொ ல்லுவானும். ஆனபடியினுலே சமாதானமாய்ப் போகிறதுக்கடை யாளமாக ஸ்தானுபதியாகிற ஒரு விக்கிரகத்தையும் சல்லடையும் ஒரு மரத்திலே கொண்டுபோய் நன்றுய் ஸ்னுனம் பண்ணி மோதி ரத்தை கொண்டுவந்து கொடுத்ததுக்குப் பிற்பாடு கதவைத் திற ப்பாளாம். இதுக்குச் சாக்ஷி இலட்சம் பேர்.

இதன்றியே சிவன் சுந்தரப்பெருமாளுக்கு வெள்ளாட்டிகளைத் தேடிக்கொண்டு அவலட்சனமான தொழிலுக்கு தூது நடந்த பிற

கு சிவனுக்காக சுந்தரப்பெருமாள் பொய் ஆணை இட்டானும். கடைசியிலே சகலமான தேவர்களும் இராக்ஷதர்களும் கூடஅமிர்தத்தைத்தேடுகிறபோது இராக்ஷதருக்கு ஒரு பங்கு கொடுப்போமென்று தேவர்கள் வார்த்தைப்பாடுகொடுத்தாலும் அவர்களை எய்த்துப்போட்டார்களாம்.

## பராபர வஸ்துவினுடைய அளவில்லாத நீதி

### ௰உ-ம் சல்லாபம்.

சத்தியபோதக சுவாமிஅவர்களும் அவருடைய சிஷர்களும் சற்றுநேரம் நடந்ததுக்கு பிற்பாடு சித்திரச்சாவடியிலே பிரவேசம் பண்ணி அதிலே அதிசயமான படத்தைக் கண்டார்கள் அதெப்படியென்றால் மகா அலங்காரமான இராக்கினியானவள் பத்திராசனத்திலே மகிமையோடே இருந்து வலதுகையிலே முத்து இரத்தினங்களினாலே சிங்காரிக்கப்பட்ட முடியைப் பிடித்துக்கொண்டு இடது கரத்திலே சிலதுபேரை அதட்டின பயங்கரமான கத்தியையும் தன்னுடைய பாதத்திலே சுமுத்திரையான திராசும் வைத்துக்கொண்டிருந்தாள். இப்படிப்பட்ட இராக்கினியினுடைய சமுகத்திலே உண்டான பிரசைகளுடைய முகமெல்லாம் பட்டுச் சீலையினாலே மூடிக்கொண்டிருந்தது.

இப்படிப்பட்ட படத்தினுடைய அர்த்தத்தைக் கண்டுபிடிக்கமாட்டாத சிஷர்களுக்குக் குருசுவாமிஅவர்கள் திருவுளம் பற்றினதாவது; இந்த மகிமையான இராக்கினியானவள் நீதி யென்கிற புண்ணியத்தினுடைய சுரூபமாயிருக்கிறது. வலதுகையிலுண்டான விலையேறப்பெற்ற முடி நல்லவர்களுக்கு வருகிற சம்பாவனைக் கடையாளம், இடது கையிலுண்டான கத்தி துஷ்டர் நிற்கிரகத்துக்கு இலட்சணம். பாதத்திலே இருக்கிற திராசு அங்கேயும் இங்கேயும் சாயாமல் காரியங்களை எல்லாம் சுமுத்திரையாய் நீதியாய் நடத்துகிறதென்று அர்த்தமாகும். கடைசியிலே நீதி என்கிற புண்ணியம் முகத்தைப் பாராமல் காரியங்களெல்லாம் சுமுத்திரையாய் நீதியாய் நடத்துகிறதென்று அடையாளமாக இந்த இராக்கினியினுடைய சன்னதியிலே நிற்கிறவர்களுடைய முகம் மூடியிருக்கிறது.

இப்படிப்பட்ட நீதியானது மனுஷருக்குள்ளே அபூர்பமாயிருந்து பராபர வஸ்துவினிடத்திலே சாங்கோபாங்கமாக பிரகாசிக்கிறதென்று சத்தியமாகும். ஆனால் இங்கே எவ்வளவாகிலும் நீதியினுடைய சுபாவத்தைக் கண்டுபிடிக்கிறதுக்கு இந்த விஷயத்தில் அறியவேண்டிய சில விசேஷங்களை சங்க்ஷேபமாகச் சொல்லிக் காட்டுவோம்: அதெப்படியென்றால் நீதியானது பிரத்தியாருக்குச் செய்யத்தக்க எல்லாத்தையும் சுமுத்திரையாகப் பண்ணுகிறது. ஆனபடியினாலே கடனில்லாமல் நன்மை செய்தால் நீதியாயிராமல் உதாரமாயிருக்கும். ஆனால் கடன் பலபலவகை உண்டாயிருக்கிறதினாலே நீதியினுடைய அநேகம் வகை இருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை. இதெல்லாம் விஸ்தீரணமாய் இருக்கிறதினாலே இம்மாத்திரம் சொல்லிக் காட்டினது போதும். பராபரவஸ்துவினிடத்திலே இஷ்டபரிபாலனுமாய் துஷ்ட நிற்கிரகனுமாயிருக்கப்பண்ணுகிற நீதியானது பிரகாசிக்கிறதுந்தவிர வார்த்தைப்பாடு செலுத்துகிற நீதி மிகவும் விளங்குகிறதென்று சந்தேகமில்லை. ஆனால் இந்த நீதியினுடைய விஷயத்திலே பிரமாதிகள் பண்ணுகிற தற்கங்களைவிட்டுப் பராபர வஸ்துவின் பேரிலே கடினமான கடன் சுமந்திருக்கிறதோ இல்லையோவென்று சோதியாமல் பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலானவர்களிடத்திலே பிரசித்தமாய்க் காண்பிக்கிற அநியாயங்களைச் சொல்லிக்காட்டுவோம்.

அதெப்படியென்றால் தப்பில்லாத நீதியைக் கொண்டிருக்கிறவன் பராபரவஸ்துவுக்குச் செய்பத்தக்க பூசை நமஸ்காரம் அர்ச்சனை இதுமுதலான வழிபாடுகளைச்செய்துகொண்டு தேவனல்லாத வஸ்துவை உத்தமமான ஆராதனை பண்ணப்போகிறதில்லையென்று நீதிசாஸ்திரமெல்லாம சங்கேதம் பண்ணினார்கள். இந்தக் கெட்டியுள்ள நியாயத்தினாலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலானபேர்கள் தேவர்கள் அல்லவென்று பிரசித்தமாய் ஒப்பிவிக்கலாம்.

அதெப்படியென்றால் பிர்மாவும் தேவேந்திரனும்முப்பத்திமுக்கோடி தேவர்களும் விஷ்டுணுவை நமஸ்கரித்து ஆராதனை பண்ணினார்களென்று இராமாயணத்திலே சொல்லி இருக்கிறது. விஷ்டுணுவோ வென்றால் இராமவதாரத்தில் அக்கினிபகவான் சூரியன்

முதலான தேவர்களை ஆராதித்ததுந் தவிர பிர்மத்தி பண்ணினதினாலே அஸ்வமேதியாகம் பண்ணினானென்று பிரசித்தமாச்சுது.

பின்னையும் விஷ்டுணுவெடுத்த நரசிங்க அவதாரத்திலே யிரணியனிரத்தத்தைக் குடித்ததினாலே வெறியையும் பயித்தியத்தையும் அடைந்திருக்கும்போது ருத்திரன் இப்படிப்பட்ட பயித்தியத்தையும் வெறியையும் போக்கினதினாலே விஷ்டுணு ருத்திரனுக்குப் புஷ்பங்களை அற்சிக்கமனதாயிருந்து பூக்குறைந்ததினாலே தன்னுடைய கண்களைப் பிடுங்கி ருத்திரனுடைய பாதத்திலே அற்சித்தானும்.

ருத்திரனோவென்றால் வேறே தேவர்களைக்குறித்துத் தான்தான் செய்த பாவங்களுக்காக உத்தரிக்கவேணுமென்கிறதினாலே கடின தவசுபண்ணிக்கொண்டிருந்தானும். இதன்றியே விஷ்டுணுவெடுத்த பரசுராமன் அவதாரத்திலே கோவைக்கன்னனூர் துவக்கிக் கன்னியாகுமரிமட்டாக இப்போது வணங்குகிற நூற்றெட்டுவகை தேவர்களுக்கும் நூற்றெட்டுக்கோவில் கட்டிவைத்தானென்றும் விஷ்டுணுவை வேறே அநேகந்தேவர்கள் நமஸ்கரித்தார்களென்றும் விஷ்டுணு அவதாரக்கதையிலே சொல்லியிருக்கிறது.

இதுவெல்லாம் இப்படியிருக்க பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் முதலான பேர்கள் வெவ்வேறே தேவர்களை வணங்கிறதினாலே அவர்கள் தேவர்களல்லவென்று பிரசித்தமானபடியினாலே பராபரவஸ்துவுக்குமாத்திரம் நியாய நீதியின்படியே செய்யத்தக்க ஆராதனை தேவனல்லாத வஸ்துகளுக்குப் பண்ணினதினாலே அவர்களிடத்திலே பரிச்சேதமாய் நீதியில்லையென்றும் பிரதான காரியத்திலே நீதியின்கிரமத்தைத்தப்பி மகா அநியாயக்காரராயிருக்கிறார்களென்றும் பிரசித்தமாகும்.

இதுக்கப்பால் அறியவேண்டியதாவது : கிரமத்தோடேகூடின நீதியானது கடவுளுக்குச் செய்யத்தக்க காரியங்களைக் கட்டளையிடுகிறாப்போலே மனுஷருக்குச் செய்யத்தக்க காரியங்களையும் நியாயத்தின்படியே கற்பித்தருளுகிறது. ஆனபடியினாலே இப்படிப்பட்ட நீதிவிஷயத்திலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரனிடத்திலே அநேகங் குறைச்சலும் அநியாயங்களும் உண்டாயிருக்கிறதென்று ஒப்புவித்

தால் அவர்களுக்குப் பரிச்சேதமாய் நீதியில்லையென்றும் மகா அநியாயக் காரராயிருக்கிறார்களென்றும் சொல்லவேண்டியிருக்கும்.

அதெப்படியென்றால் விஷ்ணு எடுத்த இராம அவதாரத்திலே இராவணன், கும்பகரணன், முதலான இராக்ஷதரெல்லாரையுங் கொன்று போட்டதுமல்லாமல் சீதாதேவியை அழைப்பித்து அவள் பேரிலே சந்தேகமாயிருந்ததினாலே சகலமான தேவர்களுக்கு முன்பாக ஒரு குழி வெட்டி அதில் அகில், சந்தனக்கட்டை முதலானதுகளைப் போட்டு நெய்யும் எண்ணெயும் வார்த்து சவ்வாது கஸ்தூரி போட்டு இது முதலான சடங்குகளைப்பண்ணி சீதை அந்தக்குழியை ஏழுவிசை சுற்றினதற்குப் பிற்பாடு சத்தியவார்த்தைகளைச் சொல்லி நெருப்பிலே புஷ்பங்களைப்பரப்பி அதின்மேலே விழுந்தாளாம்.

இப்படிப்பட்ட நெருப்பினுடைய உக்கிரத்தைத் தேவர்களும், ரிஷிகளும் பொறுக்கமாட்டாமல சீதை அதிலே நீறாய்ப்போனாளென்று விசாரிக்கும் போது விக்கினமில்லாமல் புறப்பட்டு இராமன் இவள் பேரிலே குற்றமில்லையென்று கண்டு சந்தோஷப்பட்டு எல்லாருக்குமபிக்ஷைகொடுத்து அயோத்தியாபட்டணத்துக்குக் கூட்டிக்கொண்டு போனான்.

அங்கே இராச்சியபாரம் பண்ணும்போது தலையாரிகளை நகர் சோதினைக்கனுப்பி பட்டணத்திலே நடந்த செய்திகளெல்லாம் சொல்லச் சொன்னதினாலே இந்தத் தலையாரிகளுக்குள் ஒருத்தன் சொன்னதாவது: சுவாமி இராமச்சென்திரா, இந்தவுலகத்தார் சில தூஷணங்களை உம்முடையபேரிலே சொல்லுகிறதை இந்த இராத்திரியிலே கேட்டேன்.

அதேதென்றால் ஒருநாள் வண்ணானுடைய ஸ்திரி புருஷனோடே சண்டை பிடித்து வீட்டைவிட்டு புறப்பட்டு தன் தகப்பன் வீட்டிலே போயிருந்து கொண்டு ஏழு, எட்டு நாளைக்குப் பிற்பாடு அவளுடைய தகப்பன் அவளைக் கோபித்துக்கொண்டு அநேகம் உறவின்முறையாரை அழைப்பித்து மகளைப் புருஷன் வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போனான். போனவுடனே வண்ணான் எல்லாரையும் பார்த்துச் சொன்னதாவது: சகலமான பந்து சனங்களும் நம்முடைய வார்த்தையைப் பராக்கில்லாமல் கேளுங்கள்.

விவேகமில்லாத இராக்ஷதருடைய வீட்டிலே வெகுநாள் சிறையாயிருந்த சீதையை ஆளுகிற இராமச்செந்திரனோ? நாமிப்படிக்கொத்த வார்த்தைகளை நம்மோடே சொல்ல வேண்டாமென்று பந்து சனங்களோடே சொன்னதினாலே பந்து சனங்களெல்லாம் பிரத்தியுத்தாரஞ் சொல்லாமல் சும்மா போனார்களென்று சொன்னான்.

இந்த வார்த்தையை இராமச்செந்திரன் கேட்டு மகாச்சிந்தாக்கிராந்தனாயிருந்து துக்கசமுத்திரத்திலே அமிழ்ந்தி நீசனான வண்ணான் அநியாயமாய் தூஷணித்த வார்த்தைகளின் நிமித்தமாக எப்படியாகிலும் சீதையைக் கொன்று போடத் துணிந்தானென்று குசலவர்களுடைய கதையிலே அஞ்சாம் அத்தியாயத்திலே சுமுத்திரையாகச் சொல்லியிருக்கிறது.

வேறே விதமாக இந்தக்கதையை உலகத்தார் சொல்லுகிறார்கள். அதெப்படியென்றால் ஒருநாள் இராமன் வேட்டைக்குப்போகிற போது, அரண்மனையிலிருக்கிற சீதையினுடைய மாமியார் மூன்று பேரும் அவள் கிட்டப்போய்க் கட்டாயத்தினாலே இராவணனுடைய பத்துத்தலையும் இருபதுகையும் எழுதச் சொல்லி மன்றாடினதினாலே அவள் கட்டாயமாகக் கீறினாளாம். இந்தச்செய்தியை அறிந்த இராமன் அந்தப்பலகையைக் காலாலே மிதித்து முறித்து இலட்சுமணனை அழைப்பித்துச் சீதையைக் கூட்டிப்போய் கொன்றுபோடக் கட்டளையிட்டானாம்.

அப்போது இலட்சுமணன் பரிச்சேதமாய்ச் சீதைபேரிலே குற்றமில்லையென்று சொல்லுகிறதுந்தவிர எந்தப்பிரகாரத்துக்குச் சத்தியம் பண்ணவேணுமோ, அந்தப்பிரகாரம் நிர்ணயம் பண்ணுவாளென்று சொன்னதினாலே இராமன் சீதையைச் சத்தியங்கொள்ளும்படிக்கு நல்ல பாம்புகள் நிறைந்திருக்கிற குடத்திலே கையிடக் கற்பித்து மதயானை முன்னேயும் வைத்து இத்தனை சோதினையெல்லாம் பார்த்ததற்குப் பிற்பாடு சீதையின் பேரிலே குற்றமில்லையென்று கண்டாலும் தம்பி இலட்சுமணனைப்பார்த்து இவளைக் கூட்டிக்கொண்டுபோய்க் காட்டிலே கொன்றுபோடென்று கட்டளை இட்டானாம்.

அதுக்கு இலட்சுமணன் எத்தனை நியாயங்களைச்சொன்னாலும் சர்வ அநியாயமாயிருக்குமென்று கண்டாலும் கர்பிணியாயிருக்கிற

சிதையைக் கூட்டிப்போய் அவளைக்கொல்லாமல் ஒரு அரணையைக் கொன்று அதின் இரத்தத்தை அம்பிலே தடவிக்கொண்டு வந்து இராமனுக்கு காண்பித்தபோது இராமன் இது மனுஷருடைய இரத்தமல்ல நீ பாவத்துக்குப்பயப்படவேண்டாம் இந்தப்பாவம் என் மேலே விழட்டும் நீ திரும்பப்போய் அவளைக்கொன்று போட்டு வாவென்று அனுப்புகையில் இலட்சுமணன் போய்த் தன்னுடைய சிறு விரலை அறுத்து இரத்தத்தை அம்பிலே தடவி இராமனுக்கு காண்பிக்கையில் இராமன் மெய்யென்று நிச்சயம் பண்ணினனும்.

இதெல்லாம் இப்படியிருக்கையிலே இத்தனை அநியாயமான கொலை பாதகத்தைச் செய்யத்துணிந்திருக்கிறவன் எந்தெந்த அநியாயத்துக்கும் பயந்திருக்கப் போகிறதில்லையென்று நிச்சயிக்கக்கடவோம். குற்றமில்லாத தன்னுடைய பெண்சாதியைக் கொன்று போடுகிறவன் சகலமான காரியங்களையும் நியாய நீதியின்படியே நடத்துவானென்று சொல்லுகிறதார் ?

இதன்றியே இராவணனுடைய தம்பியாகிற விபூஷணன் தன்னுடைய அண்ணனைச் சட்டைபண்ணமல் அவனை விட்டு இராமனண்டைக்கு வந்து அவனை நமஸ்கரித்து இடைவிடாமல் அவனுக்கு ஊழியம் பண்ணி அவனுக்காகத் தன்னுடைய பிராணனைச் செலவழிக்க அநேகம்விசை யுத்தியோகமாயிருந்ததற்கு பிற்பாடு இராமன் அவனுக்கு வெகுமானம் பண்ணுகிற சமயத்திலே விபூஷணன் இராமனைப் பார்த்து சுவாமி யும்மை நான் என்றாலும் நினைத்திருக்கிறதற்கு ஒரு வரத்தைக் கட்டளை யிடவேணுமென்று மன்றாடுகிறேனென்றானும்.

அப்போது அநுமானிருந்து சுவாமி விபூஷணனுக்கு ஐசுவரியஞ் சம்பத்துகளைக் கட்டளையிட்டால் தேவரீரை மறந்திருப்பானல்லாமல் நினைக்கமாட்டன். ஆனல் நாள்தோறும் ஒரு நாழிகை தேசகாலம்வியாதியின் வருத்தத்தைக் கட்டளையிட்டால் அழுது தேவரீரை நினைப்பானென்று சொன்னனும். அநுமானுடைய புத்தி யிராமனுக்குப் பொருந்தியிருந்ததினலே விபூஷணனுக்கு ஒரு நாளிலே ஒரு நாளிகை வாதைப்படக் கட்டளையிட்டானும்.

இப்படிப்பட்ட அபத்தமான விசேஷத்தை பத்தும் பத்தாய் பராமரிஷித்தால் திரவிய வெகுமான செல்வம் வாழ்வு ஆரோக்கியம்

முதலான இலௌகிக நன்மைகளை மேலான நன்மைகளென்று அபே க்ஷிக்கிறவனுக்கு மகாப்பிரசாதம் போலே வியாதி நோவுகளைக் கட் டளை இடுகிறது வரமாயிராமல் பயங்கரமான ஆக்கினையா யிருக்கு மொழிய மற்றப்படியல்ல. ஆனபடியினாலே விஷ்டுணுவானவர் தனக்கு வெகு பயபத்தியோடே நெடுங்காலம் ஊழியம் பண்ணின வனுக்குக் கடினமான வியாதியையும் நிஷ்டூரமான வாதைகளையுந் தினந்தினங் கட்டளைஇடுகிறபோது மகா அநியாயக்காரனாயிருக்கி றானென்று பிரசித்தமாகும்.

அதேதென்றால தேவோக்கித்த வேதத்தை அறியாத உ லோகத்தார் நிற்பந்தத்தினிமித்தமாக வருகிற அதிசயமான நன்மை களைக்கண்டு பிடிக்கமாட்டாமல் இலௌகிக தின்மைகளை யெல்லாம் ஆக்கினை யென்று விசாரித்ததினாலே விஷ்டுணு விபூஷணனுக்கு அநி யாயத்தைப் பண்ணினானென்றும் நீதியின் கிரமத்தைத் தப்பிப்போ னானென்றும் அவசியமாய் விசுவாசிக்கவேண்டியது.

இதன்றியே இராமன் அநுமானைத் தனக்குக் குதிரையாக ஏறிக் கொண்டு சமுத்திரத்தின் கிட்டச் சேர்ந்தவுடனே அந்தச் சமுத்திர த்துக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் பண்ணினதுந் தவிரக் கடலி லேதானே போகிறதற்கு வழிவிடவேணுமென்று தண்ணீருக்குத் தேவனான வருணனையும் கங்கையையும் குறித்து மூன்றுநாள் தவசு பண்ணி வணங்கினானென்றும் அந்தந்தத் தேவர்கள் உலோகம் கெட் டுப்போகாத படிக்கு அவசரமான காரியங்களுக்குப் பிரயாசைப் ப ட்டதினாலே அப்போது வரமாட்டாதே போனார்களென்று இராம ன் மிகுந்த கோபத்தோடே அவர்களுக்கு ஆக்கினையிடத்தக்கதாக அ ம்பை எய்ததினாலே சமுத்திரமுழுதும் வத்திப் போச்சுதாம்.

இதெல்லாம் இப்படியிருக்கையிலே தண்ணீருக்குத்தேவனான வருணன் முதலான தேவர்களை இராமன் வணங்கி அவர்களைக்குறி த்துத் தவசு பண்ணினதற்குப் பிற்பாடு அவர்கள் பேரிலே கோப மாயிருக்கிறது சர்வ அநியாயம். பின்னையும வருணன் அவசரமா ன காரியத்தை அப்போது பண்ணினதினாலே உடனேதானே வ ராதிருந்தானென்கிற நியாயத்தைத் தேவர்கள் கேட்டு இராமனுக்கு நியாயமில்லை யென்று சொன்னார்களாம்.

இந்தப் பிரகாரமாக விஷ்டுணு எடுத்த கிஷ்ண அவதாரத் திலே பண்ணின அநியாயமான பாவதோஷங்களை இங்கே எழுத ம

ணதுண்டானால் வெகுவிஸ்தீரணமான பிரபந்தங்களை உண்டாக்க வேண்டியிருக்கும். ஆனபடியினாலே கிஷ்ணனுடைய திருட்டுகளையும் வண்டத்தனங்களையும் பெண்டு பிடித்ததையும் தாறுமாறான அநியாயங்களையும் எல்லாருமறிந்திருக்கிற படியினாலே இம்மாத்திரம் சொல்லிக் காட்டினது போதும்.

இந்தப்பிரகாரமாக ருத்திரன் தவசு பண்ணின ரிஷிகளுடைய ஸ்திரீகளோடே திரிந்ததையும் பிர்மாவின் தலையை வெட்டினதும் எண்ணிக்கைக்குள்ளடங்காத பொல்லாப்புகளைப் பண்ணினதும் பிர்மா தன் மகளோடே கூடினதையும் தேவேந்திரன் கவுதமனுடைய பெண்சாதிக்கு அநியாயமாய் மோசம் வருத்துவித்ததையும் அவனுடைய திராத மோகத்தையும் கபடுகளையும் வாயு முதலான தேவன் தன்னோடே கூடமாட்டோமென்ற கன்னிகளுக்கு அநியாயமாய்ச் சாபமிட்டதையும் இது முதலான தேவர்களுடைய அளவில்லாத அநியாயங்களைச் சகலசனங்களும் நன்றாய் அறிந்திருக்கிறதினாலே விஸ்தீரணமாய்ச் சொல்லுகிறதற்கு அவகாசமில்லை.

சகலமான தேவர்களும் இராக்ஷதரும் சாகாதபடிக்கு வரங்கொடுக்கிற அமிர்தத்தைப் பிறப்பிக்கத்தக்கதாக ஆலோசனைபண்ணி இப்படிப்பட்ட அமிர்தம் தேவர்களுக்கும் இராக்ஷதர்களுக்கும் சரியாய்ப் பிறிப்போமென்று எல்லாரும் பொருந்தினதற்குப் பிற்பாடு தங்கத்தினாலே உண்டாக்கின மகாமேறுபருவதத்தை மத்தாக சமுத்திரத்திலே போட்டு சேஷனைக்கயிறுகச்சுற்றி தேவர்களொருபக்கத்திலேயும் இராக்ஷதரொருபக்கத்திலேயும் சரியாய் நின்று அமிர்தத்தை மிகுந்த பிரையாசத்தோடே கடைந்ததற்குப் பிற்பாடு தேவர்களெல்லாரும் பொருந்தின அமிர்தத்தை மிகுந்த பிரையாசத்தோடே கடைந்த இராக்ஷதருக்குக் கொடுக்காமல் பிரையோசனமில்லாத பானத்தை வார்த்தார்கள். பின்னையும் இராகுவும், கேதுவும் தேவர்களுடைய அனியாயத்தைக்கண்டு தந்திரத்தின்மேலே அமிர்தத்தைக் கொஞ்சம் குடித்ததினாலே தலை வெட்டுண்டு போனார்களாம்.

சகலமான அநியாயங்களுக்குள்ளே பில்லிசூனியம் அநியாயத்தோடு கூடின தோஷமாயிருக்கிறதென்று எல்லாரும் சொல்லுகிறார்கள். அவ்வண்ணமே பில்லிசூனியத்தின் நிமித்தமாகக் கொலைபாதகங்கள், திருட்டுகள் முதலான எண்ணிக்கைக்குள்ளடங்காத பா

வதோஷங்கள் பிறக்கிறதென்று அனுபவசித்தியினாலே கண்டுபிடிக்கிறோம். இதெல்லாம் இப்படியிருக்கையிலே பில்லிசூனியத்துக்கு பிர்மா, விஷ்ணு, ருத்திரன் முதலான மும்மூர்த்திகளுக்கும் தாயாராகிற சத்தி அனுமான் குமாரன் முதலான தேவர்கள் உதவியாயிருக்கிறதினாலே முன் சொல்லப்பட்ட தேவர்களுக்குப் பில்லிசூனியக்காரன் பிரியமான பலி பண்ணுவானென்று பிரசித்தமாகும்.

ஆனதினால் இவர்களுக்கு நீதியினுடைய அடையாளம் சற்றாகிலும் இல்லாமலிருக்கிறதுந்தவிர இவர்களைப் போலே அநியாயக்காரர் இல்லையென்று நிச்சயமாகும். இவ்வண்ணமே நீதிபரராயிருக்கிற பராபரவஸ்துவானவர் துரோகிகளுடையபாரிசமாயிராமல் நல்லவர்களுக்கு ஒத்திக்கையாயிருப்பாரொழிய மற்றப்படியல்ல.

---

## பராபர வஸ்துவினுடைய அளவில்லாத தயை

---

### ௯௩-ம் சல்லாபம்.

---

குருசுவாமியும் அவருடைய சீஷர்களும் கோடைகாலத்திலே வெயில் கடினமாயிருக்கிறபடியினாலே சிங்காரத் தோப்பைக்கண்டு விநோதமான மரங்களுடைய நிழலிலே இளைப்பாறி அந்த அலங்காரமான விருக்ஷங்கள் கிட்டேயுண்டான பாறையினடியிலே அதிசயமான ஊற்று இடைவிடாமல் நிரளாய் அமிர்தமான தண்ணீர்ஊறப் பண்ணுகிறதைக் குருசுவாமியவர்கள் கண்டு சந்தோஷப்பட்டு அதின் பேரிலே தியானம் பண்ணுகிறப்போலே சற்று நேரம் மவுனமாயிருந்ததற்குப் பிற்பாடு தம்முடையசீஷர்களைப் பார்த்துத் திருவுளம் பற்றினதாவது: பட்சிகளுக்கும் மிருகங்களுக்கும் மச்சங்களுக்கும் மனுஷருக்கும் உதவியாக அகோராத்திரம் இடைவிடாமல் உருகின முத்துகளைப் போலே சலப்பிரளையத்தை ஊறுகிற இந்த ஊற்றை நாம் பார்க்கும்போது சகலமான வஸ்துக்களையும் எக்காலமும் இரட்சிக்கிற பராபரவஸ்துவினுடைய அளவறுக்கப்படாத கிருபாகடாட்சத்தை நம்பிக்கொண்டு கரைகாணாததயை யுள்ள கடவுள் பேரிலே கூடினமாத்திரம் தோத்திரம் பண்ணுகிறோம்.

அதேதெனென்றால் சர்வேசுரனிடத்தில் அளவில்லாதபலன் மட்டிலலாத சத்தியம் மட்டில்லாதவிமரிசை ஒப்பில்லாத ஞானம் அநந்தநீதி முதலான சகல நன்மை பிரகாசித்தாலும் பராபரவஸ்துவானவர் தம்முடைய மனோவாக்குக்கெட்டாத தயாபத்தைக் காண்பிக்கச் சித்தமாயிருக்கிறாரென்று தேவோக்கித்த வேதத்திலே சொல்லியிருக்கிறதுந்தவிர அநுபவசித்தியினாலேயும் கண்டுபிடிக்கிறோம். ஆனால் இப்படிப்பட்ட கடவுளானவர் புத்தியில்லாத வஸ்துக்களை உண்டாக்கிறதிலேயும் அதுகளுடைய அந்தஸ்துக்கடுத்தது வேண்டிய சகாயங்களைப் பண்ணுகிறதிலேயும் தம்முடைய கரைகாணாத கிருபைய்யைக் காண்பித்தாலும் புத்தியுள்ள மனுஷரை சிஷ்டிக்கிறதிலேயும் அவர்களுடைய ஆத்துமமும் சரீரமும் பிழைக்கிறதற்கு எண்ணிக்கைக்குள்ளடங்காத உபகாரசகாயங்களைப் பண்ணுகிறதிலேயும் தம்முடைய அதிசயமான கிருபாகடாட்சத்தை அதிகமாய்க் காண்பித்தாரென்று பிரத்தியட்சமான சத்தியமாகும்.

அவ்வண்ணமே, சந்திரன் சூரியன் முதலான கிரகங்களையும் நட்சத்திரங்களையும் பிரதிவி, அப்பு, தேயு, வாயு முதலான பூதியங்களையும் மச்சங்களையும் பட்சிகளையும் மிருகங்களையும் விருட்சங்களையும் பழங்களையும் புஷ்பங்களையும் சர்வலோகத்திலு முண்டான எல்லாவற்றையும் மனுஷருக்குதவியாகப் படைத்ததுந்தவிரப் பெரிய உலோகத்திலுண்டான அற்புதமான விசேஷங்களைச் சின்ன உலகமாகிற மனுஷருடைய சரீரத்திலே காண்பித்ததற்குட்பிறபாடு நரசிவனை எவ்வளவாகிலும் தம்முடைய சாயலாக இருக்கத்தக்கதாகச் சித்தமாயிருந்தார்.

இப்படிபபட்ட மட்டில்லாத கிருபாகடாட்சத்தினுடைய பெருமையை அதிகமாய்க் கண்டுபிடிக்கிறதற்கு அறியவேண்டியதாவது: பராபரவஸ்துவானவர் தானாயிருந்து சகலநனமைசுபாவமாயிருக்கிறபடியினாலே சகலமான பாக்கியங்களுண்டாயிருக்கிறதென்று அங்கீகரிக்கக்கடவதாகும். ஆனபடியினாலே சகல நன்மை சுபாவமாயிருக்கிற ஆண்டவர் மனுஷரையும மற்றுமுண்டான வஸ்துக்களையும் உண்டாக்கினதினாலே அவருக்குப் பிரயோசனமிருக்கமாட்டாது. ஆனதினாலே தம்முடைய முகிவில்லாத கிருபாகடாட்சத்தை விசேஷமாய் விளங்கத்தக்கதாக உத்திபோகமாயிருந்தாரென்று சந்தேகமில்லை.

ஆனால் நம்மாலே பண்ணப்பட்ட பிரசங்கத்தின் நிமித்தமாக
ப் பராபரவஸ்துவினுடைய அளவில்லாத கிருபாகடாட்சத்தின் பே
ரிலே முடிவில்லாத காலந்தோத்திரம் பண்ணுகிறதற்கு நியாயமுண்
டாயிருந்தாலும் இப்போது நாம் வெளிப்படுத்தப்போகிற தயையி
னுடைய அடையாளம் நம்மாலே சொல்லப்பட்ட கிருபையினுடை
ய இலட்சணங்கள் மிகவும் அதிசயித்திருக்கிறதென்று சத்தியமா
கும்.

அவ்வண்ணமே பராபரவஸ்துவானவர் மனுஷரையநந்த கிரு
பையினாலே உண்டாக்கினதுந்தவிர இப்படிப்பட்ட மனுஷன் மட்
டில்லாத பிரையோசனத்தைக் கொண்டிருக்கிற அவதியாகிற மோ
க்ஷபாக்கியத்தை அநுபவிக்கத்தக்கதாக சித்தமாயிருக்கிறார். ஆ
னபடியினாலே மனுஷர் தங்களையுண்டாக்கின பராபரவஸ்துவை அ
றிந்து அவருடைய சித்தத்தின்படியே நடந்து இந்தப் பூலோகத்தி
லே திரிந்ததற்குப் பிற்பாடு சர்வேசுரனைப் பிரத்தியட்சமாய்த் தரி
சித்து சகலமான ஆசைகளைச் சாங்கோபாங்கமாகப் பூரிக்கிற மனோ
வாக்குக்கெட்டாத பரமானந்தத்தை அநுபவிப்பார்கள்.

இந்த முடிவில்லாத கிருபையினுடைய அடையாளத்தையும்
மனுஷர் நரகத்திலே விழாதபடிக்குக் கரைகாணாத தயாபத்தைக்
கொண்டிருக்கிற கடவுளானவர் பண்ணின திவ்வியமான உபாயங்
களையும் இனிமேல் விஸ்தீரணமாய் உங்களுக்குச் சொல்லிக்காட்டு
வோம். இப்படிப்பட்ட பிரசங்கத்தைக் கேட்டவர்கள் சந்தோஷப்
பட்டு தங்களை இடைவிடாமல் இரட்சிக்கிற பராபரவஸ்துவின்
பேரிலே நன்றியறிந்த மனதோடே தோத்திரம் பண்ணினார்கள்.

ஆனால் அவர்களுக்குள் ஒருத்தன் குருசுவாமியைப்பார்த்து
விண்ணப்பம் பண்ணினதாவது: பராபரவஸ்துவானவர் இத்தனை த
யையுள்ளவராயிருந்தால் எப்படி ஆக்கினை யிடுவாரென்று சொன்
னதற்கு குருசுவாமியாரவர்கள் அருளிச்செய்ததாவது: தப்பில்லாத
கிரமத்தோடே எல்லாத்தையும் நடத்திக்கொண்டு வருகிற கடவு
ளானவர் தம்முடைய அளவில்லாத நீதி நிமித்தமாக துஷ்டநிக்கிர
கம் பண்ணாதிருந்தால் சகல நன்மை சுபாவமாயிருக்கமாட்டார். அ
வ்வண்ணமே பாவமானது அநியாயமாயும் துரோகமாயும் யிருக்கி
றதினாலே இப்படிப்பட்ட பாவதோஷத்தைக் கட்டிக்கொண்ட பா
விகளுக்கு ஆக்கினையிடாதிருந்தால் அக்கிரமமாயிருக்கும்.

ஆனால் இந்த விஷயத்திலே அறியவேண்டியதாவது: பாவிகளை தயாபரரான கர்த்தர் அநேகம் விசை பொறுத்துக் கொண்டு அவர்களுடைய மனது திரும்பத்தக்கதாக எண்ணிக்கைக்குள்ளடங்காத உபாயங்களைப் பண்ணி இப்படிப்பட்ட துரோகிகளுக்குக் கடைசியிலே தீர்வையிடும் போதுக் கட்டாயமாய் ஆக்கினையிடுகிறதுந் தவிர ஆக்கினைகளில் தானே தம்முடைய தயையைக்காண்பிக்கிறார். அவ்வண்ணமே பாவிகள் அநுபவிக்கிற வாதைகள் கடினமாயிருந்தாலும் அவர்கள் கட்டிக்கொண்ட பாவதோஷங்களுக்கு எப்போதும் கட்டாயமாய் ஆக்கினையிடுகிறதென்று ஞானகிரந்தகர்த்தாக்கள் எழுதிவைத்தார்கள். ஆனால் பராபரவஸ்துவானவர் தம்முடைய தயாபத்தை விளங்கப்பண்ணும்போது சுபாவமாய் அதைக் காண்பிக்கிறாரென்பதற்குச் சந்தேகமில்லை. இந்தச் சத்தியத்தை ஓர் உவமையினாலே வெளிப்படுத்துவோம்.

அதெப்படியென்றால் பிரகாசத்துக்கும் நிழலுக்கும் சூரியனானது காரணமாயிருந்தாலும் இப்படிப்பட்ட குணங்கள் காண்பிக்கிற வகையிலே மிகுந்த வித்தியாச முண்டாயிருக்கிறது. அவ்வண்ணமே பிரகாசம் சூரியனிடத்தினின்று புறப்படுகிறது, நிழலோவென்றால் கட்டாயமாய்த் தோன்றுகிறது. அதேதென்றால் கண்டிப்புள்ள பிரமாணத்தோடிருக்கிற பொருள்கள் சூரியன் கதிர்களுக்கு விக்கினமாயிருந்து எதிராக நின்றதினாலே பிரகாசத்தை அப்பாலே போகவிடக்கமாட்டாமல் கட்டாயமாய் நிழல் காண்பிக்கிறது. அத்தன்மைபோலே பராபரவஸ்துவானவர் தம்முடைய அளவறுக்கப்படாத கிருபாகடாட்சத்தைப் பாவிகளுக்கு முதலாய் சுபாவமாய்க் காண்பித்ததற்கு பிற்பாடு இப்படிப்பட்ட முகிவில்லாத தயாபத்தைத் தள்ளுகிற பாவிகளுக்கு அந்த நீதியின் நிமித்தமாக ஆக்கினையிடுவார்.

ஆனபடியினாலே பெற்றதாயார் தன்னுடைய பிள்ளையின் பேரிலே பக்ஷமாயிருக்கிறதைப் பார்க்கவும் இராசாவானவன் தனக்குச் சனுவாயிருக்கிறவனை இரட்சிக்கத்தக்கதாக ஆசையாயிருக்கிறதைப் பார்க்கவும் கரைகாணாத கருணையைக் கொண்டிருக்கிற பராபரவஸ்துவானவர் இப்படிப்பட்ட தயாபத்தைக்காண்பிக்கத்தக்கதாகச் சுபாவமாய்மட்டில்லாதத்யையினுடையஅடையாளங்காண்பிக்கிறது.

ஆனால் உலோகத்தாருடைய தேவர்களிடத்திலே இப்படிப்பட்ட அடையாளம் காணப்படாதிருக்கிறதுந்தவிர மகா நிஷ்டூரக்காரராயிருக்கிறதினாலே அவர்களுக்குத் தேவத்துவமில்லையென்று பிரத்தியட்சமாய் ஒப்புவிக்கலாம். அதெப்படியென்றால் விஷ்டுணு எடுத்த நரசிங்க அவதாரத்திலே இரணியன்மேலே விழுந்து அவனுடைய வயிற்றைக் கிழித்துப்போட்டுக் குடலைப்பிடுங்கிக் கழுத்திலே மாலையாகப் போட்டு அவனுடைய இரத்தமெல்லாம் குடித்ததினாலே வெறிகொண்டவனாயிருந்து பயித்தியகாரனைப் போலே நெடுங்காலம் திரிந்தானென்று சொல்லுகிறார்கள்.

இதெல்லாமிப்படி யிருக்கச்செய்தே, பரிபாலகருமாய், துஷ்ட நிக்கிரகம் பண்ணுகிறவருமாயிருக்கிற கடவுளானவர் அனேக பாவதோஷங்களைக் கட்டிக்கொண்ட பாவிகளுக்குப் பயங்கரமான ஆக்கினையிட்டாலும் இந்த உலகத்திலே அகோரமான சிங்கத்தைப் போலே வந்து நிஷ்டூரமாய் மனுஷருடைய இரத்தமெல்லாம் குடித்துப்போட்டு கடூரமார்க்கத்தினிமித்தமாக வெறிகொண்டவனாய்த் திரிகிறானென்கிறது பராபரனுடைய மட்டில்லாத கிருபாகடாட்சத்துக்கு ஒவ்வாதிருக்கிறதுந்தவிரப் புத்திமானானவன் முதலாய் இப்படிச் செய்யமாட்டான்.

இப்படிப்பட்ட விஷ்டுணுவானவன் தானே மேற்சொல்லப்பட்ட நரசிங்கஅவதாரத்திலே குடித்த இரத்தத்தினிமித்தமாக வந்த வெறியையும் மதிப்பிரமங்கிஷத்தையும் ருத்திரன் நீக்கினதினாலே சிவனுக்கு புஷ்பங்களை அர்ச்சிக்கத்தக்கதாக ஆசையாயிருந்து புஷ்பங்களிராததினாலே சிவனுக்கு புஷ்பங்களை வைப்பதற்குப் பதிலாகத் தன்னுடைய கண்ணைப்பிடுங்கிச் சிவனுடைய பாதத்திலே வைத்து அர்ச்சனை பண்ணினனென்று நரசிங்கக் கதையிலே சொல்லியிருக்கிறது. இந்த விசேஷமான சரித்திரத்தைப் பார்க்கும்போது விஷ்டுணு தன்னுடைய கண்ணைப்பிடுங்கினதினாலே தன்னுடைய சுபாவமான நிஷ்டூரத்வைதக் காண்பிக்கிறதுந் தவிர இப்படிப்பட்ட பலி ருத்திரனுக்குப் பிரியமாயிருந்ததினாலே அவனுடைய கடூரமான குணத்தைப் பிரசித்தமாய் ஒப்புவிக்கிறது.

இதன்றியே ருத்திரன் தன்னோடே கூடப்பிறந்தவனான பிர்மாவினுடைய தலையை நிகத்தினாலே கிள்ளினதுந் தவிர பிரேதங்களு

டைய கபாலத்தைக் கையிலே ஏந்திக்கொண்டு சுடுகாட்டிலே திரி
ந்தானென்றும், எலும்புகளைக் கோர்த்து மாலையாகக் கழுத்திலே
போட்டுக்கொண்டதினாலேயும், அக்கினிக் கண்களைக் கொண்டிருந்
ததினாலேயும், அந்த நிஷ்டூரந் தனக்குச் சுபாவமாயிருக்கிறதென்
கிறதற்குச் சந்தேகமில்லை.

இந்தப்பிரகாரமாகச் சிறுத்தொண்டனானவன் ருத்திரன்பேரி
லே பத்தியாயிருந்து அவனைக்குறித்து அநேக வருஷகாலந் தவசு
பண்ணினதற்குப் பிற்பாடு ருத்திரனானவன் இந்தனை பயபத்தியா
ய்த் தன்னைச் சேவித்தவனுக்குச் சம்பாவனை கொடுக்க மனதாயி
ருந்ததினாலே அவன் கிட்டப்போய் பசியைப் பொறுக்கமாட்டே
னென்று சொல்லி உன் குமாரனைக்கொன்று கறியாகச் சமைத்துப்
பரிமாறினால்தான எனக்கு வெகு பிரியமாயிருக்குமென்று சொன்ன
தினாலே சிறுத்தொண்டன் குமாரனைக் கொன்று அவனுடைய கழு
த்தை அறுத்து பல பல துண்டாக்கி ஈசுரனுக்கு பரிசாரம் பண்ணி
னனென்றும் மகா ருசியோடே இந்தக் கறிகளை ஈசுரன் தின்றானெ
ன்றும் எல்லாரும் பாடுகிறார்கள்.

இந்தப்பிரகாரமாக விஷ்டுணு இராம அவதாரத்திலே குற்ற
மில்லாத தன்னுடைய பெண்சாதியாகிய சீதாதேவியைக் காட்டி
லே கொண்டுபோய்க் கொல்லத்தக்கதாகக் கட்டளையிடும்போது இ
லட்சுமணன் சகலமான தேவர்களும் ரிஷிகளும் பார்த்துக்கொண்டி
ருக்க சீதைபேரிலே தோஷமில்லையென்று நெருப்பின் பரிட்சையி
னாலே ஒப்புவித்ததற்குப் பிற்பாடு இவளை வெட்டுகிறது மகாத்தோ
ஷமாயிருக்கிறதுந் தவிர அனியாயமாய்க் கர்ப்பிணியாயிருக்கிற உம்
முடைய பெண்சாதியைக் கொன்றுபோட்டதினாலே, நிஷ்டூரனெ
ன்கிற பேர் உமக்குச் செல்லுமொழிய மற்றப்படியல்ல, இதுமுத
லான பல நியாயங்களை இலட்சுமணன் சொன்னாலும் இராமன் எப்
படியானாலுந் தன்னுடைய பெண்சாதியை வெட்டிப்போடச் சொ
ல்லி அவளுடைய இரத்தத்தைக் கொண்டுவந்து தனக்குக் காட்ட
ச்சொல்லி கட்டளையிட்டான்.

இதன்றியே இராமன் தனக்குப் பொல்லாப்புச்செய்த வாலி
யைச் சங்கரித்ததுமல்லாமல் தனக்கு மிகுந்த சுறுசுறுப்போடே
ஊழியம் பண்ணின விபூஷணனுக்குப் பட்சத்தினடையாளமாகத்
தினமொரு நாழிகைக்குள்ளே நிஷ்டூரமுள்ள வாதை அனுபவிக்க

க் கட்டளையிட்டான். இதல்லாமல் பில்லிசூனியத்தினாலே வருகிற எண்ணிக்கைக்குள் அடங்காத நிஷ்டூரங்கள் கொலைபாதகங்கள் இரத்தப் பலிகள் இந்தச் சீர்மையிலே வணங்கப்படுகிற தேவர்களுக்குப் பிரியமாயிருக்கிறதினாலே இப்படிப்பட்ட தேவர்களிடத்திலே சற்றாகிலுந் தயையின் அடையாளங் காணபியாதிருக்கிறதுந் தவிர முழு நிஷ்டூரமாயிருந்தார்களென்றுந் துஷ்டதனம் அவர்களிடத்தில் சுவாபமாய் இருக்கிறதென்றும் பிரசித்தமாய்க் காணலாம்.

அவ்வண்ணமே பழிவாங்க ஆசையாயிருக்கிறவர்களும், மனுஷரைக் கொன்றுபோடத்தக்கதாக அபேட்சிக்கிறவர்களும் இந்தச் சீர்[illegible] ஆராதிக்கப்பட்ட தேவர்களைப்பார்த்து நிஷ்டூரமான பலிகளினாலே தங்களுக்குத் தேவர்கள் பிரசன்னராகிறதுக்கு முன்சொல்லப்பட்ட மகாத் துரோகிகள் கர்ப்பிணிஸ்திரிகளை வெட்டிக் குழந்தைகளுடைய கழுத்தை அறுத்து அவர்களுடைய இரத்தத்தினாலே நனைந்திருக்கிற நிலத்தை மிதித்து இது முதலான நிஷ்டூரமுள்ள சடங்குகளைப் பண்ணிக்கொண்டு வருகிறார்களென்று அநுபவசித்தியினாலே கண்டுபிடிக்கிறோம்.

ஆனபடியினாலே மிகவும் அருவருக்கத்தக்க இப்படிப்பட்ட கடோரமான பூசைகள் ருத்திரன் விநாயகன் முதலான தேவர்களுக்குப் பிரியமானதினாலே பில்லிசூனியக்காரரும் துரோகிகளும் அபேஷிக்கிற பாவதோஷங்கள் மேற்சொல்லப்பட்ட தேவர்களுடைய ஒத்தாசையினால் பலிக்குமென்கிறதினாலே அவசியமாய் அவர்கள் மகா துஷ்டருமாய்க் கொடூரருமாயிருக்கிறார்களென்று நிச்சயிக்கக்கடவோம். இந்தப்பிரகாரமாக அந்தந்தத் தேவர்களுக்கு அந்தந்தச் சாதியிலே பிறந்திருக்கிறவர்களைச் சங்கரிக்கிறது மகாப் பிரியமாயிருக்கிறதென்று சம்மதிக்கிறார்களே. மதிகெட்ட பாவிகள் முன் சொல்லப்பட்ட தேவர்களுக்குச் சங்கை வருத்திவிக்கத்தக்கதாக தங்களைத் தாங்கள் தானே கொன்றுபோட்டு கெங்கை, காவேரி முதலான ஆறுகள் ஓடுகிற ஸ்தலத்திலே உண்டான தண்ணீரிலே விழுந்தும் நெருப்பிலே பாய்ந்தும் தங்களை வெட்டியும் இதுமுதலான நிஷ்டூரமான பாவதோஷங்களைக் கட்டிக்கொள்ளுகிறார்களே.

ஆனபடியினாலே இத்தனை கடோரமான சடங்குகள் இந்தத் தேவர்களுக்கு ஒத்து வருகிறதினாலே அவர்களுக்குக் கிருபாகடா

ட்சமில்லாமல் அதிகமான துஷ்டத்தன முண்டென்று சொல்லவேண்டியிருக்கிறது. இதன்றியே இராசாக்கள் பிரபுக்கள் முதலான பெரியவர்களுக்கு பிள்ளைகள் ஆகாதநேரத்திலே பிறந்தால் இப்படிப்பட்ட நட்சத்திரங்களுடைய விஷயத்தைப் போக்குகிறதற்கு அந்தந்தத் தேவர்களைப்பார்த்து அவர்களுக்குப் பிரியமாகக் குற்றமில்லாத குடியானவர்களுடைய வீடுகளையும் அதிலே உண்டான எல்லாவற்றையும் சுட்டுப்போட்டு அநேக கிராமங்களை முழுதும் சாம்பலாக்கி நிஷ்டூரமான சடங்குகளைப் பண்ணுகிறார்கள்.

பாவ தோஷங்களுடனே கூடின இந்தக் க[illegible]ரமான ஆசாரங்கள் அந்தந்தத் தேவர்களுக்குப் பொருந்தியிருக்கிற[illegible]க்கும்போது அவசியமாய்த் தயையுள்ளவர்களாயிராமல் முழுதும் துஷ்டர்களாயிருக்கிறார்களென்று அங்கிகரிக்கவேணும். ஆனால் ருத்திரன் மகா கிருபை யுள்ளவனாயிருக்கிறானென்று ஒப்புவிக்கிறதற்குத் தாயில்லாத பன்றிக்குட்டிகளைக் கண்டு அதுகள் சாகாதபடிக்குத் தானானே பன்றியாய் வந்து குட்டிகளுக்கு முலை கொடுத்தா னென்று சொல்லுகிறார்கள்.

இப்படிப்பட்ட அபத்தமான கதையை விரித்தவர்கள் ருத்திரனைப் பரியாசம் பண்ணத்தக்கதாக உத்தியோகமாயிருந்தார்களென்று காண்பிக்கிறது. நீங்களோ வென்றால் இந்த அபத்தமான விசேஷங்களை நினையாமல் உங்களை இரட்சிக்கத்தக்கதாகப் பரிபூரணசித்தமாயிருக்கிற பராபரவஸ்துவைப் பார்த்துச் செபத் தியானத்தினாலே சேவிக்கப் போங்களென்று குருசுவாமியவர்கள் திருவுளம் பற்றினார்.

---

## பராபர வஸ்துவினுடைய மட்டில்லாத பாக்கியம்

---

### ௧௬-ம் சல்லாபம்.

---

குறித்த ஸ்தலத்திலே எல்லாரும் வந்ததற்குப்பிற்பாடு குருசுவாமி அவர்களைப் பார்த்து எந்த வஸ்துவின்பேரிலே மனுஷரெல்லாரும் பிரியமாய் இருப்பார்களென்று கேட்டதுக்கு அவனவன் பலபல காரியங்களைக் குறித்ததுக்குப் பிற்பாடு குருசுவாமி அவர்கள்

ருந்து ஆசையினுடைய வகையிலே மனுஷருக்குள்ளே அளவில்லா
த வேற்றுமை உண்டாயிருந்தாலும் எல்லாரும் பாக்கியத்தை அநு
பவிக்கத்தக்கதாக பரிபூரண அபேட்சையாய் இருக்கிறார்களென்று
பிரசித்தமாகும். ஆனபடியினாலே இப்படிப்பட்ட பாக்கியம் எதி
லே அடங்கி இருக்கிறதென்று அறியாததினாலே வெகுமான வாழ்வு,
திர்விய வாழ்வு இதுமுதலான அழிந்துபோகிற நன்மைகளை வியர்த்
தமாகத் தேடிக்கொண்டு வருகிறார்கள்.

அவ்வண்ணமே உண்டாக்கப்பட்ட வஸ்துக்கள் மட்டோ
டே இருக்கிறதி[illegible]லே மனுஷருடைய இருதயத்தின் மட்டில்லாத
ஆ[illegible]ரிக்கமாட்டாது. பராபர வஸ்துவானவர் மாத்திரம்
சகல நன்[illegible]பாவமாய் இருக்கிறதினாலே மனுஷருக்குத் தம்மை
பிரத்தியட்சமாய்[illegible]சிக்கப் பண்ணினால் இப்படிப்பட்ட தரிசன
மானது ஆசையென்னப்பட்ட யாவையும் பூரித்து மனோவாக்குக்
கெட்டாத பரமானந்தமாகிற மோட்சத்துக்குக் காரணமாய் இருக்கு
மென்கிறதுக்குச் சந்தேகமில்லை.

இதெல்லாம் இப்படி இருக்கையிலே பராபர வஸ்துவானவர்
தாமே தம்மைப் பிரத்தியட்சமாய்த் தரிசிக்கிறதிலேயும் தம்முடை
ய பேரிலே மட்டில்லாத பட்சமாய் இருக்கிறதினாலேயும் அநாதியு
மாய் நித்தியமுமாய் தம்மை அளவறுத்துக் கொண்டிருக்கிறதினா
லேயும் அவசியமாய் அற்பப் பொல்லாப்பின கலப்பில்லாமல் சக
ல நன்மையையுங் கொண்டிருக்கிற மோட்ச பாக்கியத்தை அநுபவி
க்கிறாரென்று அங்கீகரிக்கக்கடவோம். ஆனபடியினாலே கடவுளா
னவர் வேறே வஸ்துக்களுடைய உதவி இல்லாமல் தம்மிடத்திலே
மாத்திரம் அளவிலலாத பாக்கியத்தை அநுபவித்துக்கொண்டிருக்
கிறாரென்று சொல்லக்கடவோம்.

இதெல்லாம் இப்படி இருக்கையிலே பிர்மா, விஷ்ணு, ருத்தி
ரன், தேவேந்திரன் முதலானவர்கள் சுபாவமாய் அநுபவிக்கிற பா
க்கியத்தையல்லாமல் பிறத்தி வாழ்வுகளை மிகுந்த பிரயாசத்தோ
டே தேடிக்கொண்டு வந்ததினாலே ஆசை பூரிக்கிற பாக்கியங்களை அ
நுபவிக்காமல் தேவர்களாய் இரார்களென்பதற்குச் சந்தேகமில்லை. அ
தெப்படியென்றால் உலகத்தார் சொல்லுமாப்போல சகல பாக்கியங்
களையும் அநுபவிக்கத்தக்கதாக நியாயமுள்ள ஆத்துமமும் சாண் அ

வயவங்களைக் கொண்டிருக்கிற சரீரமும் அவசியமாய் வேண்டி இருக்
கிறதென்று ஸ்தாபித்ததுக்குப் பிற்பாடு இந்த பயித்தியத்தோடே
கூடின அநேகம் அபத்தங்களைச் சொல்லிக்கொண்டு வருகிறார்கள்.

அதெப்படியென்றால் பிர்மாவானவன் தன்னுடைய நாவிலே
எப்போதும் சரஸ்வதியை வைத்திருக்கிறானென்றும் விஷ்டுணு இல
ட்சுமியை மார்பிலே வைத்திருக்கிறானென்றும் ருத்திரன பார்வதி
யை தலையிலே சுமந்திருக்கிறானென்றும் பிரசித்தமாய் இருக்கிறது.
பின்னையும் இப்படிப்பட்ட தேவர்கள் தங்கள் பெண்டாட்டிகள் அல்
லாமல் பிறத்தியாருடைய ஸ்திரீகளை கட்டாயத்தி[illegible] பேரிலே பிடித்
து அவர்களோடே தாறுமாறாய்த் திரிந்தார்கள். இ[illegible]கார
மாக ருத்திரன் தவசு பண்ணுகிற ரிஷிகளுடைய ஸ்[illegible]யை பிறந்
த கோலமாய்த் தன்பிறகே திரியப் பண்ணினான்[illegible]

விஷ்டுணு கிருஷ்ண அவதாரத்திலே துர்க்கந்த மோகச் சேற்
றிலே விழுந்து எண்ணிக்கைக்குள் அடங்காத ஸ்திரீகளோடே வெ
ட்கமில்லாமல் அலைந்து முழு வண்டனாய் இருந்தான். விஷ்டுணுவு
ம் ருத்திரனும் சகலமான மனுஷராலேயும் அருவருக்கப்பட்ட மோ
கத்தின் மிகுதியினாலே தங்களுக்குள்ளே மைதுனம் பண்ணினார்க
ளாம். அவ்வண்ணமே மோகினி ரூபத்தோடே வந்த விஷ்டுணுவை
ருத்திரன் கண்டவுடனே பயித்தியகாரனைப்போலே சொல்லப்படா
த வெறியோடே விஷ்டுணுவைப் பின் தொடர்ந்து தன்னுடையபொல்
லாத இச்சைக்குச் சம்மதிக்க மன்றாடினானும்.

பிர்மாவோவெனில் வெட்கமில்லாமல் தன் மகளைக் காட்டிலே
கூட்டிப் போய் மான்கள் ரூபமாகப் புணர்ச்சி பண்ணினான்; இப்படி
ப்பட்ட துர்க்கந்த மோகத்தின் வியாபாரத்தைப் பண்ணுகிற தேவர்
கள் சுபாவமாய் சகலமான பாக்கியத்தையும் தங்களுக்குள்ளே கொ
ண்டிராமல் பிறத்தியிலே அசுத்தமான வாழ்வுகளைத் தேடினதினா
லே பாக்கிய வகையிலே மகா குறைச்சலுள்ளவர்கள் என்று பிரசி
த்தமாகும்.

அவ்வண்ணமே அருவருக்கப்படத்தக்க மைதுனத்தினுடைய
நிமித்தமாக சரீரத்தினுடைய விகாரம் உண்டாய் இருக்கிறதினாலே
நித்திய நன்மைகளை இடைவிடாமல் அநுபவித்துக்கொண்டு வருகி
ற பராபரவஸ்துவானவர் இந்த அழிந்துபோகிற வாழ்வுகளைத் தே

டமாட்டார். இதல்லாமல் உலோகத்தார் தானே தங்களுடைய துர்
க்கந்தத் தேவர்களுடைய மட்டில்லாத மோகத்தை வறுணிக்கும்போ
து அவர்களுடைய மனதுக்குப் பரிபூரண திர்ப்தி வருத்திவிக்க மா
ட்டாமலிருக்கிறதுந்தவிர நெருப்பில் எண்ணெயை வார்க்க வார்க்க
அதிகமாய் எரிகிறாப்போலேயும் உப்புத்தண்ணீர் குடிக்கக் குடிக்க
த்தாகம் அதிகமாய் வருத்திவிக்கிறாப்போலேயும் காமாதுரரான
தேவர்கள் அவலட்சணமான மோகத்தின் நிமித்தமாக மெய்யான
செல்வத்தை அநுபவியாமலும் மிகுந்த மோகத்துற்குணத்தினாலே
வாதிக்கப்படுவார்களொழிய மற்றப்படியல்ல.

[illegible]யன்றால் ருத்திரன் மன்மதபாணம் பிடித்தவனா
ய்ப் பார்வதி[illegible]டனே சரச சலலாபாதிக் கிரீடைகளிலே விடாமல்
அகோரமாய் ஆயிரம் வருஷம் மைதுனம் பண்ணினதினாலே பிர்மா
வும் மற்றுண்டான தேவர்களும் தன்னுடைய மோகத்தை நிறுத்தச்
சொன்னதுந்தவிர பார்வதி இதுக்காக மகாக் கோபத்தோடே பிர்
மாவையும் மற்றும் உண்டான தேவர்களையும் பார்த்துத் தன் புரு
ஷனை அழைப்பிக்கச் சொன்னதினாலே அவர்களுக்குப் புத்திர சந்
தானம் இல்லாமலிருக்கச் சாபம இட்டாளென்று இராமாயணத்தி
லே சொல்லி இருக்கிறது.

ஆனபடியினாலே அந்தந்தத் தேவர்கள் சுபாவமாய்ப் பரிபூரண
பாக்கியத்தை அநுபவியாமல் துர்க்கந்த மோகச் சேற்றிலே அமிழ்
ந்தித் தங்களுடைய பொல்லாத இச்சைகளைப் பூரிக்கப் பிரயாசப்பட்
டாலும் அவர்கள் கையினாலே பரிச்சேதம் ஆகாமல் போச்சுது.
இந்தப் பிரகாரமாக உலோகத்தார் தங்களுடைய புராண பிரபந்தங்
களிலே வறுணிக்கிற மோக்ஷத்தின் பலவகைகளை பத்தும் பத்தாய்
ஆராய்ந்து பார்த்தால் அங்கே வாசமாய் இருக்கிற மோட்சவாசிகள்
பரிபூரண ஆனந்தத்தை அடையாமல் இருக்கிறதுந்தவிர அங்கே
வணங்கப்படுகிற தேவர்கள் முதலாய் அநுபவிக்கிற சந்தோஷங்க
ள் வெகு குறைச்சலுள்ளதுகளாய் இருக்கிறதென்று திஷ்டாந்தமா
ய் ஒப்புவிக்கலாம்.

அவ்வண்ணமே அந்த மோட்ச ஸ்தலங்களில் பர ஸ்திரீகளும்
மோக வியாபாரங்களுமுண்டாய் இருக்கிறதினாலே முன் சொல்லப்
பட்ட நியாயங்களினாலே சகலமான பாக்கியமும் அங்கே கிடையா

தென்று நிச்சயிக்கக்கடவோம். அத்தறுவாயிலே உபதேசம் கேட்கிறவர்களுக்குள்ளே ஒருவன் விண்ணப்பம் பண்ணினதாவது: உலகத்தார் இதுக்குப் பிறத்தி உத்தாரம் சொல்லுகிறது என்னவென்றால் மனுஷர் இந்தப் பூலோகத்தில் திரியும்போது அழிந்து போகிற சரீரத்தைவிட்டுச் சொற்கத்துக்குப் போகிறதற்குமுன்னே திவ்வியமான சரீரங்களை எடுத்துக்கொண்டு அந்தந்த திவ்யமான சரீரங்களோடே சொற்கத்தினுடைய வாழ்வுகளை அநுபவிக்கிறார்கள்.

இந்த அபத்தமான விசேஷத்தைக் கேட்டு உபதேசியானவன் அந்தப் பிறத்தி உத்தாரத்தை இப்படி யாக்ஷேபித்தான் உலகத்தார் சொல்லுகிற விசேஷ முழுதும் பயித்தியமாய் இருக்கிறதென்று எளிதாயக் காணலாம். அவ்வண்ணமே சரீரமும் ஆத்துமமும் அந்தந்தத் தருமங்களைச் செய்ய வெகுவாய்ப் பிரயாசப்பட்டதுக்குப் பிற்பாடு புண்ணியங்களைப் பண்ணின சரீரங்களை விட்டு வேறே திவ்வியமான சரீரங்களோடே ஆத்துமம் கூடுகிறது மகா அநியாயமாய் இருக்கிறதுந் தவிர இப்படிப்பட்ட திவ்யமான சரீரம் இவ்வுலோக சரீரங்களைப் பார்க்க அழிந்து போகிறதுமாய் சிநிதமானதுமாய் இருக்கிறதென்று பிரத்தியட்சமாய் ஒப்பிவிப்போம்.

அதெப்படியென்றால் சொற்கத்திலேதானே இருக்கிற சகலமான தேவர்களுக்கும் மோக்ஷவாசிகளுக்கும் இராசாவான தேவேந்திரன் எண்ணிக்கையில் அடங்காத பரஸ்திரீகளோடே திரிந்தாலும் தவசு பண்ணுகிற கவுதமனுடைய பெண்சாதியாகிற அகிலின் அழகையும் சௌந்திரியத்தையும் கண்டு சொற்கத்திலே உண்டான மிகவும் ரூபலாவண்ணியத்தையும் மிகவும் அதிசயித்திருக்கிற பாத்தை, அரம்பை முதலான தேவதாசிகளைச் சட்டை பண்ணாமல் மகா துரோகத்தை நினைத்துக்கொண்டு உபாய தந்திரமெல்லாம் பண்ணினான். இதுக்காக எல்லாரும் அறிந்திருக்குமாப்போலே கறுவிலே முதலாய் நினைக்கப்படாத சாபத்தினாலே சாபிக்கப்பட்டானென்று எல்லாரும் அறிந்திருக்கிறதுந்தவிர இராமாயணத்திலே எழுதியிருக்கிறது.

வேறே சமயத்திலே மிகுந்த வடிவுள்ள சுரூபத்தைக் கொண்டிருக்கிற தமயந்தி என்கிறவளை தேவர்கள் எல்லாரும் கண்டு தனித் தனியே ஸ்தானுபதிகளை விட்டுக் கலியாணமாகிறதுக்குக் கேட்டார்கள். அதுக்குத் தமயந்தியோவென்றால் திவ்வியமான சரீரத்தை

க் கொண்டிருக்கிற தேவர்களைச் சட்டைபண்ணுமல் உலோகத்தி லே திரிகிற களன இராசாவோடே கலியாணம் பண்ணிஞள். இதை ப் பார்க்க ஆச்சரியமான கதையை உலகத்தார் சொல்லுகிருர்கள்.

பூர்வகாலத்திலே அநேகம் தரும ரிஷிக்ள் தவசு பண்ணுகிற போது அவர்களுக்குள்ளே மகா பெயர் போன காவலனென்கிற நாமத்தைக் கொண்டிருக்கிற தபோதனருடைய குமாரத்தியாகிற வேதமணி என்கிறவள் மிகுந்த அழகைக் கொண்டிருக்கிறதுந் தவிர அர்ச்சுணனுக்குத் தினம் தினம் புஷ்பங்களைச் சம்பாதித்துச் செபத் தியானம் முதலான தருமங்களைப் பண்ணிக்கொண்டு வருவாளாம்.

இந்தக் கன்னியாஸ்திரியினுடைய சவுந்திரியத்தைக் கண்ட சுதசினிஞம் சூரனும் சொற்கத்தில் உண்டான தேவர்களுக்குள்ளே பெரியவர்களாய் இருந்தாலும் விமானத்தின் மேலேறி ரிஷிகள் தவசு பண்ணுகிற ஸ்தலத்துக்குப் போய்ப் புஷ்பங்களைப் பறிக்கிறவே தமணியைக் கட்டாயத்தின் மேலே பிடிக்கப் பிரயாசப்படுகிற போது வேதமணி மகா சத்தத்தோடே கூப்பிட்டதிஞலே அநேகந் தபோதனராகிய காவலன் வந்து இந்த அநியாயத்தைக் கண்டு மகா கோபத்தோடே தேவர்களைப் பார்த்துச் சொன்னதாவது: நீங்கள் தேவர்களாய் இருந்தும் பசாசுக்கு அடுத்த காரியங்களைச் செய்ததிஞலே பசாசுகளாய்ப் போங்களென்று சாப மிட்டாஞம்.

## பராபர வஸ்துவினுடைய அளவில்லாத அர்ச்சிய சிஷ்டதனம்

## ௧௫-ம்-சல்லாபம்

நல்ல மத்தியானத்திலே சூரியன் உச்சிக்கு வந்து தலை மேலே செவ்வே இருந்ததிஞலே வெகு நேர்த்தியாகக் கட்டி இருந்த உப்பரிக்கையிலே நிழல் இல்லாதே போச்சுது. அத்தருவாயி லே ஞான உபதேசத்தைக் கேட்கத்தக்கதாக வந்தவர்களைப் பார்த் து ஒரு உபதேசியானவன் குரு இல்லாததிஞலே பிரசங்கம் பண் ணினதாவது: இந்த உப்பரிகை கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு எங்கே பார்த்தாலும் நிழலில்லாமல் எங்கும் பிரகாசிக்கப்பட்டதா ய் இருக்குமாப்போலே அளவில்லாத சகல நன்மை சுபாவமாய் இ ருக்கிற ஆண்டவர் பாவத்தினுடைய குறைச்சலாகிற நிழலில்லாம ல் மட்டில்லாத அர்ச்சியசிஷ்டதனமாகிற திவ்விய பிரகாசத்தினு ல் எங்கும் பிரகாசிக்கிருரென்பது தப்பில்லாத சத்தியமாகும்.

அவ்வண்ணமே பிரகாசத்தினுடைய யட்டில்லாத தனமாகிற தினாலே இருட்டுப் பிறக்கமாட்டாததுபோலே சாங்கோபாங்கமான அர்ச்சியசிஷ்ட தனத்தினுடைய அளவில்லாத தனமாகிறதினாலே பாவமானது பரஞ்சோதியாகிற கடவுளுடைய அளவில்லாத அர்ச்சியசிஷ்டதனத்திலே யிருக்கக் கூடாதென்பது பிரசித்தமான சத்தியமாகும். இப்படிப்பட்ட கரைகாணாத அர்ச்சியசிஷ்டதனத்தின் நிமித்தமாகப் பராபரவஸ்துவானவர் அற்பப்பாவத்தின் பேரிலே முதலாய் அருவருப்பாயிருக்கிறதினாலே, அநாதியுமாய் அளவில்லாததுமாய் சுபாவமானதுமாயிருக்கிற நிமித்தமாகப் பாவ தோஷங்களைக் கட்டிக்கொண்டவர்களுக்கு அகோரமான ஆக்கினைகளையும் வாதைகளையும் கட்டளையிடுகிறார்.

இதெல்லாம் இப்படி யிருக்கையிலே பிர்மா, விஷ்ணு முதலான பேர்கள் அனேகம் பாவதோஷங்களைக் கட்டிக்கொண்டிருக்க அவர்களுக்கு தேவதத்துவ முண்டென்று பயித்தியகாரன் முதலாய்ச் சொல்லப் பயந்திருப்பான். ஆனால் பிர்மா, விஷ்ணு, ருத்திரன் கட்டிக்கொண்ட பாவதோஷங்களை விஸ்திரணமாய்ச் சொல்லத் தக்கதாக மனதுண்டானால் அதுக்குமுந்தி குருசுவாமியவர்களும் உபதேசிகளும் போன பிரசங்கத்திலே சொன்னவர்த்தமானங்களைச் சொல்ல வேண்டியிருக்கும். ஆனாலே இப்படிப்பட்ட தேவர்களுடைய பாவங்களுக்குள்ளே சிலதுகளை மாத்திரம் சங்க்ஷேபமாகச் சொல்லிக்காட்டுவோம்.

அதெப்படியென்றால் பிர்மாவானவன் வெட்கமில்லாமல் காட்டுக்குப்போய் மகளோடே புணர்ச்சிபண்ணினதினாலே தலைவெட்டுண்டு போனானும். இந்தப்பிரகாரமாகப் பொய் சொன்னதினாலேயும் பொய்சொல்லப் புஷ்பத்தை அழைப்பித்ததினாலேயும் சபிக்கப்பட்டானும். விஷ்ணுவோவென்றால் இராமனாய்ப்பிறந்து தான்பண்ணின பிரமத்தி தோஷம் பரிகாரமாகும்படிக்கு அஸ்வமேதியாகம் பண்ணினான்

பின்னையும் தன் பெண்சாதிமேலே குற்றமில்லையென்று அறிந்தாலும் இலட்சுமணன், பரதன், சத்துருக்கன் இவனுக்குஉச்சிதமான புத்திகளைச் சொன்னாலும் இதெல்லாம் தள்ளிப்போட்டு இந்தப்பாவம் தன் மேலே பலிக்கட்டுமென்று சொன்னதுந்தவிர தான் பாவத்துக்குப் பயப்படாமலிருக்கிறதுமல்லாமல் தேவர்களும் பிராமண

ரும் பாவத்தைக்கொண்டார்களென்றும் ஆனபடியினாலே தா னும் குற்றமில்லாத கற்பணி ஸ்திரீயாகிற சீதையைக் கொன்று போட்டாலும் பாவமல்லவென்று சொன்னானென்று குசலவன் க தையில் அஞ்சாமத்தியாயத்திலே எழுதியிருக்கிறது. ஆனபடியி னாலே விஷ்டுணுவானவன் பாவ வகையிலே மனுஷரைப்பார்க்கக் கெடுதியாயிருந்தான்.

அவ்வண்ணமே மனுஷர் தேவர்களுடைய பாவதோஷங்களைப் பார்த்து இப்படிப்பட்ட பாவதோஷங்களைச் செய்யலாமென்று சொ ன்னாலும் ஒருபிரகாரம். ஆனால் விஷ்டுணுவானவன் மனுஷருடை ய பாவதோஷங்களைப் பார்த்து இப்படிப்பட்ட பாவதோஷங்களை நாமும் செய்யலாமென்று சொல்லும் போது இதுக்குச்சரியான பயித்தியமும் வண்டத்தனமும் இல்லையென்று அறிவீர்களாக.

இந்தப்பிரகாரமாக கிருஷ்ணன் விஷ்டுணு கிருஷ்ணனாகப் பி றந்து எல்லாரையும் பிடித்து அவர்க்குப்பண்ணி இடையர் வீட் டுக்குள்ளே புகுந்து பால், நெய், வெண்ணெய் அநேகம் விசை திருடி த்தின்று கற்பழியாத பெண்களைக் கற்பழித்ததினாலே கிருஷ்ணனு டைய தாயாராகிற வேசோத வென்கிறவள் அண்டையில் இடைய ர் வியர்த்தமாய் முறையிட்[illegible]குப் பிற்பாடு கிருஷ்ணனைப் பிடி த்து உரலோடே கட்டி [illegible]லே கடினமாயடித்தார்கள்.

இப்படியே கிருஷ்ணனானவன் பிரசித்தமான பாவதோஷங்க ளைக் கட்டிக்கொண்டாலும் இப்படிப்பட்ட பாவங்களைத் தான் செய் யத்தக்கதில்லையென்று வெட்கமில்லாமற் சொல்லுவானா? அதின் பிறகு பழிவாங்கத்தக்கதாக கிருஷ்ணனானவன் முன் சொல்லப்பட் ட இடையருடைய பெண்சாதிகள் மூன்றுறுபேர் பட்டணத்துக் குப்போய் பால் வித்துத் திரும்ப ஊருக்கு வருகிற சமயத்தி லே இப்படிப்பட்ட பல ஸ்திரீகளுக்கு வெட்கமில்லாமலும் இலச்சை இல்லாமலும் பண்ணின அவமானங்களல்லாமல் அவர்களோடே கட்டாயத்தின்மேலே சங்கம் பண்ணினானும். இப்படிப்பட்ட வ ண்டனுடைய துராசாரங்களையும் பாவங்களையும் இம்மாத்திரம் சொல்லிக் காட்டினது போதும்.

கடைசியிலே ருத்திரனானவன் தான் செய்த பாவங்களுக்கு உத்தரிக்க வேணுமென்கிறதினாலே கபாலத்தைக் கையிலே பிடித் துக் கொண்டு சாம்பலை மேலே பூசிக்கொண்டு தவசு பண்ணினு

னும். ஆனால் தவசு பண்ணுகிற சமயத்திலே தானே ரிஷிகளுடைய ஸ்திரீகளைப் பிறந்த கோலத்தோடே தன் பிறகே வரப்பண்ணினதினாலே பயங்கரமான சாபத்தினாலே சாபிக்கப்பட்டானும். பின்னையும் மோகினி வேஷத்தோடே வந்த விஷ்டுணுவோடே வெட்கமில்லாமல் புணர்ச்சி பண்ணினதுந்தவிர முழுவண்டனாயிருந்து பெற்ற தாயோடே கூடினானும்.

ஆனபடியினாலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் கனமான பாவங்களைக் கட்டிக்கொண்டதுமல்லாமல் அந்தப் பாவங்களினாலே சபிக்கப்பட்டு அயோக்கியமான ஆக்கினைகளை அநுபவித்துத் தாங்கள் கட்டிக்கொண்ட பாவ நிவாரணத்துக்கு அநேகம் உபாயங்களைப் பண்ணினார்கள். கடைசியிலே பிர்மா, விஷ்டுணு, ருத்திரன் பாவ வகையிலே யோசித்தாப்போலே மற்றுமுண்டான தேவர்களுடைய பாவதோஷங்களையும் யோசிக்கலாம். இப்படிப்பட்ட தேவர்கள் தாங்கள் பண்ணின பாவ விமோசனத்தைப் பண்ணத்தக்கதாக ஆசையாயிருந்து பகிர்தனங் கெங்கை யென்கிற ஆற்றைப் பூலோகத்திலே கூட்டிக்கொண்டு வரும்போது இந்த நதியினுடைய தீர்த்தத்திலே பாவப்பரிகாரத்துக்கு ஸ்நானம் பண்ணினார்களென்று இராமாயணத்திலே பதினாறும் சர்க்கத்திலே எழுதியிருக்கிறது.

இதெல்லாம் இப்படியிருக்கையிலே மகா மகா பாவதோஷங்களைக் கட்டிக்கொண்ட பேர்களை வணங்கலாமோ ? இப்படிப்பட்ட பாவங்களை விட்டுச் சகலமான பாவங்களின் பேரிலே பரிபூரண துவேஷமாயிருந்து அளவில்லாத அர்ச்சியசிஷ்டதனத்தையும் சகல நன்மைகளையும் கொண்டிருக்கிற பராபரவஸ்துவாகிற சர்வேசுரனுக்கு உத்தம ஆராதனை பண்ணலாமோவென்றும் பரிச்சேதம் பண்ணுங்களென்று உபதேசியானவன் சொன்னதற்குப் பிற்பாடு எல்லாரையும் குருசுவாமியவர்கள் பாதத்திலே கூட்டிப்போய் ஆசிர்வாதத்தையும் வாங்கப்பண்ணிப் போகச்சொன்னான்.

---

அக்கியான நிவாரணம்
முற்றிற்று.

சர்வேசுரனுக்கும் பரிசுத்த தேவதாயாருக்கும்
தோத்திரம் உண்டாகக்கடவது.

# ERRATA.

| PAGE. | LINE. | PRO. | CORRIGE. |
|---|---|---|---|
| 6 | 21 | நிக்கிறகம் | நிற்கிறகம் |
| 12 | 33 | முப்பது முக்கோடி | முப்பத்து முக்கோடி |
| 13 | 3 | குருசுவாமீ | குருசுவாமி |
| 20 | 9 | உலோகதுவம் | உலோகத்துவம் |
| 21 | 2 | பிரமாணம் | பிரமாணமும் |
| 25 | 20 | தரி[illegible]றது | திரிகிறதுக்கு |
| 29 | 8 | இ[illegible]தயத்துக்குளே | இருதயத்துக்குள்ளே |
| 30 | 26 | யோட்டகம் | யொட்டகம் |
| 31 | 2 | கொட்க | கேட்க |
| 33 | 24 | மகாப்பேர் | மகா பேர் |
| 36 | 25 | தொனிழங்க | தொனி முழங்க |
| 39 | 14 | நமஸ்காரம்பண்ணுகிறதற்கும | பண்ணுகிறதற்கு |
| 41 | 18 | இதன்பியே ருத்திரன் | இப்படியே ருத்திரன் |
| 44 | 12 | மனுஷவதாரம் | மனுஷாவதாரம் |
| 45 | 21 | மதிபிரங்கிஷம் | மதிபிரசங்கிஷம் |
| 52 | 7 | சூரியனுடைய கதிர் | சூரியனுடைய கதிரும் |
| 55 | 14 | பில்லிசூனியம் | சூனியம் |
| 60 | 4 | ஸலத்தை | ஸ்தலத்தை |
| 69 | 26 | கடைசிலே | கடைசியிலே |
| 83 | 27 | வாருணிக்க | வருணிக்க |
| 87 | 8 | பட்டப்பாவம் | பட்ட பாவம் |
| 93 | 24 | கேட்டக்ஷணத்திலே | கேட்ட க்ஷணத்திலே |
| 95 | 31 | மலைந்திருக்கிறான் | மறைந்திருக்கிறான் |
| 96 | 9 | இராக்ஷருடைய | இராக்ஷதருடைய |
| 100 | 17 | இதெல்லாம் | இதல்லாமல் |
| 103 | 2 | எத்தனையறியாதவன் | இத்தனையறியாதவன் |
| ,, | 3 | அப்படிப்பட்டவன் | எப்படிப்பட்டவன் |
| 105 | 22 | பிரப்பிக்க | பிரப்பிக்க |
| 116 | 15 | மருமகன் | மருமகன |
| 118 | 31 | இராமவதாரத்தில் | இராமாவதாரத்தில் |
| 135 | 11 | சல்லபாதி | சலபாதி |

